# உள்ளத்தில் நிறைந்த உத்தமர்கள்

**சௌந்தரா கைலாசம்**




நிலமங்கை நிலையம்

விக்னேஷ் ஃபிளாட்ஸ்

4, விவேகானந்தா தெரு, நிலமங்கை நகர்

ஆதம்பாக்கம், சென்னை–600 088

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the book | : | ULLATTHIL NIRAINTHA UTTHAMARGAL |
| Language | : | Tamil |
| Edition | : | First Edition – November 2000 |
| Author | : | SOUNDARA KAILASAM |
| Copy Right | : | Author |
| Paper used | : | 11·6 kg. WCPM Creamwove |
| Size of the book | : | 12·5 x 18·5 cms |
| Type point | : | 12 |
| No. of pages | : | 304 |
| No. of copies | : | 1200 |
| Publishers | : | NILAMANGAI NILAYAM<br>Vignesh Flats<br>4, Vivekananda Street<br>Nilamangai Nagar<br>Adambakkam, Chennai - 88<br>Phone : 2441614 |
| Printers | : | Sakthi Process<br>Chennai-81 |
| Binding | : | Section Stitching |
| Price | : | Rs.50/- |
| Subject | : | TAMIL POEMS |

# சிறப்புரை

**டாக்டர் பொற்கோ.**

துணைவேந்தர், சென்னைப் பல்கலைக்கழகம்

உள்ளத்தில் நிறைந்த உத்தமர்கள் என்ற தலைப்பில் கவியரசி அம்மையார் சௌந்தரா கைலாசம் அவர்கள் உருவாக்கி உள்ள கவிதை நூல் எல்லோரும் படித்து மகிழத்தக்க ஒரு இனிய நூல்.

கவியரசி அம்மையார் அவர்கள் தெய்வ நேய உணர்வும் மனித நேய உணர்வும் வாய்க்கப் பெற்றவர். எளிய நடையில் இனிய தமிழில் அழகிய கவிதைகளை உருவாக்கும் ஆற்றல் பெற்றவர். எழுத்தாலும், பேச்சாலும் அமைதியான முறையில் தமிழுலகுக்கு முன்பே அறிமுக மானவர். நல்லதை நினைப்பதன் மூலமும் நல்லோரைப் போற்றுவதன் மூலமும் வாழ்க்கை நலம் பெறுகின்றது. நல்லோரைப் போற்றும் போது அவர்களுடைய பேச்சும், செயலும், இயல்பும் உயிர்த்துடிப்போடு நம் மனத்தில் வெளிப்பட்டு வேண்டிய நேரத்தில் நமக்குக் கை கொடுக்கிறது.

உள்ளத்தில் நிறைந்த உத்தமர்களை இந்தக் கவியரசி அம்மையார் கவிதைக் கண்ணாடியின் மூலம் நம் கண்முன் கொண்டு வந்து நிறுத்தி நமக்கு உதவுவதோடு அந்தக் காட்சிகளுக்கும் நிலைபேறு வழங்கி உள்ளார்.

ஓசை உணர்ச்சியோடும் பொருள் உணர்ச்சியோடும் ஓதி மகிழத்தக்க செம்மையான கவிதைகள் இவை. ஓதி மகிழலாம், உணர்ந்து பயன்பெறலாம். தமிழ் நெஞ்சங்கள் கவியரசி அம்மையாருக்குப் பாராட்டும் ஊக்கமும் வழங்கி மேலும் பல நல்ல நூல்களை உருவாக்க அவருக்கு உதவ வேண்டும்.

'பொற்கோ'

**(பொன். கோதண்டராமன்)**

சென்னை.

7.3.2000

# சௌந்தரா கைலாசம் பற்றி
# திரு. பெரியசாமி தூரன் அவர்கள்

தம்மால் முடிந்த அளவிற்கு உதவியளிக்கின்ற இயல்பு, ஆழ்ந்த ஈடுபாடு, பெரிய மகான்களைத் தம் பூஜை அறையில் விளக்கேற்றி வைக்க கேட்டுக் கொள்ளும் ஆர்வம், சிரித்துச் சிரித்து பேசுகின்ற திறமை, கூர்ந்தமதி, இவைகள் தாம் நான் கண்டு, போற்றுகின்ற இனிய நற்குணங்களைக் கொண்ட திருமதி. சௌந்தரா கைலாசம் அவர்கள், என நான் பலமுறை சொல்வதுண்டு.

கலைக்களஞ்சியப் பணியிலே சிறிது சோர்வு தட்டினாலும் சௌந்தரத்திற்குத் தொலைப் பேசியின் மூலம் தெரிவித்து விட்டு அங்கு செல்வேன். எல்லாம் புதிய புதிய நகைச்சுவை நிறைந்த சம்பவங்களை எப்படித்தான் திரட்டுவார்களோ அறியேன். அவர்கள் பேசும் பொழுது அவர் முகம் பிரகாசம் அடைவதைப் பார்க்கலாம். வேடிக்கை நிகழ்ச்சிகள், குழந்தைத்தனமாகப் பேசுவது இவை இரண்டும் எனக்கு மிகவும் பிடிக்கும்.

ஆனால் திடீரென்று ஒருநாள் தண்ணென்ற பேச்சிலே என்னை ஆச்சரியத்தில் மூழ்கடித்து விட்டார். சற்று முன்பு சிரித்துப் பேசிக்கொண்டிருந்த சௌந்தரம் தானோ என்று அதிசயத்தில் மூழ்கினேன். இப்பொழுது நல்ல செந்தமிழ்ச் சுவை சொட்டச் சொட்ட ஒரு சொற் பொழிவு கேட்க வேண்டுமானால் அது சௌந்தரத் தினிடமே கேட்கலாம். கவிதை பாடும் வல்லமையும் அதற்கு ஏற்றவாறு மோனையில் மகிழ்விக்கும் ஆற்றலும் அந்த அம்மையாருக்கு உண்டு.

என்னிடத்திலே தனி அக்கறை கொண்டு எனது தீராத வலிப்பு நோயையும் மகான்களின் தரிசனத்தால் போக்கி விட வேண்டும் என்ற ஆர்வத்தில் அவர் சலிக்காதவர். ஏதாவது ஒரு

மகான் வந்து விட்டால் உடனே தொலைபேசியின் மூலம் என்னை அழைப்பார்கள். நானும் அவர்களின் தரிசனத்தின் பொருட்டே உடனே செல்லத் தவறமாட்டேன். வலிப்புக்கு இந்தியாவிலேயே மிகுந்த புகழ்பெற்ற மருத்துவர் ஒருவர் தலைமையில் அறுவை சிகிச்சை செய்யவேண்டுமென்று சொன்னார். நான் எனது குருவாக மதிக்கும் மூவர்களில் ஒருவரான சுவாமி அப்பண்ணா அவர்கள் திருக்கோயிலுக்குச் சென்று வருமாறு பணித்தார்கள். அப்படிச் செல்லும் போது காணிக்கையாக ஒரு கீர்த்தனம் செய்து கொண்டு போய் சுவாமி ஞானானந்தகிரி முன்பு பாடும்படி தெரிவித்தார்கள்.

நான் திருமதி சௌந்தரா கைலாசம் அவர்கள் காரில் புறப்பட்டுச் சென்றேன். சௌந்தரம் என்னுடன் வந்தார்கள். அலுவலகக் காரை மற்ற உபயோகங்களுக்கு நான் பயன்படுத்த எப்போதுமே விரும்புவதில்லை.

எனவே திருமதி சௌந்திரா கைலாசம் அவர்களின் காரில் செல்ல ஏற்பாடு ஆயிற்று. திருக்கோவிலூர் சென்று ஞானானந்தகிரி சுவாமிகளை நேரில் காணும் பாக்கியம் பெற்றோம். "தலையில் ஆபரேசனா? அப்படியே இருக்கலாமே, பொறுத்துப் பார்த்துக் கொள்ளலாம்" என்று சுவாமிகள் தெளிவாக கூறிவிட்டார்கள். ஐந்து ஆண்டுகளுக்குப் பிறகு அந்த மருத்துவரே "ஆபரேஷன் தேவை இல்லை, மருந்து சாப்பிடுவதே போதும்" என்று தெரிவித்து விட்டார்.

இவ்வாறு பல மகான்களைச் சந்திக்க நேரும் பொழுதெல்லாம் அவர் என்னுடைய உடம்பைப் பற்றிக் கூறத் தயங்க மாட்டார்.

டில்லியிலிருந்து திரு. கைலாசம் அவர்கள் திரும்பிய போது உடனே இருவரும் என்னை வந்து கண்டார்கள். இவற்றுக்கெல்லாம் காரணம் நான் மேற்கொண்டு இருக்கும் பெரிய பணி

ஆகிய கலைக் களஞ்சியம் உருவாக்குவதே ஆகும். ஏதோ ஒரு புதிய முயற்சியில் ஈடுபட்டிருக்கும் போது அதற்குவேண்டிய உற்சாகமும், உதவியும் அளிப்பதே நமது கடமை என்று இரண்டு பேருமே நினைப்பவர்கள்.

சௌந்திரத்திற்கு நல்ல எதிர்காலம் உண்டு என்று நான் உறுதியாக நம்புகிறேன். மேலோங்கி வரவேண்டும் என்று நினைப்பவர்களில் நானும் ஒருவன்.

# என்னுரை :

"பாருக்குள்ளே நல்ல நாடு – எங்கள் பாரத நாடு"
என்று பாடினார் பாரதியார்.

எப்படி நல்ல நாடு என்பதற்கு ஏற்புடைய காரணங் களையும் எழிலுற விளக்குகிறார்.

ஞானத்திலே பர மோனத்திலே – உயர்
மானத்திலே அன்ன தானத்திலே
கானத்திலே அமுதாக நிறைந்த
கவிதையிலே உயர் நாடு.

தீரத்திலே படை வீரத்திலே – நெஞ்சில்
ஈரத்திலே யுப காரத்திலே
சாரத்திலே மிகு சாத்திரம் கண்டு
தருவதிலே யுயர் நாடு

இன்னும் பல சிறப்புகளை அடுக்கிக் கொண்டே போகிறார்.

அன்று வாழ்ந்திருந்த அருளாளர்களும் ஆன்றோர் களும் அமைத்துக் கொடுத்த அருமையான பாதையிலே தான்– அவர்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றித் தான் அகில பாரதமும் இன்று சென்று கொண்டிருக்கிறதா என்றால் என்னால் 'ஆமாம்' என்று அறுதியிட்டுச் சொல்ல முடியவில்லை. ஆனால் அந்த அற்புதமான அழகான வழியில் தான் செல்ல வேண்டும் என அடியேன் ஆசைப் படுகிறேன். அப்படிச் சென்றால் தான் யாவரும் அமைதி யாகவும் ஆனந்தமாகவும் அனுதினமும் வாழ முடியும் என உறுதியாக நம்புகிறேன்.

அந்த நம்பிக்கையை எனக்குத் தந்த காரண புருஷர்களை அவர்கள் கற்றுக் கொடுத்த பாடத்தை எண்ணி அசைபோட்டுக் கொண்டிருப்பவள் நான்.

அந்த எண்ணத்தின் அடிப்படையில் எழுந்த கவிதை களைத் தொகுத்து ஒரு நூலாகத் தந்திருக்கிறேன்.

சுந்தரர் தீட்டிய திருத்தொண்டர் சிவனடியார் களுக்குப் பெருமை சேர்ப்பது.

என் உள்ளத்தில் நிறைந்த உத்தமர்களுக்கு இத் தொகுப்புப் பெருமை சேர்ந்தால் எளியேன் பிறவிப் பயன் பெற்றவளாவேன்.

சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் திரு. பொற்கோ, அவர்கள் மிகச்சிறந்த அணிந்துரையை வழங்கியுள்ளார்கள். அவருக்கு என் மனம் நிறைந்த நன்றி உரியதாகுக.

இந்நூல் வெளிவர உதவிய கவி மாமணி புதுவயல் செல்லப்பன் அவர்களுக்கும் வெளியிடும் நிலமங்கை நிலையத் தாருக்கும் அழகொளிர அச்சேற்றித் தந்த சென்னை சாம்பா பப்ளிகேஷன்ஸ் திரு. திருப்பதிசாமி, திரு.செல்வம் ஆகியோருக்கும் நெஞ்சுநிறைய நன்றி கூறுகிறேன்.

வாழிய செந்தமிழ்,
வாழ்க நற்றமிழர் !
வாழிய பாரத மணித் திருநாடு!

சென்னை.
1-3-2000

**சௌந்தரா கைலாசம்**

# பதிப்புரை :

செந்தமிழ் நாட்டிலே மிகச் சிறந்த கவிஞரான திருவாட்டி சௌந்தரா கைலாசம் அவர்கள் தம் உள்ளத்தில் நிறைந்த உத்தமர்களைப் பற்றி உயர் தமிழ் மொழியில் நயம் மிக்க கவிதைகள் படைத்துத் தந்துள்ளார்கள்.

மாமுனிவோரும் மாசற்ற தலைவர்களும் செஞ்சொற் கவிஞர்களும் செயல் சிறந்த வீரர்களும் அம்மையாரின் கவிதைகள் வாயிலாக அற்புதக் காட்சி தருகிறார்கள்.

எண்ண இனிக்கும் வண்ணத் தமிழ்க் கவிதைகளைத் தொகுத்து ஒரு புத்தகமாக வெளியிடுவதில் நாங்கள் மிகவும் பெருமை கொள்கிறோம்.

அதற்கு வாய்ப்பளித்த அம்மையாருக்கும் அழகுற அச்சேற்றித் தந்த சாம்பா பப்ளிகேஷன்ஸ் திரு. திருப்பதிசாமி அவர்களுக்கும் திரு. செல்வம் அவர்களுக்கும் உள்ளம் நிறைய நன்றி சொல்கிறோம்.

**ஆதம்பாக்கம், சென்னை.**

**2.3.20000**

**நிலமங்கை நிலையத்தார்**

# உள்ளே...


| | | |
|---|---|---|
| என்னைப் பெற்றவர்! | ..... | 15 |
| புதுப்பாளையம் இரத்தின சபாபதிக் கவுண்டர் | ..... | 17 |
| ஆதிசங்கரர் | ..... | 20 |
| ரிஷப தேவர் | ..... | 21 |
| தம்பிரான் தோழர் சுந்தரமூர்த்தி சுவாமிகள் | ..... | 26 |
| காசி மடம் கண்ட குமரகுருபரர் | ..... | 29 |
| திருவாரூர் மடப்புரம் ஸ்ரீ குரு தெட்சிணா மூர்த்தி சுவாமிகள் | ..... | 36 |
| திருவாடுதுறை ஆதீனம் | ..... | 40 |
| சதாசிவப் பிரம்மம் | ..... | 47 |
| அகண்ட பரிபூரண சச்சிதானந்த சற்குருபிரான் போற்றி! போற்றி! | ..... | 51 |
| தருமை ஆதீனக் குருஞானசம்பந்தர் | ..... | 53 |
| பரமஹம்ஸர் போற்றிய ராமப்ரசாதர் | ..... | 59 |
| ஸ்ரீ ராம கிருஷ்ண பரமஹம்ஸர் | ..... | 65 |
| விவேகானந்தர் | ..... | 67 |
| அண்ணல் காந்தி | ..... | 69 |
| காத்தருளும் கஞ்சமலைச் சித்தர் | ..... | 71 |
| மாமனிதர் அரவிந்தர் | ..... | 75 |

| | | |
|---|---|---|
| சித்தர் பிரான் | ..... | 82 |
| அப்பண்ண ஸ்வாமிகள் | ..... | 84 |
| காஞ்சி மாமுனியே போற்றி | ..... | 85 |
| காஞ்சி முனிவருக்கு ஒரு விண்ணப்பம் | ..... | 95 |
| பதின்மூன்றாம் ஆழ்வார் | ..... | 97 |
| நிறையும் அருளைச் செய்வாயே! | ..... | 102 |
| சாந்தானந்த சற்குருவே சரணம் | ..... | 104 |
| அருளெனும் நதியிடை அற்புத அனுபவம் | ..... | 106 |
| சகடபுரம் சுவாமிகள் ஸ்ரீ ஸ்ரீ கிருஷ்ணானந்த தீர்த்தர் | ..... | 108 |
| ஔவையார் | ..... | 111 |
| நன்றி சொல்ல வேண்டும் | ..... | 118 |
| கம்பர் | ..... | 120 |
| காளிதாசர் | ..... | 124 |
| உள்ளொளி பெருக்குவோமே! | ..... | 129 |
| குமாரன் ஆசான் (கேரளக் கவிஞர்) | ..... | 131 |
| பாரதி என் குழந்தை! | ..... | 137 |
| நா.மு.வேங்கடசாமி நாட்டார் | ..... | 143 |
| திரு.வி.க. | ..... | 145 |
| கல்கி கிருஷ்ணமூர்த்தி | ..... | 148 |
| நாமக்கல் கவிஞர் | ..... | 156 |

ரசிகமணி நினைவு வாழ்க ..... 161

கண்ணதாசன் ..... 162

பன்மொழிப் புலவர் (கா. அப்பாத்துரையார் மணிவிழா)..... 164

பத்மபூஷன் தூரன் ..... 166

சா. கணேசன் மணிவிழா ..... 169

அழ. வள்ளியப்பா ..... 171

கி.வா.ஜ. என்னும் மூன்றெழுத்தண்ணல் வாழ்க! ..... 179

ஆனந்த வாரி ..... 182

மாவீரர்கள் மருதுபாண்டியர்கள் ..... 185

தொடமுடியாத உயரத்தைத் தொடுதல் கூடும் ..... 190

கனல்வளர்க்கும் திருப்பூர்த் திருக்குமரன் ..... 191

சிற்பி நேரு சிறந்து வாழ்க ..... 195

அம்பேத்கர் ..... 196

காந்தி அடிப்பொடியாய்க் காலமெலாம் வாழ்ந்தவரே!
(வினோபா பாவே) ..... 197

பாரதப் பிரதமர் மொரார்ஜி தேசாய் ..... 205

இந்திரா காந்தி ..... 207

கர்மயோகி இராஜாஜி ..... 210

யோகத்தின் கண்பார்வை வாழ்க! ..... 211

சுந்தரச் சொல் அண்ணாதுரை ..... 212

எம்.ஜி.ஆர். ..... 216

| | | |
|---|---|---|
| பாரத தேச பக்தவத்ஸலம் | ..... | 219 |
| ம.பொ.சி. சுமக்கப் பிறந்தாய் சும! | ..... | 221 |
| அவினாசிலிங்கம் | ..... | 224 |
| பொள்ளாச்சி நாச்சிமுத்துக் கவுண்டர் | ..... | 228 |
| அமரர் ராஜீவ் காந்தி | ..... | 232 |
| அன்னை தெரசா | ..... | 233 |
| டாக்டர். முத்துலெட்சுமி | ..... | 239 |
| ஈடறியா எதிராசர் என்றும் வாழி | ..... | 240 |
| ஆர்க்காட் டிரட்டையர் | ..... | 243 |
| கனிவுடன் ஆசி சொல்வீர்! | ..... | 251 |
| கோயங்கா—தொழுகிறோம்! வாழி! வாழி! | ..... | 253 |
| பார்த்ததுண்டோ ? | ..... | 254 |
| முத்தைய வள்ளல் நீடு வாழ்க! | ..... | 255 |
| அமரர் ஏ.வி.எம். | ..... | 258 |
| நாடகக் கலைத் திலகம் அவ்வை சண்முகம் | ..... | 264 |
| நல்ல சேனாபதிச் சர்க்கரை மன்றாடியார் | ..... | 268 |
| நீதியரசர் என். சோமசுந்தரம் | ..... | 270 |
| செண்டெக்ஸ் நாச்சிமுத்து | ..... | 274 |
| கார்கில் வெற்றியைப் பெற்றிடக் கொற்றவை அருளுவாள்! | ..... | 284 |

சுகமே நிதமும் வரவாகும் ..... 286

இது சத்தியம் ..... 288

பாரதத்தை உயர்த்தி வைப்போம் ..... 289

வணங்கிப் பணிந்து வாழ்த்துகின்றோம் ..... 290

சிங்கம் பேட்டை சரஸ்வதி அன்னை ..... 292

செவாலியர் திரு. தியாகராஜா பிஞ்ஞேயிரா வாழ்க! ..... 294

டாக்டர். பாலகோபால ராஜு–நாமம் நிலைத்து வாழியவே! ..... 298

தாயுமானவர் ..... 299



# என்னைப் பெற்றவர்!

பேரிமய மலைபோலக் குவிந்த செல்வம்
பெற்றிருந்த போதுமொரு மழலைச் சொல்லைக்
கூறுகிற சிறுமகவைப் பெற்ற வர்தான்
குவலயத்தில் பெற்றவராய் விளங்கு வார்கள்!
சீருயரும் என்தந்தை நற்றாய் அந்தத்
தெய்வஅரு ளால்என்னை, உடன்பிறப்பைப்
பேருயரப் பெற்றெடுத்துப் பெருமை கொண்டார்!
பெற்றவரென் றோரரிய பதவி பெற்றார்!

தந்தை திரு.சுந்தரநற் கவுண்டர் அந்தச்
சங்கரனின் அருளினையும், அவரைப் பெற்ற
தந்தையின்நல் ஆசியையும், சுற்றத் தாரின்
தழைத்திருந்த அன்பினையும், வையம் போற்றும்
செந்தமிழ் நூல் அறிவினையும், சைவ நால்வர்
செய்தளித்த பண்ணினிய பாடல் எல்லாம்
சந்தமுடன் ஓதுகின்ற திறமை தானும்
தமதரிய சொத்தாகப் பெற்றி ருந்தார்.

ஈசனவன் எழுதிவைத்த படியே யாவும்
இங்குநடைபெறுமென்னும் உறுதி தாங்கி
ஆசையொடு செல்லாண்டி கருப்ப சாமி
ஆகியதம் குலதெய்வம் வணங்கி நிற்பார்!
பாசமிகும் என்அன்னை காளி அம்மாள்
பண்பாட்டுக் கிலக்கணமாய் விளங்கி நாளும்
சாசனமாய் நல்லன்பைப் பிறர்க்க ளிப்பார்!
தன்கடமை விருந்தோம்பல் என்று சொல்வார்!

இத்தகைய பெற்றவரை எனக்குத் தந்த
இறைவனுக்கு மனதார நன்றி சொல்வேன்!
முத்தமிழும் இறைநெறியும் அன்பும் பண்பும்
முனைப்போடு நிதமெனக்குச் சொல்லித் தந்த
உத்தமரை நான்பணிந்து வணங்கு கின்றேன்.
உளத்தினிலே அவருருவை நிறுத்து கின்றேன்.
அத்தனவன் திருவருளால் அவர்நா மங்கள்
அவனியிலே பல்லாண்டு வாழ்க! வாழ்க!



# புதுப்பாளையம் இரத்தின சபாபதிக் கவுண்டர்

எந்தப் பொருளும் இறைவன் திருப்பதம்
சிந்தையில் தாங்கிச் செயல்பட் டிருந்த,
தன்மையர் இரத்தன சபாபதிக் கவுண்டர்
என்னும் என்றன் இனிய நல் தாத்தா!
கோடிச் செல்வம் குவிந்திருந் தாலும்,
காடும் கழனியும் நிறைந்திருந் தாலும்
வீடும் தோட்டமும் மிக விருந்தாலும்
ஆடும் மாடும் அளவிலா திருந்தும்
என்றுமே எளிமையாய் இருந்தவா றிங்கே
நன்று செய்யவே நாடிய நல்லார்!
புதுப்பா ளையம்செய் புண்ணியத் தால்அப்
பதியில் பிறந்த பண்புயர் செம்மல்!
பொய்யாக் காவிரி போல அன்பினை
வையகத் தார்க்கு வழங்கிய செல்வர்!
வான்கதிர் போல வாய்த்த அறிவினை
நானிலத் தோர்க்கு நல்கிய அறிஞர்!
காற்றினைப் போல ஆற்றல் மிக்கவர்!
கூற்றினைப் காணினும் குலைநடுங் காதவர்!
உயர்வையே என்றும் உளத்தில் நினைத்தவர்!
அயர்வினைச் சிறிதும் அறியா திருந்தவர்!
பிறந்தபொன் நாட்டைப் பெற்ற தாயினும்
சிறந்ததென் றெண்ணும் சீர்மை உடையவர்!
மற்றவர் வாழ்வில் மலர்ச்சியைக் காண
உற்ற செயல்கள் உவந்து செய்தவர்!
எத்தனை ஜமீந்தார் இருந்த போதிலும்

உத்தமர் இவர்க்கிவ் வுலகில் யார்நிகர்?
இந்திய நாட்டின் இன்னலைத் தீர்க்க
வந்த மஹாத்மா வந்து தங்கியே
விருந்தினை அருந்திய வியத்தகு பேற்றினைப்
பெருமை பொருந்தவே பெற்றவர் இவராம்!
அண்ணல் காந்திதம் அமுத மொழியினால்
எண்ணற் கரும்புகழ் இவர்க்குச் சூட்டினார்!
புண்ணியர் இவரின் பொன்மா ளிகையில்
பண்ணொலி படைத்த இராட்டையைப் பார்த்த
காந்தியின் உளத்தில் களிப்பு நிறைந்ததாம்!
மாந்தரின் போக்கில் மாற்றம் தெரிந்ததாம்!
சிதறா நெஞ்சோடு தினத்தினம் தூய
கதரா டையையே கட்டினார் தாத்தா!
தராதலம் எல்லாம் தாழ்ந்து வணங்கிய
இராஜா ஜீயிவர்க் கினிய நண்பராம்!
அருமைப் பாட்டனின் ஆலோ சகராய்
இருந்தவர் இராஜா ஜீநெடு நாட்கள்!
புனிதரா ஜாஜியைப் புதுப்பா ளையத்திலே
இனிதே இருக்கச் செய்தவர் தாத்தா!
ஆண்டுகள் ஒன்றிரண் டல்ல, பத் தாண்டாம்!
தூண்டா விளக்காய்ச் சுடரொளிர் கின்ற
ஆசிர மந்தனை அமைப்பதற் காக
நேச நெஞ்சுடன் நிலமளித் திட்ட
வள்ளலாம் எனக்கு வாய்த்த பாட்டனார்!
அள்ளிக் கொடுப்பதில் அவரொரு பாரி!
அரசியல் ஞானியின் அறிவுரை யாலே
உரத்துடன் மதுவை ஒழிக்க உழைத்தவர்!
மாட்டு வண்டியில் மகிழ்வுடன் சென்று
வேட்டு வைத்தவர் விஷமெனும் குடிக்கு!

ஆண்டவன் படைப்பில் யாவரும் சமமெனத்
தீண்டா மையதன் கழுத்தை நெரித்தவர்!
வேண்டாச் சாதியை விரட்டி அடித்தவர்!
ஆண்ட வெள்ளையன் அஞ்சும் படியாய்க்
காந்தியின் வழியே கடுக நடந்தவர்!
ஏந்தல் இவரால் இந்த மாநிலம்
எய்திய பயன்கள் எண்ணி லடங்கா!
உய்த மானுடர்க் கோரள வில்லை!
இன்னுடம் பால்அவர் இல்லைநம் முன்னம்!
என்ற போதிலும் எவ்வித யத்திலும்
ஆலயத் தெய்வமாய் அமர்ந்திருப் பாரவர்!
காலனை வென்று காட்டிவிட் டாரவர்!
செங்கதிர் வெண்மதி திகழும் நாள்வரை
மங்கலம் நல்கும் அம் மாண்பினர் நாமமே!
மகிமைசேர் அண்ணன் மாரின் அருளினால்
அகிலம் முற்றிலும் அவர்செயல் ஓங்குமே!

❋ ❋ ❋ ❋

# ஆதிசங்கரர்

உலகினிலே வாழ்கின்ற மனிதர் எல்லாம்
ஒருகுலமே என்றுரைத்துப் பேதம் நீக்கி
நலமுயரும் வழியினிலே எந்த நாளும்
நடந்து பல அறிவுரைகள் நவின்றெக் காலும்
அலவுகிற மனத்தினிலே அமைதி சேர்க்கும்
அத்துவைத நெறிபுகட்டி ஐந்தாய் நின்ற
புலனடக்கி இறைமுதலைக் காண்க என்ற
புகழ்ஆதி சங்கரரே! போற்றி! போற்றி!

காலடியில் பிறந்தாலும் விரிம னத்தால்
காசினியில் நிலவுகிற உயிர்கள் யாவும்
சீலநெறி பற்றியருள் எய்தி உய்யச்
சிந்தை கொண்டு நீர்செய்த தொண்டி னாலே
ஞாலமெலாம் வியக்கிறதே! வளர்ந்து தர்ம
நலமனைத்தும் மணக்கிறதே! உனது நாமம்
ஆலமரும் செல்வனவன் அருளி னாலே
அளவற்ற நெடுங்காலம் ஓங்கி வாழ்க!

❋ ❋ ❋ ❋

# ரிஷப தேவர்

மேதினி மீதில் அவதாரம்
மீண்டும் திருமால் எடுத்ததுபோல்
ஆதி தத்தாத் ரேயரின்பின்
அவதரித்தவர் ரிஷப தேவர்
கோதில் லாத மனத்தோடும்
கொள்கையில் நல்ல தெளிவோடும்
நீதி நெறிகள் தவறாமல்
நிதமும் நடந்தவர் அவரா வார்.

ஒப்பில் லாத பெருமையுடன்
ஒளிர்ந்த நாவ லந்தீவைச்
செப்பரும் நலங்கள் பொங்கிவரச்
செம்மை யுடனே அரசாண்ட
பொற்புயர் நாபி மன்னரவர்
புனித வதியாம் மேருவுடன்
அற்புத மகவைப் பெற்றெடுத்தார்;
அவர்தான் ரிஷப தேவரென்பார்!

சின்னஞ் சிறிய வயதினிலும்
திகழும் அறிவின் இமயத்தில்
நன்னயம் மிகவே விளங்கியவர்
நாபியின் புதல்வர் ரிஷப தேவர்!
பன்னும் சொல்லில் அன்பினையும்
பண்ணும் செயலில் அறிவினையும்
மண்ணுல கிதனை உயர்த்திவிட
மாண்போ டென்றும் காட்டியவர்!

குருகுல வாசம் செய்தபின்னர்
குரு தட்சிணையை அவர்தந்து
குருவின் ஆசி தனைப் பெற்றுக்
குடும்ப வா ழ்வைக் கைக்கொண்டார்.
அருமை மிகுந்த ஜெயந்தியினை
அமரர் தலைவன் இவர்க்களிக்கப்
பெருகும் மகிழ்வில் திளைத்தபடி
பெண்ணவள், தன்னை மணம் கொண்டார்.

திருமண வாழ்வின் பயனாகச்
செல்வர்கள் நூற்றுவர் பெற்றெடுத்தார்.
இருவித கருமங்கள் தமைநிதமும்
எவ்வித்தக் குறையும் இல்லாமல்
சரிவரச் செய்துநலம் சேர்க்கும்
சற்புத் திரர்கள் அவராவர்!
பரதர் அவரின் முதல் மகனாம்!
பாரதம் என்பதன் காரணராம்!

மன்னவ ராக நெடுங்காலம்
மண்ணாண் டிருந்து பிறகொருநாள்
தன்னரும் மைந்தர் தமையழைத்துத்
தான்துற வெய்துவ தாய்ச் சொல்லி
பொ ன்னுடல் இறைவன் பணிக்கெனவே
பொலிகிற தந்தத் திருப்பணியால்
நன்னயம் சேரும்; பிறப்பிறப்பு
நாடா தெனவும் நவின்றிட்டார்.

“பாரில் அறத்தைப் பின்பற்றப்
படித்திட, வேண்டிய நூல்களெவை?
கூறுக” என்றே அவர் மைந்தர்
கூறிட அவரும் விடை தந்தார்.
“யாரும் நூல்கள் படிப்பதனால்
அறத்தை அறிய முடியாது;
சீரியர் பாத தூளியினைச்
சீரங்கொளில் அறிவீர்” எனச் சொன்னார்.

உலகில் பிறக்கும் உயிர்களின்நல்
உடல்கள் முற்றும் உண்மையிலே
மலத்தை உண்டு மண்மேலே
வாழும் ஜந்துக் களின்உடைமை!
அலையும் மனத்தொடு சிற்றின்பம்
அனுப விப்ப தற்காகத்
தலைவன் உடலைத் தரவில்லை!
தவம் செய் திடுவீர் நலம் காண!

சீற்றம் சிறிதும் இலாதவராய்,
சித்தம் சமமாய் உடையவராய்,
போற்றும் சாந்தம் பொலிபவராய்,
புவியில் உள்ளோர் எவர்பாலும்
சாற்றற் கரிய அன்பினராய்,
சற்றும் பிறழா நெறியினராய்,
ஆற்றல் மிகவும் உடையவராய்
யாவர் உளரோ அவர் மகான்கள்!

மனைவி, மக்கள் சுற்றமென்றும்
மனைகள் வயல்கள் செல்வமென்றும்,
நினைத்து நினைத்து நெஞ்சுக்குள்
நீங்காக் கிரந்தி நோயதனை
முனைந்து வளர்த்துக் கொள்ளாமல்
முற்றும் பற்றைத் துறந்து விடில்
இணைந்து சுகங்கள் பெருகிவரும்!
என்றும் இன்பம் உறவுகொளும்!

திகைப்பில் லாது திகழ்கின்ற
தெளிந்த ஞானம் அதனாலும்,
உகப்போ டுயர்வைச் செய்கின்ற
ஓயா முயற்சி அதனாலும்,
புகலற் கரிய அறிவாலும்,
போற்றும் யோக பலத்தாலும்
அகந்தைக் கிழங்கின் வேரதனை
அழிப்பீர் எனவும் அவர்சொன்னார்.

அண்ணன் பரதன் அவனிடத்தே
அழுக்கா றணுவும் இல்லாமல்
எண்ணத் தூய்மை யுடன்நீங்கள்
இருங்கள் மகிழ்வாய் எனச்சொல்லிப்
பண்பார் பரதன் அவனுக்குப்
பட்டா பிஷேகம் செய் வித்துத்
தன்கால் போன வழியெல்லாம்
தாரணி முழுதும் அவர் சென்றார்.

அரும் அவதூத சன்யாச
ஆஸ்ரம தர்மம் கைக்கொண்டு
பெருமையோ டிலங்கிய பெற்றியினால்
ரிஷபர் எனும்பெயர் அவர் பெற்றார்.
அரசராய் அவர்புவி ஆளுகையில்
அகண்ட வானும் பொய்த்து விடப்
பெருகிய யோக பலத்தாலே
பெய்திடச் செய்தார் பெருமழையை!

அகம் தனில் சிறிதும் அழுக்கின்றி
ஆகம் தன்னில் உடையின்றித்
திகம்பர ராக உலகெங்கும்
திரிந்தார் ரிஷப தேவரவர்!
இகம் தனில் ஞானிகள் தமைநெருப்பும்
எரிக்கா தென்பதன் நிரூபணமாய்த்
திகழும் உடலில் தீபற்றச்
சிறிதும் உணரா தவரிருந்தார்!

இப்படிப்பட்ட ஞானியரே
இங்கே தோன்றும் துயரெல்லாம்
செப்படி வித்தை கா ட்டுதல்போல்
சென்று மறையச் செய்திடுவர்!
மெய்ப்பொருள் யாதென் றுலகோர்க்கு
விளக்கி நல்ல நெறிப்படுத்தி
அற்புதம் பற்பல விளைத்திடுவர்!
ஆயிரம் நன்மைகள் பூத்திடுவர்!



# தம்பிரான் தோழர் சுந்தரமூர்த்தி சுவாமிகள்

சோதிவடி வாய்நின்று பேருலக மெல்லாம்
சொல்லரிய அருள்காட்டி என்றென்றும் காக்கும்
ஆதிசிவ னார்க்கந்தக் கயிலாய மலையில்
ஆலால சுந்தரரென் றரியபெயர் தாங்கிக்
கோதின்றித் திருத்தொண்டு புரிந்திருந்த போதில்
கொடியனைய இடைஉமையின் தோழியரைக் கண்டு
காதலும துள்ளத்தில் கனிந்ததன் பயனாய்க்
காசினியில் சுந்தரராய் அவதாரம் செய்தீர்!

திக்கெட்டும் புகழ்பெற்ற திருநாவ லூரில்
திருவுடைய சடையனார் இசைஞானி யார்க்கு
மிக்க உயர் புத்திரராய் நீர்பிறந்தி ருக்க
மேன்மையுள திருவாரூர், திருவொற்றியூரில்
சொக்குமெழிற் பரவையென்றும் சங்கிலியா ரென்றும்
சுடர் உமையின் தோழியர்கள் தோன்றி வளர்ந்தார்கள்
தக்கவய தடைந்த உமக் கினியமணம் நிகழும்
சமயத்தில் உம்மைஇறை தடுத்தாண்டு கொண்டார்!

பேரிறைவன் தொண்டுக்கே ஆளாகி வாழும்
பேற்றுக்கே உரியவராய் நீர்விளங்கி நின்றீர்!
ஊரூராய்க் சென்றந்த உத்தமனின் புகழை
ஒப்பரிய தமிழாலே உள்ளுருகி இசைத்தீர்!
ஈரமுள நெஞ்சுடனே இவ்வுலக மாந்தர்
எல்லோரும் இன்புற்று வாழும்வகை உரைத்தீர்!
ஆரூரில் பரவையினைக் கண்டுமனம் மயங்கி
ஆண்டவனை வேண்டிநின்றே அழகுமணம் புரிந்தீர்!

பெருமுதலை விழுங்கிவிட்ட சிறுமகவை மீண்டும்

பெற்றவர்க்குத் தந்தவர்கள் உற்றதுயர் தீர்த்தீர்!

ஒருமலைபோல் நெல்பெற் றீர்! ஆரூரில் சேர்க்க

உதவியன சிவன ாரின் பூதகண மெல்லாம்!

இரவினிலே துயிலுகையில் தலைக்கணைத்த செங்கல்

இளங்காலைப் பொழுதிலுயர் பொன்னாகச் செய்தீர்!

அரியமணி முத்தாநன் னதியிலிட்ட பொன்னை

ஆரூரில் அமைந்த்திருக் குளத்தினிலே எடுத்தீர்!

பரசிவத்தைப் பாடுவதே நும்பணியாய்க் கொண்டு

பலபதிகள் சென்றுதிருப் பதிகங்கள் பாடித்

திருக்குருகா வூர்ப்பக்கம் செல்லுகின்ற வேளை

தேகத்தில் சோர்வுவர இதையுணர்ந்த சிவனார்

பெருகிவரும் அன்போடு கட்டமுதும் நீரும்

பின்வந்த தொண்டருடன் நீர்புசிக்கத் தந்தார்!

கருணைவடி வானசிவன் நும்சிரசின் மேலே

கழற்கமலம் தனைவைத்து நல்லருளைப் பொழிந்தார்!

திருவொற்றி யூரேகிப் படம்பக்க நாதர்

திருவடியைத் தொழுதிருந்த பொழுதில்முன் விதியால்

இருவிழியும் சங்கிலியார் தமைநோக்கிப் பாய

இதயமது மிகமயங்கி அவர்பின்னே ஏகப்

பரமசிவம் தூதுசென்று மணமுடித்து வைத்தார்,

பரவையிடம் செலக்கூடா தெனுமுறுதி யோடு!

இருந்தாலும் பிறகுதிரு வாரூர்தான் செல்ல

எண்ணிநடந் திடும் போதில் கண்ணொளிபோ யிற்று

அடியவராய் இருந்திடினும் தவறுபுரிந்த திட்டால்
அடையுமொரு தண்டனையை இறைவனவன் கூடத்
தடுத்துவிட முடிவதிலை என்பதற்குச் சான்றாய்த்
தானுமது விழியொளியை நீர்இழந்து விட்டீர்!
நெடியபுகழ்க் காஞ்சியிலே ஏகம்பர் உமது
நிலைக் கிரங்கி ஒருகண்ணை மீண்டுமளித் தருளப்
பொடித்தடியார் துயர்போக்கும் திருவாரூர்ப் பரமன்
பூவிழிமற் றொன்றில்ஒளி பூக்க வழி செய்தார்!

ஊடிநின்ற பரவையிடம் தூதிறைவன் சென்றார்!
உம்மோடு மீண்டுமவர் வாழவகை கண்டார்!
ஈடறியா நும்பெருமை முற்றிலுமே அறிந்த
இகல்வேந்தன் நற்சேர மான்வெண்கோ உம்மைத்
தேடறிய நட்பெனவே தேர்ந்துமனம் மகிழ்ந்தார்!
செல்வத்தை மலையாக அவர்வழங்கி நின்றார்!
வேடரைப் போல் பூதகணம் வந்ததனைக் கவர
மீண்டுமதைத் திருமுருகன் பூண்டியிலே பெற்றீர்!

திருமாலும் நான்முகனும் தேடியுமே காணாத்
திருவடியும் திருமுடியும் உடையசிவ பெருமான்
விரும்பியுமைத் தமக்கேற்ற தோழனெனக் கொண்ட
விழுமிய சீர் உடையத் தமிழ்ச் சுந்தரரே உம்மை
அருமையுள சொர்க்கத்திற் கழைத்துவர ஈசன்
அன்போடு வெள்ளானை தனை அனுப்பி வைத்தார்!
பரமசிவன் அருள்பெறவே நுமதுபதம் போற்றிப்
பணிந்தோமேல் அதுகூடும்! உய்வடைவோம் நாமே!

* * * *

# காசி மடம் கண்ட குமரகுருபரர்

சிவபெருமான் தந்ததமிழ் திகழும் நாடு
சீர்குலைந்து நிலைதாழ்ந்து போய்வி டாமல்
தவமுனிவர் அகத்தியனார் இங்கு போந்து
தங்கிஅரும் பணிபுரிந்த மலையில் தோன்றி
உவகையினை உளங்களிலே நிறைத்து வைக்க
ஓடிவரும் பொருநைநதிக் கரையில் உள்ள
சுவர்க்கபுரி யாய்ஒளிரும் ஸ்ரீவை குந்தம்
சொல்லரிய பெருமைகளுக் குரிய தாகும்.

இணையற்ற நல்லன்பை நெஞ்சில் ஏந்தி
எல்லையில்லாப் பேரருளை எவர்க்கும் நல்கித்
துணைநிற்கும் கைலாச நாதர் கோயில்
துலங்கி எழில் விரித்திருக்கும் ஸ்ரீவைகுந்தம்!
அணைமீறும் வெள்ளமெனத் துன்பம் மோதி
அழியுமுயிர்க் காதரவாய்க் கைக்குக் கிட்டும்
புணையான வைகுந்த நாதர் கோயில்
பொலிகின்ற கைலாச புரமும் அஃதே!

பழம்பெருமை மிகஉடைய இத்த லத்தில்
பதினேழாம் நூற்றாண்டின் முற்பா கத்தில்
செழுந்தமிழில் கவிபாடும் திறமை வாய்ந்த
சண்முகசி காமணியார் என்பா ருக்கும்
அழகொளிரும் சிவகாம சுந்த ரிக்கும்
அலைவாயில் வேலவனின் அருளி னாலே
குழவியொன்று பிறக்கமிக மகிழ்ந்த பெற்றோர்
குமரகுரு பரனேஎன் றழைக்க லானார்!

பேரிறைவன் தந்தபெரும் பரிசாய் எண்ணிப்
பெற்றவர்கள் அதனைமிகப் பேணிப் பேணிச்
சீருடனும் சிறப்புடனும் வளர்த்தி ருந்தார்!
சிந்தையிலே இன்பத்தின் ஊற்றைக் கண்டார்!
கூரியநல் அறிவோடும் செயல்கள் ஆற்றும்
கொள்கையிலே உயர்வோடும், பெற்ற செல்வன்
பாரினிலே புகழோடு வாழும் நாளைப்
பாசமுடன் எதிர்பார்த்துக் காத்தி ருந்தார்!

ஆனாலும் எதனாலோ அக்கு ழந்தை
ஐந்துவய தடைந்தாலும் பேச வில்லை!
தேனாக மழலைமொழி சிந்திச் சிந்திச்
சிரிக்கின்ற பருவத்தில் ஊமை யாகித்
தானாக மூலையிலே ஒதுங்கி நின்ற
தளிரதனை நினைத்துமனம் கனத்துச் சோர
ஊனாக உயிராக உள்ள செந்தில்
ஒளிவேலன் சந்நிதிக்குக் கொண்டு சென்றார்!

ஓயாமல் அலையொலியைக் கேட்ட தாலே
உன்செவிகள் அலுத்தனவோ? எங்கள் மைந்தன்
வாயாலே ஒருவார்த்தை பேசு தற்கு
வகைபுரிய மாட்டாயா? வைய கத்தின்
தாயாக இருப்பவனே! சண்மு காநீ
தண்ணருளை மனமிரங்கித் தாரா யாயின்
மாய்வோமே எனக்கதறிக் கண்ணீர் மல்கி
மன்றாடி இராமுற்றும் தொழுதி ருந்தார்.

அகமுருக பக்தியுடன் தொழுத தாலே
அருள்முருகன், அர்ச்சகரின் உருவில் வந்து
மகவதனின் நாவினிலே ஆறெ ழுத்து
மந்திரத்தைக் கருணையுடன் எழுதிச் செல்ல
ஜகமுழுதும் வியப்படையும் வண்ணம் அந்தத்
தங்கமகன் வாய்திறந்து தந்தை தாயை
மிகஅன்போ டழைத்ததனைக் கேட்ட பெற்றோர்
வேலவனின் திருவடிக்கு வாழ்த்துச் சொன்னார்.

குமரனருட் பொழிவதனால் பேசும் ஆற்றல்,
குறைவற்ற கல்விநலம், வாய்க்கப் பெற்ற
குமரகுரு பரர்இனிய குரலெ டுத்துக்
கொஞ்சுதமிழ் மொழியினிலே வார்த்தை பின்னி
அமரரிடர் தீர்த்தருளிப் பெருமை கொண்ட
அறுமுகனின் புகழ்முழுதும் கலந்தி னிக்கும்
அமுதமெனக் கந்தர்கலி வெண்பா என்னும்
அழகுடைய நூலொன்றைப் பாடித் தந்தார்!

தான்பிறந்த ஊரான ஸ்ரீவை குந்தம்
தனிலுறையும் கைலாச நாதர் பற்றித்
தேன்தமிழில் நற்கயிலைக் கலம்ப கத்தைச்
செய்தளித்து பக்திநெறி வளர்க்க லானார்.
மேன்மைமிகும் மாமதுரை நகரம் சென்று
மீனாட்சி அன்னையினைப் பணிந்து போற்றி
வான்புகழும் படிபிள்ளைத் தமிழைப் பாடி
மாறாத புகழேணி ஏறிக் கொண்டார்.

மதுரைநக ராண்டதிரு மலைநா யக்கர்
மனம்விரும்பி வேண்டியதால் அரங்கில் ஏறி
அதியழகாய்த் தன்கவிதை விரித்துக் கூறும்
அமயமதில் அர்ச்சகரின் மகளைப் போல
விதிமுதல்வி மீனாட்சி வந்து கேட்டு
மேலான முத்துமணி மாலை ஒன்றைக்
குதித்தெழுந்து மன்னர்கழுத் திருந்தெ டுத்துக்
குமரகுரு பரனார்க்குப் பரிசாய்த் தந்தாள்!

சொக்கலிங்கர் விளையாட்டை உலகோ ருக்குச்
சொலும்வகையில் நன்மதுரைக் கலம்ப கத்தை
மிக்க எழில் விளங்கிடவே படைத்த ளித்து
மெய்யாகத் தமிழுக்கோர் அணியைச் சேர்த்தார்!
எக்குறையும் இல்லாமல் மனித சாதி
எப்பொழுதும் தலைநிமிர்ந்து வாழ்வ தற்குத்
தக்கவழி எதுவென்று காட்டு கின்ற
தன்மையிலே நீதிநெறி விளக்கம் சொன்னார்.

ஊர்ஊராய்ச் சென்றிறையை வணங்கும் ஆவல்
உளத் தெழவே சிராப்பள்ளி சென்ற டைந்து
சீர்ஊறத் திகழ்கின்ற தாயு மானார்
திருவடியைச் சிரம்தாழ்த்தி வணங்கி நின்றார்.
நீர்ஊறிக் கழனிகளில் நெல்நி ரப்பி
நேர்த்தியினை எங்கெங்கும் தெளித்தி ருக்கும்
ஆரூரின் பூங்கோயில் அமர்ந்த ஈசன்
அருள்வளத்தை மணிமாலை ஆக்கித் தந்தார்.

தருமபுர ஆதினம் அமைத்துத் தந்து
        சைவநெறி வையமிதில் தழைக்கச் செய்த
குருஞான சம்பந்தர் மரபில் நான்காம்
        குருவாக ஒளிசெய்த தம்பி ரான்பால்
மருள்நீங்க ஞானஉப தேசம் பெற்று
        மனத்தினிலே உயர்ந்தஇடம் அவர்க்குத் தந்தார்!
பெருமையினைத் தரும்வகையில் கோவை நூலைப்
        பீறிவரும் கவிதைகளால் சூட்டி நின்றார்.

இங்கிருக்கும் திருத்தலங்கள் பலவும் ஏகி
        இறைவனவன் இணையடியை வணங்கிப் பின்னர்
கங்கைநதி பாய்ந்தோடி வளம்கொ ழிக்கும்
        காசிநகர்க் கடவுளினைக் காணச் சென்றார்.
அங்கிருக்கும் பிஞ்ஞகனாம் விஸ்வ நாதன்
        அந்தியினை உலகுயிர்கள் அடையும் காலை
துங்கமிகும் 'ஓம்' அதனை உபதே சித்துத்
        துறக்கத்தின் வழிதிறக்கத் துணைசெய் வானாம்.

கேதார நாதர்க்குக் கோயில் ஒன்றைக்
        கீர்த்திமிகும் காசியிலே நிறுவ எண்ணி
ஆதார நிலம்தேடி பாது ஷாபால்
        அவர் செல்ல விழைந்ததனால் ஹிந்துஸ் தானி
தோதாகக் கற்றறிய வாணி தன்னைத்
        துதிபாடி ஒருமாலை புனைந்த ளித்தார்.
மாதாவின் அருளாலே கற்றுத் தேர்ந்து
        மன்னவர்முன் சிங்கத்தில் ஏறிச் சென்றார்.

குமாகுரு பரருடைய பெருமை எல்லாம்
குறையறவே உணர்ந்திட்ட பாது ஷாவும்
கமலமலர் இதயமிகக் கனியப் பெற்றுக்
கருடவட்டம் அளவு நிலம் கொடைய ளித்தான்
உமையவளுக்(கு) உடலினிடப் பாகம் தந்த
ஒருவனுக்குக் கேதார மந்திர் கட்டித்
தமிழினிலும் இந்தியிலும் உரைகள் ஆற்றிச்
சைவநெறி வளர்க்கஒரு மடமும் கண்டார்!

இன்னுமவர் செய்திருந்த பணிகள் தம்மை
எண்ணுகையில் நம்முடைய இதயம் விம்மும்!
மண்ணுலகு பயனடைய அவர்ப டைத்த
மாண்புடைய நூல்களெல்லாம் பெருமை சேர்க்கும்!
பொன்னொளியை பக்திநெறி வழியே இந்தப்
பூவுலகில் அவர்விரித்த அருமை தோன்றும்!
தன்னிகரே இல்லாமல் விளங்கி நின்ற
தமிழ்க்குமர குருபரனார் நாமம் வாழும்!

ஒருசிறிய பெண்சூட்டும் மாலை கொள்ள
ஒப்பறியாச் சிவன்தனது தலையைத் தாழ்த்தித்
திருவுடைய குங்கிலியக் கலய ருக்காய்த்
திரும்பவும்தன் தலைநிமிர்ந்த பனந்தாள் ஊரில்
அருளுயரும் குமரகுரு பரர்க்குப் பின்னால்
ஆறாவ தாய்வந்த குருபி ரானாம்
திரு.தில்லை நாயகனார் காசி தன்னில்
திகழ்ந்திருக்கும் மடத்துக்குக் கிளைஅ மைத்தார்!

செம்பவள வண்ணத்துச் சிவனைப் போற்றிச்
செம்மையுறச் சைவநெறி விளங்கப் பண்ணி
அம்புவியில் வதிகின்ற உயிர்கள் யாவும்
அன்புவழி தனைநாடிச் செல்ல வைத்து
வம்பின்றி நாம்வாழத் துணையாய் வாழும்
மாண்புடைய நன்முத்துக் குமார சாமித்
தம்பிரான் சுவாமிகளிங் கினிது வாழ்க!
சந்ததமும் காசிமடம் சிறந்து வாழ்க!

எஞ்ஞான்றும் எங்கெங்கும் இனிமை கூட்டி
இளமையெழில் குலுங்குதமிழ் உயர்ந்து வாழ்க!
அஞ்ஞானம் அத்தனையும் அகலச் செய்யும்
அறிவான ஒளிவெள்ளம் விரிந்து வாழ்க!
மெய்ஞ்ஞானம் தனைநல்கி நலம்ப யக்கும்
மேலான குருமார்கள் சிறந்து வாழ்க!
விஞ்ஞான விரிவுக்குள் அடங்கி டாமல்
விளங்குகிற தெய்வீகம் மிகுந்து வாழ்க!



# திருவாரூர் மடப்புரம் ஸ்ரீ குரு தெட்சிணா மூர்த்தி சுவாமிகள்

எப்புறமும் கணக்கின்றி இயற்கை அன்னை
எழிலோடு பெருவளங்கள் குவித்திருக்கும்
ஒப்பரிய சோழ வள நாட்டின் கண்ணே
உயர்பதியாம் கீழ் ஆலத் தூரில் வாழ்ந்த
நற்பெரியா ரானசிவ சிதம்ப ரத்தார்
நாயகி மீ னாம்பிகையோ டின்றெ டுக்க
இப்புவியை உய்விக்க இங்கு வந்தீர்
எத்தனையோ அற்புதங்கள் புரிந்தி ருந்தீர்!

திருவண்ணாமலை இறையை நோக்கிச் செய்த
திருத்தவத்தால் அவதரித்த கார ணத்தால்
திருநாமம் உமக்கருணா சலமென் றிட்டுத்
தேடரிய செல்வமென வளர்த்தார் பெற்றோர்.
சிறுவயதில் விளையாட, உணவு கொள்ளச்
சிந்தையிலே சற்றேனும் கருதி டாமல்
அருளிறைவன் திருவடியை நிதமும் எண்ணி
அமைதியுடன் நிட்டையிலே அமர்ந்தி ருந்தீர்!

ஏதொன்றும் பேசாமல் இருந்த உம்மை
ஈன்றெடுத்த தாய்தந்தை தம்த வத்தில்
கோதொன்று நேரந்ததுவோ என்றே அஞ்சிக
குமைந்து மலைக் கொழுந்தவனைத் துதித்தி ருந்தார்!
யாதொன்றும் குறையின்றி அடியார் தம்மை
ஆதரிக்கும் பேரிறைவன் ஆண்டி போல
நூதனனாய் நும் பெற்றோர் தம்பால் வந்து
நொந்தமனம் தெளிவடைய வழிவ குத்தான்.

பிள்ளையிடம் பேசிடுக என்று வந்த
பெருந்துறவி கூறியதும் அன்புத் தந்தை
"தெள்ளமுதே ! என்னினிய செல்வச் சேயே!
திருவிழிகள் மூடியவா றிருப்ப தேனோ?
சொல்லுக நீ " எனச்சொல்ல வாய்தி றந்து
"சும்மாநான் இருக்கின்றேன்" என்று சொன்னீர்!
வெல்லமென உம் மொழியை நுகர்ந்த பெற்றோர்
விண்ணேறி மனச்சிறகால் பறக்க லானார்.

"சும்மாதான் இருக்கின்றேன்" என்று ரைத்த
தூயவனே யாரோ நீ? எமக்கெ டுத்துச்
செம்மையுடன் செப்பும்" எனத் துறவி கேட்க
"நீயே நான்–நானேநீ" எனப்பு கன்றாய்!
அம்மையைப்பர் "சத்தியமே" என இயம்பி
ஆண்டியுரு தனைமறைக்க, வியந்த வண்ணம்
இம்மேன்மை நன்குணர்ந்த பெற்றோர் உம்மை
எல்லையிலாப் பக்தியுடன் போற்றி செய்தார்.

தெய்வநிலை எய்திவிட்ட தன்மை யாலே
செயற்கரிய பலசெயல்கள் செய்தி ருந்தீர்!
பொய்யான சகதியிலே புரளா திந்தப்
புவிமீளும் நன்னெறியைப் புகன்றி ருந்தீர்!
செய்யதிரு வடிநோகப் பலதி சைக்கும்
சென்றுமிக நலம்சேர அருள்பு ரிந்தீர்!
வையமிதில் வாழ்கின்ற மக்களுக்கு
மனக்கவலை மாற்றுமொரு மருந்தாய் நின்றீர்!

நாளைக்கு நடப்பதனை இன்றே கூறும்

நல்லதொரு சக்தியினைப் பெற்றி ருந்தீர்!

மூளைக்குக் கோளாறு வந்த பெண்ணை

முழுத்தெளிவு பெறுமாறு நோக்கி நன்றீர்!

மாளற்குத் திசைமாறிச் செல்லு கின்ற

மானுடத்தைக் காப்பாற்றும் மனத்தால் ஈசன்

தாளுக்குச் சென்றடையும் சூட்சு மத்தைத்

தடையின்றித் தக்கபடி உபதே சித்தீர்!

பூட்டியதோர் இல்லத்துள் நெருப்பில் சிக்கிப்

பொசுங்கிவிட இருந்ததொரு குழந்தை தன்னை

வாட்டமுறா வகையினிலே காத்துத் தந்தீர்!

மாண்டவனை மறுபடியும் எழுப்பித் தந்தீர்!

கேட்டவர்கள் கேட்டபடி அருள்வ ழங்கிக்

கீரத்தியெனும் மலைமேலே அமர்ந்தி ருந்தீர்!

பாட்டறிந்த புலவரெலாம் உம்மைப் போற்றிப்

பாடுகிற பெருமையினைப் பெற்றி ருந்தீர்!

சித்தூரைச் சார்ந்தவராம் சோம நாதர்

தீராத குன்மமெனும் நோயி னாலே

மெத்தவுமே துன்புற்றுச் சிதம்ப ரத்தில்

மேடையிலே ஆடுகிற ஈச னாரைப்

பக்தியுடன் தொழுதிருந்தும் நோய்தீ ராமல்

பாடுபட்டுத் தன்னுயிரைப் போக்கிக் கொள்ளும்

அத்தருணம் அசரீரி மூலம் அந்த

ஆண்டவனும் நோய்தீரும் மார்க்கம் சொன்னார்

திருத்தலமாம் ஆரூருக் கேகி ஆங்கு
தெட்சிணா மூர்த்தியினைத் தெரிசித் தாயேல்
வருத்தும் நோய் மறையுமென இறைவன் சொல்ல
வார்த்தையதன் படியே அச் சோம நாதர்
விரித்தழகு தெளித்திருக்கும் திருவா ரூரில்
விண்முட்டும் ஆலயத்தின் மூர்த்தியாக
இருந்தருளும் தெட்சிணா மூர்த்தி பாதம்
இதயத்தில் இருத்திமிகத் தொழுதி ருந்தார்.

என்றாலும் நோய்தீராக் கார ணத்தால்
எதுசெய்வ தெனஅறியா தேங்கி நிற்க
நன்றான நடராஜர் கனவில் தோன்றி
"நாம் சொன்ன தெட்சினா மூர்த்தி வேறு
சென்றுபார் தெருவினிலே திரிவான்" என்னத்
தேடிஉமைத் தெரிசித்த சோம நாதர்
கொன்றிருந்த நோய்தீர்ந்தார்– அன்று தொட்டுக்
குருதெட்சி ணாமூர்த்தி எனும்பேர் பெற்றீர்

திருவாரூர் மடப்புரத்தில் வீற்றிருக்கும்
தெட்சிணா மூர்த்தியெனும் தேவ ரீரே!
பெருவாரி யாகநலம் பெருக்கி நின்று
பேருலகில் ஆன்மிகநல் ஒளிநி றைத்த
திருநாடு பாரதம் இன் றிருளில் சிக்கித்
திணறுசிற ஒருநிலையை மாற்று தற்கு
வருமாறு நுமை வேண்டி வணங்கு கின்றோம்!
வந்தெங்கள் நெஞ்சத்தில் ஒளிநி றைப்பீர்!



# திருவாடுதுறை ஆதீனம்

திருக்கயிலை மலையினிலே அஞ்ஞானம் நீக்கித்
தெளிவருளி மெய்ஞ்ஞானம் திகழ்விக்கும் ஈசன்
அருமையுள கல்லால மரத்தின்கீழ் வீர
ஆசனத்தில் தென்திசையைப் பார்த்தபடி இருக்க,
புரியாத பொருள்முற்றும் புரியவைக்கும் அவனைப்
போற்றும் உயர் மந்திரமாம் ஓம்நமசி வாய
விரிவானம், மண்ணுலகம் எங்கணுமே ஒலித்து
வியனார்ந்த புனிதத்தை விளைத்ததுகாண் ஆங்கே!

சிவஞானம் அதுகுறித்த தத்துவங்கள் யாவும்
தெரிந்துகொள்ள விருப்புற்ற நந்திதேவர் வேண்ட
உவகையுடன் ஸ்ரீகண்ட பரமசிவம் அவற்றின்
உண்மைப்பொருள் என்னவென விளக்கிஅருள் புரிந்தார்.
சிவம் என்றால் என்றைக்கும் நிலைத்திருக்கும் ஒன்று;
தெரிந்துகொளல் அது ஞானம். தெளிவுறுதல் போதம்.
தவமுடைய அருள்நந்தி தேவரிதை உணர்ந்து
சனற்குமார முனிவர்களுக் குபதேசம் செய்தார்.

சனற்குமாரர் பின்னர்இதைத் தக்கதெனக் கருதிச்
சத்யஞான தரிசினிகள் என்பவருக் கருள
மனமகிழ இதனை அவர் பரஞ்சோதி என்னும்
மாமுனிவர்க் குபதேசம் செய்துவைக்க லானார்!
நனிதிகழும் பரஞ்சோதி முனிவர்ஒரு தினத்தில்
நடுவான வீதியிலே போகின்ற சமயம்
இனியவளம் குலுங்குதிருப் பெண்ணாட கத்தில்
எழிற்குழந்தை ஒன்றுசிறு தேர்உருட்டக் கண்டார்!

அச்சுதக் களப்பாளர் பெற்றெடுத்த பிள்ளை
யானதிரு வெண்காடர் விளையாடும் வேளை
உச்சியிலே சென்றபரஞ் சோதிமுனி அவரை
உற்றுணர்ந்து பக்குவத்தைக் கண்டிறங்கி வந்தார்.
சச்சிதா னந்தசிவ னிடத்திருந்து பாய்ந்த
சத்தொளிரும் ஞானஊற்று பரஞ்சோதி வழியே
விச்சைநிறை வெண்காடர் தனைநோக்கிப் பாய்ந்து
மெய்ப்பொருளை அவர்உணர முற்றுமுத வியது!

பொருள்நிறைந்த மனத்தோடு பரஞ்சோதி முனிவர்
பொங்கிவரும் மெய்ஞ்ஞான நீர்வளத்தில் நிறைய
இருள்மறைந்து நொடிப்பொழுதில் எங்கேயோ ஓடி
இருக்குமிடம் தெரியாமல் மாயட்டும் என்றும்
மருள்நிறைந்த மறைப்பெல்லாம் மறையட்டும் என்றும்
மனங்கனிய மகவதனை நோக்கியருள் நல்கி
அருள்நிறைந்த சிவஞான போதமதும் விளக்கி
அன்புடனே மெய்கண்டார் எனப்பெயரும் இட்டார்.

சிவஞான போதத்தை மெய்கண்ட தேவர்
சிறப்பொளிரும் அருள்நந்தி சிவாச்சாரி யார்க்கும்
தவமுயரும் மறைஞான சம்பந்தர் அவர்க்கும்
தனிப்புகழ்சேர் திருக்கொற்ற வன்குடியைச் சார்ந்த
சிவநெறியார் உமாபதி சிவாச்சாரி யார்க்கும்
தெளிவுறவே அறிவித்துத் திகழுமொளி விரித்தார்.
இவர்களினால் சைவநெறி மண்ணுலகில் மிகவும்
ஏற்றமுறத் தழைத்தினிமை பெய்திருந்த தம்மா!

அருளாள ரானஉமா பதிசிவமும் மிக்க
அன்புடனே அருள்நமசி வாயருக்கு நல்ல
குருவாக இருந்துசிவ ஞானம்உணர் வித்துக்
கும்பிட்டு வந்தசிற்றம் பலஉடையார் தமையும்
திருமிகும்அம் பலவாணர் தமையுமிசைந் தளித்துத்
தினந்தோறும் பூசனைகள்செய் எனவும் சொன்னார்,
அருள்நமசி வாயரின்நற் சீடன்எனத் திகழ்ந்த
அரியசிவப் பிரகாசர் பிறகவற்றைப் பெற்றார்.

நான்மறையும் விளங்குகிற மறைக்காடு தனிலும்
நலம்நிறையும் ஆவடுதண் துறையினிலும் நமது
வான்புகழும் முனிவர்சிவப் பிரகாசர் வந்து
வையகத்தில் உள்ளவரை வாழ்விக்க எண்ணி
ஊனமிலா வகையினிலே திருமடங்கள் நிறுவி
உத்தமனின் திருவடியை எப்பொழுதும் பரவித்
தேன்தமிழின் வழியாகச் சிவஞானம் அதனைச்
செம்மையுற மானுடர்க்குத் தெரிவித்தி ருந்தார்.

வீழாத வளம்பொங்கித் திகழ்ந்திருந்த பதியாம்
வியன்மிக்க திருமூவ லூர்தன்னில் அந்நாள்
வேளாள மரபினிலே வந்தஒரு பக்தர்
வெகுகாலம் பிள்ளைப்பே றில்லாத குறையால்
ஆளாகிப் புள்ளிருக்கு வேளூரான் அவன்பால்
அகமுருகி வேண்டியதன் அருமையத னாலே
தாழாத பெருமைகளைத் தன்னிடத்தே கொண்ட
தங்கமக வொன்றையவர் பெற்றெடுத்து மகிழ்ந்தார்.

பெற்றெடுத்த பிள்ளையவன் வைத்யநாதன் என்னும்
பேரோடு சிவபக்தி பூண்டொழுகும் நாளில்
உற்றவொரு கருணையினால் ஆதிசைவர் போலே
உருவெடுத்துச் சிவபெருமான் அவன்முன்னம் தோன்றி
அற்புதமாய் அருஉருவத் திருமேனி தாங்கி
அமைந்திருந்த சிவலிங்க மூர்த்தியொன்றைத் தந்து
குற்றமற வழிபாடு செய்கின்ற முறையும்
கூறியருள் புரிந்தெங்கோ சென்றுமறைந் திட்டார்.

உத்தமனைத் தவறாமல் வழிபட்ட தாலே
உளப்பக்கு வம்பெற்ற பிள்ளைஅவன் தன்னைச்
சித்தர்சிவப் பிரகாசர் திருமூவ லூர்க்குச்
சென்றிருந்த போதினிலே நேர்முகமாய்க் கண்டார்.
பக்தியிலே திளைத்ததனால் பக்குவத்தை உற்ற
பையனவன் சித்தர்மனம் முற்றும்கவர்ந் திடவே
மெத்தஉயர் மெய்ஞ்ஞானப் பிள்ளைஎன ஏற்று
மிகஅன்பாய்த் தம்முடனே அழைத்துவர லானார்.

திருவெண்காட் டுப்பதியில் ஒருகுகைக்குள் சென்று
சித்தரவர் சிவானந்த நிட்டையிலே அமர்ந்தார்.
பிறகுதிருப் பார்வையினால் வைத்யநாத னுக்குப்
பேசரிய ஞானதீட்சை செய்துவைத்து மேலும்
குருவுடைய திருப்பெயரால் நமச்சிவாயம் என்று
கோலமிகும் தீட்சாநாமம் செய்தாசி வழங்கி
அருமைமிகும் சீடரோடு நமச்சிவாயம் தன்னை
அழைத்துக்கொண் டாவடுதெண் துறைவந்து சேர்ந்தார்.

அப்பதியில் கோயில்கொண் டமர்ந்தருளைப் பொழியும்
ஐயனவன் மாசில்லா மணிப்பெருமான் தனையும்
ஒப்பில்லா முலைஅம்மை திருவடியும் அருளை
உவந்தளிக்கும் திருமாளி கைத்தேவர் தனையும்
செப்பரிய பக்தியுடன் வணங்கியபின் துறைசைத்
திருமடத்துத் தேகிஇறை பணிகளினைத் தொடர்ந்தார்.
எப்பொழுதும் இவ்வுலகில் சைவநெறி தழைக்க
இதயத்தில் எண்ணியதற் கேற்றவகை செய்தார்!

திருமூலர் எனும் சித்தர் சிவயோகம் தன்னில்
திளைத்திருந்து நல்லதிரு மந்திரத்தைத் தந்த
பெருமையினைக் கொண்டதுடன் நவகோடிச் சித்தர்
பிறங்குநலம் விளைத்தபதி ஆவடுதண் துறையாம்!
திருஞான சம்பந்தர் திருப்பதிகம் பாடிச்
சீரொளிரும் பொற்கிழியைப் பெற்றதுவும் ஞானத்
திருமாளி கைத்தேவர் திருவடிகள் நோகத்
திருவீதி நடந்ததுவும் அப்பதியில் தானே!'

இத்தகைய சிறப்புடைய துறைசையினி யார்க்கும்
எழில்மிக்க சிவஞானச் செல்வத்தை வழங்கி
மெத்தஉயர் அருளாட்சி தனை உலகில் புரிந்து
மேலான சிவராஜ தானிஎன விளங்கி
எத்திசையும் புகழ்ந்தேத்தச் சிவஞானச் செங்கோல்
இன்பமுறச் செலுத்திடுமோர் பூமிஎனக் கருதி
அத்தலத்தில் சிவராஜ தானியினை நிறுவ
அருட்சித்தர் ஆனசிவப் பிரகாசர் விழைந்தார்.

தன்னுடைய அறையினிலே ஓரிடத்தை அமைத்துத்
தகவுடைய சீடர்நமச் சிவாயரையிங் கிருத்தி
நன்முறையில் அருளாட்சி மேற்கொண்டு நடத்தி
நானிலத்து மாந்தருக்குச் சிவஞானத் துதியை
அன்புயர வழங்கிவர ஆசியினைச் சொல்லி
அங்கிருந்து மறைக்காடு தனைநோக்கிச் சென்று
தன்குருவின் பிரிவாலே நமச்சிவாயர் உள்ளம்
தவித்தார் என் றாலும்அருள் ஆட்சிசெய முனைந்தார்.

ஞானகுரு வானசிவப் பிரகாசர் தந்த
நல்லழகுத் திருச்சிற்றம் பலஉடையார் தனையும்
ஊனமிலா உயர்வதனை உளங்கனிய அருளும்
உத்தமர்அம் பலவாணர் என்னுமிறை தனையும்
கோன்அவனே ஆதிசைவர் வடிவினிலே வந்து
கொடுத்தஅரும் சிவலிங்கம் தனையும் நிதம் வணங்கி
வானுலகாய் மண்ணுலகை மாற்றுதற்கு வல்ல
மாண்புடைய சைவநெறி வளர்த்திருக்க லானார்.

தாரணியில் தனக்குப்பின் அருளாட்சி செய்யத்
தக்கவர்என் றுளம்கருதித் தன்னினிய சீடர்
சீருயர் அம் பலவாண தேசிகரை ஆட்சித்
திருப்பீடம் தனில்அமரச் செய்தெங்கும் நிறைந்த
பேரிறைவன் ஆனசிவ பரம்பொருளி னோடு
பேதமிலா வகையினிலே கலந்துசிவம் ஆனார்!
பூரணமாய் விளங்குமவர் அருளின்ஒளி இந்தப்
பூதலத்தில் வழிவழியாய் வந்து நலம் சேர்க்கும்!

அண்டங்கள் அத்தனையும் படைத்தவனின் அருளும்

அருளாளர் நமச்சிவாய மூர்த்திகளின் அருளும்

மண்டலத்தில் சிவஞானச் செல்வத்தை வழங்கி

மாபெரிய பணிபுரியும் துறைசையா தீனம்

எண்டிசையும் புகழ்விளங்கி எந்நாளும் மிக்க

ஏற்றமுறத் திகழவழி அமைக்குமிது நிசமே!

தண்டனிட்டு வணங்கிடுவோம் குருபிரான்கள் தம்மை!

சந்ததமும் ஒளிபெருக்கி வாழியவே வாழி!

❄ ❄ ❄ ❄

# சதாசிவப் பிரம்மம்

மீன்ஆட்சிக் கொடிதூக்கிப் பாண்டி வேந்தர்
மேலான அறம்வளர்க்கும் மேன்மை பெற்று,
மீனாட்சி தடாதகையாய் வந்த தாலே
வெள்ளிமலை நின்றுசொக்க நாதர் வந்து
தானாட்சி முடிசூடி அறுபான் நான்கு
தனிவிளையா டலைப்புரிந்த மதுரை ஊரில்
வானாட்சி தனைத்துறந்தே எம்மை ஆள
வந்துதித்த சதாசிவத்தை வணங்கி வாழ்வாம்!

அந்தணராய் அறம்வளர்த்த சோம நாதர்
அகத்தரசி பார்வதிபார் வதியே போலும்
சுந்தரியோ டில்லறமேற் கொண்ட நாளில்
சொந்தமகன் இல்லையெனத் தலங்கள் தோறும்
மந்திரங்கள் பலசெபித்துத் தீர்த்தம் ஆடி
வளங்கொள்இரா மேசுரத்து வள்ளல் பாதம்
சிந்தையுறத் தெரிசித்த பேற்றி னாலே
திருமகவாய் வந்தசதா சிவமே போற்றி!

சிவராம கிருஷ்ணன்எனும் நாமத் தோடு
சிவனருளும் வரமான பிட்சை யாலே
அவதரித்த தன்மையினால் பிட்சு குப்தன்
ஆனதிருப் பெயரினையும் அமையப் பெற்றாய்!
தவவலியால் பலகலையும் தானே கற்றுத்
தந்தையிடம் ஆன்மிகசா தனைப யின்றே
உவமானம் இல்லாத மெய்ஞ் ஞானத்தின்
உருவான சதாசிவமே போற்றி! போற்றி!

சிறுவயதில் திருமணந்தான் செய்த போதும்
சிற்றின்பச் சேற்றினிலே சிக்கி டாமல்
பெருகிவரும் இறையுணர்வில் உள்ளம் தோயப்
பேரின்ப நிலைமறவா துறையும் நாளில்
ஒருதினம்நல் உண்டிவரத் தாழ்தல் கண்டே
ஓஓஇல் லறம்என்ப தின்னல் ஒன்றே
தருவதுதான் போலுமெனத் துணிந்து அப்போதே
தவத்துறவு பூண்டசதா சிவமே போற்றி!

வாதினிலே வெல்வதொன்றே பொழுது போக்காய்
வாழ்வினிலே கொண்டதனை உணர்ந்த ஆசான்
"மேதினியில் பிறர்வாயை அடக்கக் கற்றாய்,
வினயமொடுஉன் வாயடைக்கக் கற்ப தெந்தப்
போதினிலே" என்றறிடித் துறையி னாலே
பூவான வாய்குவிந்து மௌனியாய், மண்
மீதினிலே காடுமலை நதிகள் ஏகி
மெய்த்தவம்மேற் கொண்டசதா சிவமே போற்றி!

காவிரிக்கும் காவிரித்தாய் வடக்குத் தெற்காய்க்
கதிர்விரியப் பாய்கின்ற கரூரின் ஓர்சார்
பூவிரிக்கும் பொழில்சூழும் நெடூரில் இன்பம்
பொங்கும்அமை திச்சூழல் மனத்தை ஈர்க்க
நாவிருக்கு மந்திரத்தைச் செபித்துப் பன்னாள்
நலமிருக்கும் மாதவத்தால் சமாதி கூடித்
தேவருக்கும் அறியஇய லாத எட்டுச்
சித்திகள்கை வந்த சதா சிவமே போற்றி!

அவதூத நிலையடைந்து காற்றி னைப்போல்
அறக்காய்ந்த சருகினைப்போல் அயரா தோடிக்
கவனமுடன் மூச்சடக்கிச் செத்தா ரைப்போல்
கருமணலில் புதையுண்ட தவத்தோர் வேந்தே!
புவனமுழு வதும்அலைந்து திரிந்த போது
புதுக்கோட்டை அடைந்தரசன் போற்றி செய்ய
மவுனமொழி யால்ஞானம் உபதே சித்து
வரமளித்த சதாசிவமே! போற்றி! போற்றி!

உலகுபுகழ் ஆத்துமவித் யாவி லாசம்
யோகசுதா கரத்தொடுசித் தாந்த கல்பம்
நலப்பிரம சூத்திரத்தின் விளக்க மென்னும்
ஞானவிளக் கால்உள்ளத் திருளை ஓட்டிக்
குலதெய்வம் எமக்காகி இதயம் என்னும்
கோயிலிலே குடிகொண்ட குணத்தின் குன்றே!
மலையெனவே குவிந்திருக்கும் பாவப் பஞ்சை
மாய்த்தெரிக்கும் தவக்கனலே போற்றி! போற்றி!

ஒருகரத்தை ஒருதுருக்கன் வெட்டும் போதும்
உணராமல் சென்றனையே – துருக்கன் அஞ்சி
இருகரத்தைக் குவித்திறைஞ்சிக் கொடுத்த கைதான்
இருந்தஇடத் தினில்ஒட்டிக் கொண்ட போதும்
ஒருநிலையில் சமநிலையில் உள்ளம் வைத்தே
உரியஇன்ப துன்பமொன்றும் உணர்கிலாத
பெருநிலையை உன்போல யார்அ டைந்தார்?
பெருமைபெறு சதாசிவஎம் பிரானே போற்றி!

வேங்கடமா மலைப்பெருமாள் திருத்தான் தோன்றி
　　வெற்பினிலே வந்துவரம் கொடுக்க வைத்தாய்!
திங்ககற்றும் பிரகதாம்பாள் தனது பாத
　　சேகரஎன் றெழுதிமணி மாலை தந்தாய்!
பாங்குடைய புன்னைவனக் காட்டில் மாரி
　　பார்வதிக்குத் திருக்கோயில் படைக்கச் செய்தாய்!
ஈங்குனது பெருமைசொல எவரால் ஆகும்!
　　இனியசதா சிவப்பிரம இறையே போற்றி!

உயிர்ப்பறவை பறக்கின்ற நேர மீதென்(று)
　　உணர்ந்ததன்பின் ஒருகுகையை அமைக்கச் செய்தே
உயிரடங்க ஒருஜீவ சமாதி கூடி
　　உடல்உதறிச் சென்ற இடம் ஒளிவி ளங்க
இயற்கையில் ஓர் வில்வமரம் முளைத்தெழுந்த(து)
　　இறும்பூதென் றுலகுதொழ நெடூரில் பாவ
வெயிற்குநிழ லாய்ப்பிறவி மருந்தாய் வாழும்
　　மெய்ப்பொருளே சதாசிவமே போற்றி! போற்றி!

வெட்டவெளி தனில்முளைத்தே எழுந்து நின்ற
　　வில்வமரத் தடியினிலே காசி வாசி
இட்டமுடன் ஏந்திவந்த சிவலிங் கத்தின்
　　இன்னுருவம் அருள்புரிய பக்தி செய்வோர்
பட்டதுயர் அத்தனையும் கதிரின் முன்னம்
　　பனிமறைதல் போல்மறையச் செய்து நித்தம்
கொட்டுகிற நினதருளின் மழைவெள் ளத்தில்
　　குளிப்பாட்டும் நெடூரில் வளர் கோவே போற்றி!

* * * *

# அகண்ட பரிபூரண சச்சிதானந்த சற்குருபிரான் போற்றி! போற்றி!

எழிலுயர மானுடம் இவ்வுலகம் தன்னிலே
என்றுமே திகழும் வகையில்
இனிதான அறம்பொருள் இன்பம்நல் வீடென்ன
என்பதை விளக்கி நின்று
சுழலுமொரு பூமியில் சச்சிதா னந்தமே
சொல்லுமொரு கட வுள்! அதுவே
சுடர் வீர சைவமாம்! சீவனைச் சிவமாக்கும்
தொழிலது புரியும் எனவே
பழகுதமிழ்ப் பண்ணிலே பாமரரும் அறிகின்ற
படிகோடி தத்து வங்கள்
பாங்கமையக் கூறும்உன் பெருமைதனைப் பேசிடப்
பைந்தமிழில் வார்த்தை உளதோ?
அழகுகுரு க்ஷேத்திரம் தனில்வாழ்ந்து புவியெலாம்
அன்புநதி பாய்ச்சி நின்ற
அகண்டபரி பூரண சச்சிதா னந்தசற்
குருபிரான் போற்றி போற்றி

உன்பாதம் நோவதை விரும்பாத அன்பர்கள்
காலணிகள் தந்த காலை
உடல்மீது பற்றுளோர்க் கல்லவோ அவைதேவை
ஒரு பொழுதும் எனக்கு வேண்டாம்

என்றுரைத் தாடைகள் இல்லாத கௌபீன

ஆண்டியாய் வாழ்ந்தி ருந்தாய்!

இனிதருளும் வைத்தியரின் சந்நிதியில் வந்ததும்

அவதூத ராய்ம லர்ந்தாய்!

நன்றுலகில் இருக்கின்ற திருத்தலங்கள் யாவையும்

நாடிநீ சென்று வந்தாய்!

நல்லரவம் தீண்டிய ஆட்டினுக் குயிரூட்டி

அற்புதம் காட்டி நின்றாய்!

அன்றுநீ சமாதியில் அடங்கிய போதிலோர்

அகண்டஒளி பரவ வைத்தாய்!

அகண்டபரி பூரண சச்சிதா னந்தசற்

குருபிரான் போற்றி போற்றி!



# தருமை ஆதீனக் குருஞானசம்பந்தர்

பார்போற்றும் இனியதிருப் பாவை செய்த
　　பைந்தொடியாள் வந்துதித்த கார ணத்தால்
சீர்பூத்து வளமோங்கி விளங்கி நின்ற
　　ஸ்ரீவில்லிப் புத்தூரில் திகழ்ந்தி ருந்த
கார்காத்த வேளாளர் மரபில் வந்த
　　கற்றறிந்த சுப்ரமண்ய பிள்ளை யாரும்
பேர்காக்கும் மீனாட்சி அம்மை யாரும்
　　பெற்றமகன் ஞானசம் பந்தர் வாழ்க!

திங்களெனும் திருநாளில் பிறப்பெ டுத்துச்
　　செந்தமிழும் சிவநெறியும் பதினா றாண்டு
பங்கமறக் கற்றதுடன் ஆக மங்கள்
　　பயன்மிகுந்த வடமொழிநூல் யாவும் தேர்ந்து
பொங்கிவரும் நல்லறிவுப் புனல்வெள் ளத்தில்
　　பொழுதனைத்தும் திளைத்திருந்த புதல்வன் தன்னை
அங்கயற்கண் ணம்மையுடன் சொக்கர் வாழும்
　　அழகுநகர் திருமதுரைக் கழைத்துச் சென்றார்.

நல்லுயிர்க்குத் தாய்தந்தை எனவி ளங்கும்
　　நாயகியை, நாயகனைக் கண்டு நெஞ்சக்
கல்லுருகிக் கண்வழியே நதியாய் ஓட,
　　காசியினில் தான்கருதும் பெற்றோ ராகச்
சொல்லரிய அன்பருளும் கயற்கண் ணம்மை
　　சொக்கலிங்கர் தமைவரித்துக் கொண்ட பின்னர்
புல்லுடலின் தாய்தந்தை யோடு மீண்டும்
　　போவதற்கு மறுத்துரைத்தார் ஞானச் செல்வர்!

மாமதுரைக் கோயிலுக்குள் அமைந்த பொற்றா
மரைக்குளத்தில் நீராடி நாளும் தெய்வ
நாமமெலாம் பக்தியுடன் ஓதி நின்ற
நம்மருமைக் குருஞான சம்பந் தர்க்கே
ஆம், ஒருநாள் அசரீரி வாக்குக் கேட்க
அக்குளத்துள் அவர்மூழ்கிப் பெட்டி ஒன்றை
ஏமமுடன் வெளிக்கொணர்ந்தார்! அதற்குள் ஈசன்
இருப்பிடங்கொண் டிருந்திட்டான்! வியப்பே அன்றோ.

செந்தமிழின் பண்பாடி உலக மெங்கும்
சிவநெறிநன் றோங்கிடவே தொண்டு செய்த
சுந்தரரால் புகழ்விரியும் திருவா ரூரில்
தூயவராய்த் திகழ்ஞானப் பிரகா சர்பால்
அந்தமிலாச் சிவஞான உபதே சத்தை
அடைகவென எம்பெருமான் எடுத்துச் சொல்ல,
சிந்தையிலே நிறைந்திருந்த பக்தி யோடு
சென்றடைந்தார் குருவாழ்ந்த திருப்ப திக்கே!

குருஞான சம்பந்தர் வருகை பற்றிக்
கூறியநல் அசரீரி மொழியைக் கேட்ட
அருள்ஞானப் பிரகாசர் அன்பு காட்டி
அஞ்ஞான இருள்நீக்கச் சித்தம் கொண்டே
ஒருதிங்கள் கிழமையிலே கோயி லுக்குள்
உயர்தெட்சி ணாமூர்த்தி திருமுன் நின்று
பொருளோங்கும் சிவஞான சித்தி யாரால்
போதித்தார் முப்பொருளின் இயல்பை எல்லாம்.

பதியோடு பசுபாச இயல்ப னைத்தும்
பழுதறவே உணர்ந்தறிந்த ஞானப் பிள்ளை
அதிஅன்போ டாசானின் அளவில் லாத
அருளினையும் உயர்வினையும் வியந்து போற்றி
விதிமுடியும் நிலைவரினும் குருபி ரானின்
மேன்மைமிகு திருப்பெயரே அன்றி வேறு
கதியறியேன் எனத்தமிழில் முப்பத் தாறு
கவிமணிகள் கோத்தரிய மாலை செய்தார்.

வித்தையிலே உயர்ஞானா சிரியர் சொன்ன
மேலான நல்வசனம் உணர்ந்த தாலே
முத்திதனக் குறுதியென முடிவு செய்தார்!
முதல்வனவன் தனையன்றி வேற னைத்தும்
மித்தையெனக் கண்டின்ப வாரி யுள்ளே
மிகத்திளைத்தார்! மேன்மேலும் மேன்மை எய்திச்
சித்தியெலாம் கைவரவே பெற்று ஞானச்
செல்வரவர் புவிவாழத் தாமும் வாழ்ந்தார்.

குருநாத ரோடுதிரு வாரூர்க் கோயில்
கும்பிட்டுத் திரும்புகையில் விளக்கை ஏந்தி
வரும்ஆள்அங் கில்லாத கார ணத்தால்
வளர்ஞானச் செல்வரதை ஏந்திச் சென்றார்!
திருவாசல் அருகினிலே சென்ற போது
'நிற்க' எனக் குருநாதர் செப்பக் கேட்ட
குருஞான சம்பந்தர் விளக்கை ஏந்திக்
கொண்டங்கே அசையாமல் நின்று விட்டார்.

இரவெல்லாம் வான்பிளந்து மழைபெய் தாலும்
இடம்பெயரா தப்படியே நின்றி ருந்த
குருஞான சம்பந்தர் மேற்ப டாமல்
கோலளவுக் கப்பாலே பெய்த தாலே
ஒருசிறிதும் நனையாமல் விடியும் மட்டும்
ஒளிகாட்டும் விளக்கோடு நின்றி ருந்த
அரியவொரு மாணவனின் திறத்தை எண்ணி
ஆசிரியர் மனம் விம்மி அதிச யித்தார்.

எல்லார்க்கும் அருளொளியை வழங்கு கின்ற
ஏற்றமிகு குருநாத ராகும் தன்மை
நல்லவிதம் நீரடைந்தீர் ஆத லாலே
நாடிவரும் பக்குவம்சேர் அன்ப ருக்குத்
தொல்லுலக வினைநீங்கி உய்யும் மார்க்கம்
சொல்லுதற்குத் திருத்தரும புரத்தை நோக்கிச்
செல்லுகவென் றுரைசெய்து விடைகொ டுக்கச்
சித்தமது நற்பேறென் றிவரும் சென்றார்.

தருமமது புரக்கும்எம தரும ராஜன்,
தமிழ்தந்த குறுமுனிவன், தேவர் வேந்தன்
அருமையுள எழுமாதர் களில் ஒருத்தி
ஆண்டவனை வழிபட்ட சிறப்பு மிக்க
திருநகரம் தருமபுரம் அடைந்து ஞானச்
செல்வரவர் தெய்வதரி சனம்செய் தாங்கே
ஒருமடத்தை அழகுறவே அமைத்துக் கொண்டிவ்
வுலகத்தில் அருளொளியைப் பரவச் செய்தார்.

நற்றமிழில் அருங்கவிதை பாடிச் சொக்க
நாதரவர் திருவடியைப் பரவி நின்றார்.
சிற்பரனின் திருவருளை விளக்கு தற்குச்
சிந்தையிலே தெய்வமணம் கமழும் வண்ணம்
அற்புதநல் நிகழ்ச்சிகளை உலக மக்கள்
அதிசயிக்கும் விதமாகக் காட்டி நின்றார்.
முற்றுமுணர்ந் தொளிபெருக, ஆதீ னத்தின்
முதற்குரவ ரெனவிளங்கி வளர்ச்சி கண்டார்.

எட்டினிய அருள்ஞான நூல்கள் ஆக்கி
எட்டாத இறைவனடி எளிதில் யார்க்கும்
கிட்டுதற்கு வழியுரைத்த ஞானச் செல்வர்
கிழக்குதிக்கும் கதிரவனாய் ஒளிசேர்த் திட்டார்!
அட்டியின்றி உபதேச நெறிவி ளங்க
ஆனந்த பரவசதே சிகஸ்வா மிக்குத்
திட்டமுடன் பீடாதி பத்யம் தந்து
சிவபதத்தின் கீழ்ஜீவ சமாதி யானார்.

ஆனந்த பரவசரோ ஞான பீடம்
அமர்ந்திட்ட அந்நாளே சிவயோ கத்தில்
தான்ஒன்றி ஒருஜீவ சமாதி கூடித்
தம்குருவின் கோயிலுக்கு மேற்குட் கார
ஞானந்தான் வடிவான குருபி ரானார்
நற்சீவ சமாதிகளில் இருந்து போந்தோர்
ஈனம்தான் இல்லாமல் மரபு காக்க
இன்னொருவர்க் குபதேசம் செய்து வைத்தார்.

குருஞான சம்பந்தர் தொடங்கி வைத்த

குருசீட பரம்பரையால் இந்த மண்ணில்

அருள்ஞானம் எப்பொழுதும் ஒளியைச் சிந்தும் !

அஞ்ஞானம் மறைந்தோடும், தமிழ்மே லோங்கும்!

திருவாழும்! கலைவாழும்! வீரம் வாழும்!

சிந்தையிலே தெய்வநெறி பெரிதும் சூழும்!

பெருமானின் அருளாலே மேலும் மேலும்

பெருமையுடன் தருமபுர மரபு வாழ்க!



# பரமஹம்ஸர் போற்றிய ராமப்ரசாதர்

ஞாலம் இதனை நன்னெறியில்
நடத்திச் செல்லும் வழிகாட்டி!
கால விளிம்பைக் கடந்துலகில்
காணும் ஞானப் பேரிமயம்!

இருளில் உலகம் உழலாமல்
ஏங்கி உயிர்கள் அழியாமல்
அருளின் ஒளியை வரையாமல்
அள்ளிக் கொடுத்த ஒருவள்ளல்!

அன்பே நெஞ்சில் மலர்ந்திருக்க
அருளே செயலில் மிளிர்ந்திருக்
என்பே எனினும் பிறர்க்குதவும்
எண்ணம் நிறைந்த ஒரு முனிவர்!

சுகமே பெருக்கி மானுடரைத்
தூயவ ராக்கும் அவர்எவரோ?
பகவான் ராம கிருஷ்ணரெனப்
பகர்வதும் இங்கே அவசியமோ?

உலகைக் கவர்ந்த இவர் நெஞ்சை
ஒருவர் கவர்ந்தார் அவர்தானே
அலகில் ஜோதி ஆண்டவனை
அறிந்த இராமப் பிரசாதர்!

பரம ஹம்ஸர் நெஞ்சத்தில்
படர்ந்த பக்திக் கொடிவளர
உரமாய் ராமப் பிரசாதர்
உதவி புரிந்தார் எந்நாளும்!

அற்புத மான பாக்களினால்
அருள்மழை சிந்தும் ஆண்டவனின்
பொற்பத நலங்கள் பூரணமாய்ப்
பூவுல கறியச் செய்திருந்தார்!

இருநூற் றைம்பது ஆண்டுகள்முன்
என்றும் பொய்யாக் கங்கைநதிக்
கரையில் குமார ஹட்டிஎனும்
கிராமம் தனிலே அவர்பிறந்தார்!

மண்ணில் பானை வனைகின்ற
மனிதர் வாழ்ந்த ஊரதற்கு
இன்னும் ஒரு பெயர் ஹலிசாகர்
என்று விளங்கித் திகழ்ந்ததுவே!

புலமைச் செறிவைக் காட்டுகிற
போட்டிகள் அங்கே பலநிகழும்!
நலனைப் பெருக்கும் பரிசுகளை
நல்லறி வாளர்கள் பெற்றிடுவர்!

இத்தகு சிறந்த ஊரில்தான்
இராமப் பிரசாத், ராம்ராம்சென்
சித்தேஸ்வரி எனும் பெற்றோர்க்குச்
செல்வ மகனாய்ப் பிறந்திட்டார்!

வழிவழி யாகத் தாந்த்ரீக
மருத்துவத் தொழிலில், சமஸ்கிருத
மொழிநூல் களிலே புலமைதனில்
முதிர்ந்த குடும்பம் அவர் குடும்பம்!

பள்ளியில் ராமப் பிரசாதர்
பயின்றது காவ்யம், வியாக்கரணம்
தெள்ளத் தெளிந்த வடமொழியில்
சிறந்து விளங்கும் பலநூல்கள்!

பரம்பரை மருத்துவத் தொழிலதனில்
பற்றுச் சிறிதும் கொள்ளாமல்
விரும்பி வேற்று மொழிகளினை
மிகவும் கற்க முனைந்திட்டார்.

பத்தோ டெட்டு வயதேறும்
பருவக் குமரன் ஆனாலும்
சித்தம் உலக இயலதனில்
செல்லச் சிறிதும் விழையவில்லை!

மாற்று மருந்தாய்ப் பெற்றோர்கள்
மணம் செய்விக்க நினைத்தார்கள்!
ஏற்ற பெண்ணைப் பார்த்தார்கள்;
இருவர் கரமும் சேர்த்தார்கள்!

வாழ்கைத் துணையாய் வாய்த்திட்ட
மங்கை எழிலார் சர்வாணி
ஆழ்த்தும் இன்ப வெள்ளத்தில்
அமிழ மறுத்தவர் நெஞ்சம்!

க்ஷேம நலங்கள் குடும்பத்தில்
சேர்க்க விருப்பம் இல்லாமல்
தாமரை இலைமேல் தண்ணீர்போல்
தாரணி இதனில் அவர் வாழ்ந்தார்!

என்றும் நெஞ்சில் ஏதோவோர்
தயக்கம் நின்று நிலவியது!
இன்பம் கலந்த தெனும்வண்ணம்
இனிமை உணர உணர்த்தியது!

சிற்சில நாட்கள் சென்றதன்பின்
சீரிய ராமப் பிரசாதர்
அற்புத சக்தி மிளிர்கின்ற
அருள்நெறி யாளர் எனத்திகழ்ந்தார்!

அன்னை பெயரை அவர்கூவி
அழைத்து நெஞ்ச நினைவுகளை
முன்னே வைத்துப் பலபாக்கள்
மொழிவார் பக்திப் பெருக்கோடு!

கழுத்தள வுள்ள தண்ணீரில்
கங்கை நதியில் நின்றபடி
பழுத்த பக்திப் பாடல்களைப்
பரவச மாகப் பாடிடுவார்!

இன்னிசை அதுவும் கங்கைநதி
எழுப்பும் சலசல ஓசையதும்
ஒன்றிக் கலந்து சூழ்நிலையில்
ஓங்கிய புனிதம் உண்டாக்கும்!

ஐவகை மரங்கள் அமைந்துள்ள
அற்புத மான காவினிலே
தெய்வ தரிசனம் செய்திடவே
தீவிர சாதனை செய்திருந்தார்!

அரசு, வில்வம், நெல்லியுடன்
ஆலம், அசோக மரமைந்தும்
இருக்கும் புனித இடமதனில்
இறைவியை எண்ணித் தவமிருந்தார்!

பஞ்சம காரங்கள் என்பவற்றைப்
பயின்று தாந்தி ரீகமுறை
நெஞ்சம் உணர்ந்து சிறப்பாக
நித்தம் இறையை வழிபட்டார்!

உள்ளுக் குள்ளே உறங்குகிற
உன்னத குண்ட லினிசக்தி
மெள்ள எழும்பிப் பயன்நல்கும்
மேன்மை பெறவே வழிகண்டார்!

சித்தா சனத்தில் இருந்தபடி
தேவி தரிசனம் இவர்செய்ய
உத்தம மனைவி சர்வாணி
உதவி புரிந்தார் இவருக்கு!

தீபாவளி யாம் திருநாளில்
தெய்வம் காளியின் உருஅமைத்தே
ஆவா ஹனமே செய்திட்டார்
அன்பர் பலரை அழைத்திட்டார்!

பூசையில் வைத்த கலசத்தைப்
        பொழுது புலர்ந்ததும் தலைமேலே
ஆசையில் வைத்து நற்கங்கை
        ஆற்றை நோக்கி நடந்திட்டார்!

கழுத்தள வுள்ள நீருக்குள்
        கசிந்து நின்று காளியினை
வழுத்தும் நான்கு பாடல்களை
        மனமே உருகி இசைத்திட்டார்!

"என்மனம் தக்ஷிண காளியவள்
        எண்ணம் தனிலே நிலைத்துள்ளது!
என்வாழ் வின்று முடிகிறது!
        என்றன் ஊதியம் வழங்கிவிட்டேன்!"

இவ்விதம் சொல்லிய வண்ணமவர்
        இரண்டறக் கலந்தார் அன்னையிடம்!
செவ்விய வாழ்வை முடித்ததன்பின்
        சென்று மறைந்தார் கங்கையிலே!

ஐம்பெரும் பூதங்க ளாலான
        அழகு நிறைந்த உடம்பதுவோ
ஐம்பெரும் பூதங்களில் ஒன்றாய்
        அமைந்த நீருள் மறைந்ததுவே!

பொங்கிப் பாயும் கங்கைப்பெண்
        புண்ணியர் ராமப் பிரசாதின்
பங்கமில் லாத பக்தியினைப்
        பாடிய வண்ணம் ஓடுகிறாள்!

❄ ❄ ❄ ❄

# ஸ்ரீ ராம கிருஷ்ண பரமஹம்ஸர்

ஓயாத கவலையிலே மூழ்கி மூழ்கி
உருக்குலையும் மானிடர்கள் உயர்வை எய்தத்
தாயாகி வந்தருளைத் தந்த ஞான
சாகரமாய் திகழ்ந்திருந்த இராம கிருஷ்ணர்
தீயாகி வல்லிருளைத் தீய்த்த சீலர்!
செழுங்கருணை நதியாக வாய்த்த செல்வர்!
காயான நெஞ்சினையும் கனிய வைத்துக்
கடவுளிடம் அழைத்தேகும் அன்புத் தூதர்!

ஓங்கு புகழ் வங்கத்துக் கமார் புக்கூர்
உலகனைத்தும் நலமுறவே பெற்ற ளித்த
பாங்குயர்ந்த கதாதர் தான் பிற்கா லத்தில்
பரமஹம்சர் என விளங்கிப் பெருமை பெற்றார்!
ஏங்குமொரு மனத்துடனே எவர்வந் தாலும்
ஏற்றபடி கதை சொல்லி ஏக்கம் போக்கித்
தீங்கற்ற நிலையடையச் செய்து காப்பார்!
சிந்தையிலே அமைதியினைக் கொண்டு சேர்ப்பார்!

எத்தனையோ நதிகளிங்கு தோன்றி னாலும்
எத்திசையை நோக்கியவை பாய்ந்த போதும்
அத்தனையும் இறுதியிலே கடலில் தானே
அமைதியுடன் சங்க மிக்கும். அதைப்போலத்தான்
இத்தரையில் பலமதங்கள் இருந்த போதும்
இயம்புகிற வழி வேறாய் அமைந்த போதும்
அத்தனையும் கடவுளைத்தான் அடையும் என்ற
அறிவுரையை வழங்கியவர் பரம ஹம்சர்!

என்றாலும் அவர்வழியே நடக்கின் றோமா?

எம்மதமும் சம்மதமாய்க் கொள்கின் றோமா?

வென்றாள வேண்டுமெனும் எண்ணத் தாலே

வேற்றுமையை மேன்மேலும் வளர்த்து விட்டோம்!

நன்றான பரமஹம்சர் வழியில் சென்றால்

நலிவெல்லாம் நொடிப்பொழுதில் நாச மாகி

இன்றேஇக் கணத்தினிலே இன்பம் சேரும்!

இறைவனருள் மழையாகப் பொழியும்! ஆமாம்!



# விவேகானந்தர்

பொங்கலிட்டுக் கொண்டாடி மகிழு கின்ற
புனிதமிகு திருநாளில் உலகம் முற்றும்
மங்கலத்தைக் கொண்டுவரும் தூத ராக
மாண்புயர்ந ரேந்திரரிங் கவத ரித்தார்!
திங்களென விளங்குகிற திருமு கத்தில்
திகழ்கின்ற நல்லறிவின் ரேகை மின்ன
வங்கமென்ன பேருலக வட்டத் துக்கே
வாழ்வுதரும் செங்கதிராய் விளங்கி நின்றார்!

வண்டியினை ஒட்டிவரும் ஒருவ னுக்கு
வையகத்தில் ஈடெவரும் இல்லை என்னும்
எண்ணமது மேலோங்க அவனைப் போல
இவர்ஆகச் சிறுவயதில் ஏக்கம் கொண்டார்!
உண்மையிலே பின்னாளில் மாந்தர் தம்மை
உயர்வுக்கு நல்லநெறி வண்டி ஏற்றித்
திண்மையுடன் சேர்ப்பிப்பார் என்ப தற்குத்
தெரிந்தஒரு சூசகமோ? தெய்வ நோக்கோ?

ஆண்டவனைக் கண்முன்னே காட்ட வல்ல
அருளாளர் யாரெனவே எட்டுத் திக்கும்
வேண்டுமட்டும் வலைபோட்டுத் தேடிப் பார்த்தும்
வீணாகிப் போய்மனது சலித்த வேளை
மூண்டுவரும் பக்தியுடன் காளி தன்னை
முழுதாகத் தொழுதிருந்த பரம ஹம்ச
ஆண்டகையை அடைவாயென் றெவரோ சொல்ல
அக்கணமே புறப்பட்டுச் செல்ல லானார்!

என்னவிடை வருமோவென் றையத் தோடே
　　எகியந ரேந்திரரைப் பரம ஹம்சர்
தன்னுடைய பேரருளால் ஆட்ப டுத்தித்
　　தக்கஒரு சீடனென ஆக்கிக் கொண்டார்.
பொன்னுலகாய் இவ்வுலகைச் செய்வ தற்குப்
　　பூரணமாய் அச்சீடர் பாடு பட்டார்.
இன்னமுதச் சொல்லாலும் எழுத்தி னாலும்
　　இருள்நீக்கிப் பேரொளியை வரவ ழைத்தார்!

விழித்திருப்பாய், எழுந்திருப்பாய், சிறிது போதும்
　　வீணாகா விதம்நிதமும் உழைத்தி ருப்பாய்!
பழித்திருப்பார் யாரெனினும் பயப்ப டாமல்
　　பயன்செய்து பிறர்க்குதவித் தழைத்தி ருப்பாய்!
அழிக்கின்ற எதுவரினும் தகர்த்து நிற்பாய்!
　　ஆண்டவனை நினைத்திருப்பாய் என்று கூறி
வழிகாட்டி இளைஞர்களை வாழ வைத்த
　　வள்ளல்விவே கானந்தர் தாள்கள் போற்றி!

＊＊＊＊

# அண்ணல் காந்தி

உலகிலே பிறப்பெ டுத்த
உயிரெலாம் உயர்வை எய்தி
நலமுடன் வாழு தற்கு
நாடியே உழைத்தார் காந்தி!
இலமென யாரும் இங்கே
ஏங்குதல் கூடா தென்று
உலைவிலா தெந்தப் போதும்
உயர்பணி செய்தார் காந்தி!

தசரத இராமன் நாமம்
சத்தியம் அ ஹிம்சை தம்மை
இசைவுடன் உளத்தில் ஏந்தி
ஏறென நடந்தார் காந்தி!
திசையெலாம் ஒன்று கூடிச்
சிந்தையில் கோயில் கட்டி
இசைதரும் வகையில் வாழ்ந்த
ஏந்தலே அண்ணல் காந்தி!

அன்னியர் ஆட்சி யின்கீழ்
அடிமையாய் உழன்றி ருந்த
புண்ணிய பார தத்தைப்
புதுக்கினார் நமது காந்தி!
நன்னயச் சுதந்தி ரத்தை
நமக்கெலாம் பெற்றுத் தந்து
மன்னராய் மலர வைத்த
மாபெரும் மனிதர் காந்தி!

பாரத நாட்டை இந்தப்

பாரிலே உயர்த்தி வைத்த

வீரருள் வீரர் ஆவார்

மேதினி போற்றும் காந்தி!

ஈரமே இதய மாக

இலங்கிய காந்தி தன்னைப்

பாரெலாம் பணிந்து போற்றும்!

பரமனும் வாழ்த்து வானே!



# காத்தருளும் கஞ்சமலைச் சித்தர்

மணமலர்கள் சிந்துகின்ற நறுந்தேனின் வெள்ளம்
மண்டிவந்து பயிர்வளர்க்கும் எழிற்கொங்கு நாட்டின்
அணிகலனாய் விளங்குமுயர் கஞ்சமலைக் காட்டில்
ஆனையதன் போர்வையுடன் மான்மழுவும் நீல
மணிமிடறும் கொண்ட அரன்திருஉருவைக் காண
மனம்விரும்பி ஆயிரம்நல் ஆண்டுதவம் செய்த
குணநிதியே! சுந்தரனே! சித்தர்பெரு மானே!
கும்பிட்டு வாழ்த்துகிறேன்! வாழிய நீ வாழி!

அந்தணரின் திருக்குலத்தில் நீபிறந்து வந்தாய்!
அழகுடைய சுந்தரனென் றரியபெயர் பெற்றாய்!
சிந்தையதில் சிவநெறியே சிறந்ததெனத் தேர்ந்தாய்!
திருமலரால் அருச்சித்துச் சரியைநெறி நின்றாய்!
வந்தஇறை உன்தவத்தை மெச்சியுகம் எல்லாம்
வாழ்ந்திடுக கஞ்சமலைச் சித்தனெனச் சொல்லித்
தந்தவரம் பெற்றுலகைச் சந்ததமும் காப்பாய்!
தவமணியே உன்னிருதாள் தலைவணங்கு வேனே!

மூலத்தைக் கண்டறிந்து முத்திநெறி சொன்ன
மூலனுக்குச் சிறப்புடைய மாணாக்க னாகிச்
சீலத்தோ டவனுக்குப் பணிவிடைகள் செய்தாய்!
தினந்தோறும் மனம்நாடி நல்லுணவு சமைத்தாய்!
கோலத்தில் படுகிழவன், நீகரிய நெல்லிக்
குச்சியினால் கிளறியசோ றினைத்தானே உண்ண,
காலத்தை வென்றதிரு மூலனவன் உன்னைக்
கக்குவித்து மிச்சிலையுண் டெழிற்குமரன் ஆனான்!

மூப்பதனை மாற்றுகிற கருநெல்லிக் கனியும்,

மோதுகிற போரதனில் வரும்புண்கள் மாற்றிக்

காப்பாற்றும் மூலிகையாம் கரணிவகை மூன்றும்

காலனிடம் சென்றுவிட்ட உயிரதனை மீட்டு

வாய்ப்பாக மறுபடியும் வாழ்விக்கும் அமிர்த

சஞ்சீவி மருந்ததுவும் வளர்கஞ்ச மலைமேல்

தாய்ப்பாசத் தோடுபுவி தழைப்பிக்க வந்தோய்!

தவத்திலுயர் காலாங்கி மாமுனியே போற்றி.

மஞ்சுவந்து தவம்புரிந்து வானகத்து வீட்டில்

வசிப்பவர்கக்கு மருந்தெடுத்துக் கொண்டுசென்று வழங்கும்

கஞ்சமலைக் கருங்காட்டில் விளைந்தெடுத்த பொன்னால்

கனகசபை தில்லையினுண் டானதெனச் சொன்னால்

செஞ்சொல்லால் அம்மலையின் சிறப்பனைத்தும் எளிதில்

செப்புதற்கு முடிந்திடுமோ? அதுமட்டும் தானா?

மிஞ்சுமெழிற் கரும்பொன்னும் விளைந்தங்கு நாட்டை

மிக உயர்த்தும் பெருமையைத்தான் இயம்பி யிடலாமோ?

தேகங்கள் வலிவெய்தித் திகழ்ந்திடவே உதவும்

சிறப்புடைய மூலிகைகள் தேர்ந்தெடுத்துச் சொன்னாய்!

ஆகமநன் நெறிகளினை மூலனிடம் கற்றே

அகிலத்து மானுடர்கள் அதையறியச் செய்தாய்!

யோகங்கள் எட்டினையும் சித்திவகை எட்டும்

உலகுக்குப் பயன்தரவே நீயறிந்து கொண்டாய்!

சோகங்கள் அத்தனையும் ஒருநொடியில் மாற்றிச்

சுகம் பெருக வழிபுரிவாய்! வாழியவே வாழி!

மூதறிவைக் காட்டுகிற விரிவுடைய நெற்றி!
முண்டிசெய்த சென்னியின்மேல் உருத்திராட்ச மாலை!
தீதறவே ஒருகால் மேல் மற்றொருகால் போட்டுச்
செம்மையுடன் நல்வீரா சனமிட்ட பொலிவு!
பாதமலர் தெரிகின்ற படியிருக்கும் கோலம்!
பரவிடுவார்க் கருள்தரும்சின் முத்திரைகொள் வலக்கை!
சீதளத்தைச் சிந்துமொளிச் சந்திரன்போல் விழிகள்!
சேர்ந்திருக்கும் உருவுடைய தூயவனே போற்றி!

கண்மூன்று கொண்டவனின் காலடியைப் பற்றிக்
கறையற்ற மெய்ஞ்ஞானம் சார்ந்தவராய் நின்று
பண்பட்ட பேரறிவின் பெட்டகமாய் வாழ்ந்து
பரமனவன் தானேயென் றுள்ளுணர்வு கொண்டோர்
மண்போற்றி மதிக்கின்ற சித்தரெனப் படுவர்
மாமலையாம் கஞ்சமலை தனில் வாழும் நீயோ
விண்ணோர்க்கும் நல்லறிவின் விளக்கமதை நல்கும்
வித்தகம் சேர் சித்தரென விளங்கிடுவாய்! வாழி!

தங்கத்தை வழங்குமுயர் கஞ்சமலை வனப்பு
சவுந்தரநற் கயிலாய மலையழகை ஒக்கும்!
அங்கத்துப் புண்களினை ஆற்றிநெடு வாழ்க்கை
அளிக்கின்ற கரணிகளும் கருநெல்லிக் கனியும்
துங்கத்து மலையதன்மேல் வளர்ந்துதவி புரியும்!
தூயவன் நீ அங்கிருக்கும் காரணமும் அதுவோ?
எங்கட்கு வாய்த்ததுணை என்றிலங்கும் தேவே!
இருகரமும் கூப்புகிறோம் அருள்புரிவாய் நீயே!

உன்னுடைய வாசலுக்கு வருகின்ற மாந்தர்

உள்ளகுறை அத்தனையும் ஓடிவிடக் காண்பர்!

பொன்பெருகிப் புகழ்பெருகி இறுதிவரை உதவும்

புதல்வர்களைப் பெறுகின்ற புண்ணியத்தை அடைவர்!

இன்பமெலாம் வசமாகி எப்பொழுதும் புவியில்

எல்லாரும் வணங்குகிற ஏற்றத்தைப் பெறுவர்!

அன்புருகி உனைவணங்கி நிற்கின்றோம் ஐயா!

ஆதரித்துக் காத்தருளல் உன்கடமை தானே!



# மாமனிதர் அரவிந்தர்

எல்லையிலாப் பரம்பொருளாய் எங்கும் உள்ள
எதனையுமே அறிந்ததுவாய், ஈடில் லாத
வல்லமையை உடையதுவாய் விளங்கு கின்ற
மகிமையுள ஒன்றுடனே இணைத்துக் கொண்டு
நல்லசெய லாலிறைவன் அருள்சு மந்து
நாடிவரும் வாய்க்காலாய் பயன்வி னைக்கும்
சொல்லரிய ஒருவனையே யோகி என்று
தொல்லுலக நல்லறிஞர் சொல்லி நிற்பர்!

இந்தஇலக் கணத்துக்கோர் இலக்கி யம்போல்
எழில்விரித்த ஒருயோகி இங்கே உண்டு!
சொந்தநலம் அணுவளவும் கருதி டாமல்
தூய்மையுடன் மனிதகுல விடுத லைக்கே
எந்தஒரு பொழுதினிலும் தொண்டி யற்றி
இருந்தஅர விந்தரெனும் இனிய பேரார்!
இந்தியத்தாய் நெடுங்காலம் நோற்ற பின்னே
ஈன்றெடுத்துப் புவிக்கீந்த அன்புச் செல்வர்!

கருணைவிழி பார்த்துலகைக் காத்த வண்ணம்
காளித்தாய் வீற்றிருக்கும் கல்கத் தாவில்
பெருமைகளின் பெட்டகமாய் இலங்கி நின்ற
பேராளர் கிருஷ்ணதன் கோஷ்என் பார்க்கும்
திருமகளே வடிவெடுத்து வந்தாள் போலத்
திகழ்ந்திருந்த ஸ்வர்ணலதா தேவி யார்க்கும்
அருமையுள புதல்வனென அவத ரித்தார்
அறிவுக்கும் அருளுக்கும் அடையா ளம்போல்!

ஆங்கிலேய நாகரிகம் தன்னில் முற்றும்

ஆழ்ந்திருந்த தந்தையவர் தம்பிள் ளைகள்

பாங்குடனே ஆங்கிலநற் கல்வி கற்றுப்

பட்டங்கள் பலதாங்கிப் பதவி தாங்கி

ஓங்கிடவே வேண்டுமெனும் விழைவி னாலே

ஒளிமறையா இங்கிலாந்து நாட்டிற் கேகித்

தீங்ககற்றும் கல்வியினைத் தெளியக் கற்றுச்

சிறப்புடனே வருகவென அனுப்பி வைத்தார்.

பெற்றவர்கள் தமைப்பிரிந்து பிராயம் ஏழில்

பிறநாடு சென்ற அரவிந்தர் தம்முன்

உற்றவொரு கடமையினை உணர்ந்து நின்றார்.

ஓயாமல் படிப்பதிலே ஆர்வம் கொண்டார்.

கற்றறிந்த ட்ரூவெட்ஸ் என்னும் ஆசான்

காட்டியநற் பாதையிலே நடந்து சென்று

மற்றவர்கள் வியந்துமிகப் போற்று மாறு

மாசற்ற கல்வியினைக் கற்றுத் தேர்ந்தார்.

எழில்மொழிகள் ஆங்கிலமும் பிரஞ்சும் மற்றும்

இலத்தீனும் ஐயமறக் கற்ற றிந்தார்.

மொழிஎழிலார் ஷேக்ஸ்பியர், ஷெல்லி, கீட்ஸ்,

முதலானோர் படைத்தளித்த 'நூல்கள்' தேர்ந்தார்.

பொழில்நிழலாய்க் கல்வியினை எண்ணி எந்தப்

பொழுதினிலும் அதிலாடித் திளைத்தி ருந்தார்.

உளமதனின் தெரிசனத்தை உலகோர் காண

ஒப்பற்ற கவிதைகளாய் வடித்த ளித்தார்.

சிறிதளவும் இந்தியாவின் பாதிப் பின்றிச்
சிறுவயதில் அரவிந்தர் வாழ்ந்தி ருந்தார்.
பிறகவரும் செயின்ட்பால்ஸ் பள்ளி சேர்ந்து
பேரார்வம் கொண்டரிய கிரேக்கம் கற்றார்.
அறிஞரெலாம் பாராட்டி வாழ்த்துச் சொல்ல
அளவற்ற பரிசுகளைப் பெற்றொ ளிர்ந்தார்.
அருவியெனப் பேசுமரும் கலையில் மின்னி
யாருடைய மனத்தினிலும் இடம்பி டித்தார்.

ஜெருமனுடன் இத்தாலி ஸ்பானிஷ் என்னும்
சீரியநன் மொழிகளையும் படித் தறிந்தார்.
நிருவாகம் போதிக்கும் ஐ ஸி எஸ்ஸில்
நிகரற்ற முறையினிலே தேர்ச்சி பெற்றும்
ஒருநாளும் அன்னியரின் அரசாங் கத்தில்
உவந்துபணி ஆற்றிடவே வேண்டா மென்று
கருதிஒரு குதிரையேற்றத் தேர்வில் வெற்றி
காண்பதற்குச் சற்றுமவர் முனைய வில்லை.

ஆங்கிலநா கரிகத்தில் மோகம் கொண்ட
அவர்தந்தைக் கிதற்கிடையே வந்து சேர்ந்த
தீங்குகளால் ஆங்கிலேயர் நீதி பற்றிச்
சிந்தையிலே சந்தேகம் உண்டா யிற்று.
வீங்குபுகழ் பாரதத்தாய் வலிவி ழந்து,
வேற்றுவரின் பிடியினிலே சிக்கி வீழ்தல்
தாங்கவொணாத் துயரத்தை அவர்க்கு நல்கத்
தாயவளின் விடுதலையை எண்ண லானார்.

பாரதத்தை ஆங்கிலேயர் ஆண்டு கொண்டு
    பல்வகையாய்ச் சுரண்டுதலைக் கண்ட தந்தை
சீரழித்த அவர்சிறிய செய்கை முற்றும்
    சிதைத்தவற்றின் அடையாளம் சிறிதும் இன்றி
வேரறுக்க வேண்டுமென விழைவு கொண்டார்!
    வெளிநாட்டில் இருந்தஅரும் மைந்தர் கட்கும்
ஊர்தனிலே நிகழ்கின்ற கொடுமை யாவும்
    உடனேயே கடிதத்தால் தெரியச் செய்தார்.

பத்தோடு நான்காண்டு வேற்று நாட்டில்
    பயின்றதன்பின் தாய்நாடு திரும்பும் வேளை
சித்தத்தில் பாரதத்தின் விடுத லைக்குத்
    தீராத பெருவேட்கை உருவா யிற்று!
மொத்தத்தில் அன்னியரை விரட்டி இன்பம்
    முகிழ்க்கின்ற வாறுவிடு தலையை எய்திப்
புத்தொளியைக் கண்டுவிட முழுமூச் சோடு
    போராடும் நெஞ்சுறுதி வளர்ந்தோங் கிற்று!

என்றாலும் நேரடியாய்க் கலந்தி டாமல்
    இலைமறைத்த காய்போலப் பங்கு கொண்டார்!
பொன்னான கல்வியதன் பயனாய் மிக்க
    புகழ்பெற்ற பரோடா சமஸ்தா னத்தில்
நன்றான ஒருபதவி தனில மர்ந்தார்.
    நாள்தோறும் மன்னருடன் பழக லானார்!
குன்றாத முனைப்புடனே கடமை ஆற்றிக்
    குறிக்கோளில் மாறாமல் நிலைத்து நின்றார்!

அங்கிருந்த காலத்தில் மேலும் மேலும்
அறிவதனைப் பெரிதாக்க ஆசைப் பட்டார்!
வங்கமொழி, சமஸ்கிருதம் இவற்றினோடு
மராட்டியமும், குஜராத்தி மொழியும் கற்றார்
எங்குமொளிர் கீதையுடன் இதிகா சங்கள்
ஏற்றமிகு பவபூதி, காளி தாசர்
மங்கலமாய்ப் படைத்தளித்த நூல்கள் எல்லாம்
மனத்திலொரு தெளிவுவரக் கற்றுக் கொண்டார்!

கல்லூரி ஆசிரியர் பதவி தாங்கிக்
கற்பித்தார் ஆங்கிலமும் பிரஞ்சும் நன்றாய்!
சொல்லூறும் இனிமையினை மாண வர்கள்
துய்க்கின்ற வகையாகத் தொகுத்த ளித்தார்!
எல்லோரும் இவர்திறனைக் கண்டு நெஞ்சில்
எந்நாளும் பெருமையினைக் கொள்ளத் தக்க
வல்லாராய் அரவிந்தர் வாழ்ந்தி ருந்தார்!
மாசறியாத் திருப்பணிக்குத் தன்னைத் தந்தார்.

தான்பிறந்த பொன்னாடு வெள்ளைக் காரன்
தாள்பணிந்தே அடிமைசெயும் நிலையை மாற்றி
வான்புகழை எய்துவிக்க எண்ணி நின்ற
வள்ளலவர் பெருங்குற்றம் சாட்டப் பெற்றுக்
கூனுளத்துக் கொடியவரால் நீதி மன்றக்
கூண்டினிலே நிறுத்திவைக்கப் பெற்றார்! ஆனால்
ஞானமுயர் நீதிபதி அளித்த தீர்ப்பில்
நல்லபடி இவர்க்குவிடு தலையைத் தந்தார்!

பின்னரவர் அரசியலில் ஈடு பாடு
பெரிதளவு குறைந்துவிட ஆன்மி கத்தில்
தன்னுடைய சிந்தனையைச் செலுத்தி நின்றார்!
தாரணியில் வாழ்மனித குலம னைத்தும்
பன்னரிய ஆன்மவிடு தலையை எய்திப்
பாங்குடைய பெருவாழ்வு வாழ்வ தற்கு
நன்னயமாய்ப் பணிபுரிய விருப்பம் கொண்டார்!
நாளெல்லாம் யோகத்தில் நாட்டம் உற்றார்!

சோகத்தால் வாடுகின்ற மனங்க ளுக்கும்
துயரத்தால் உழல்கின்ற மானு ட ர்க்கும்
யோகத்தால் அமைதியினை அடைத லான
உண்மையினை முறையாக எடுத்து ரைத்தார்.
தேகத்தை, இதயத்தைத் தானென் றெண்ணும்
செய்கையினை விட்டுதறி நலம்ப யக்கும்
யாகத்தின் ஆகுதியாய்த் தனைய ளித்தால்
ஆன்மவிடு தலைகிட்டும் என்று சொன்னார்.

பேருலக நலங்கருதிப் பாண்டிச் சேரிப்
பெருநகரில் ஆசிரமம் தனைய மைத்தார்!
சீருடைய யோகத்தை யாவ ருக்கும்
சிறப்பாகத் தெளிவாகச் சொல்லித் தந்தார்!
ஆர்வமிகும் அன்னையவர் துணையி னாலே
ஆசிரமம் மிகஓங்கி வளர்ந்த தாங்கே!
ஊருலகம் போற்றுகிற வண்ணம் இன்றும்
ஒளிவீசி அதுதிகழ்வ துண்மை யன்றோ?

மனிதகுலம் இன்பமுற யோகம் செய்த
மாமனிதர் அரவிந்தர் என்னும் அந்தப்
புனிதரரும் திருநாமம் என்றும் இந்தப்
புவிசூழும் இருள்போக்கும் தீபம் ஆகும்!
குனிவதனை நிமிர்த்துகிற வகையில் அன்னார்
கூறியுள வார்த்தைகளும் கொள்கை தாமும்
இனியெவரும் கவலாத நிலையை நல்கி
இறைவனவன் நிழல்சேர்க்கும் என்றும் வாழும்!



# சித்தர் பிரான்

பக்தர்களாம் பெரியோரின் பண்புரையால் முருகனிடம் பக்தி கொண்டேன்;
தக்காரை நான் சென்று தரிசித்துச் சொல்லரிய இன்பங் கண்டேன்;
முக்காலம் உணர்கின்ற முழுஞானி சித்தர்பதம் தலைமேற் கொண்டேன்;
எக்காலும் என்னெஞ்சம் இறையருளில் தோய்ந்திருக்க அருளுவாயே!

எண்ணற்ற துறவியரை இதுவரையில் தரிசித்த துண்டென் றாலும்
கண்ணுற்று முதல்முதலில் காலடியில் வணங்கியது நின்னைத்தானே?
மண்ணகத்தில் மாயச்சூர் கிழித்தெறியும் வேலாவாய் கரிய நீல
வண்ணத்துக் காளியென மனமுருகும் காட்சியதும் வழங்குவாயே!

கருணைமிகும் சித்தர்பிரான் கடைக்கண்ணால் ஒருபார்வை பார்த்தால் போதும்
மருணிறைந்த மனந்தெளியும் மாறாத துன்பமெல்லாம் மறைந்து போகும்
பொருணிறைந்த பொருளுமது, பொற்பாதம் அதைநெஞ்சில் பதித்துக் கொண்டேன்
அருணிறைந்த தவமுனிவ அஞ்சலெனும் திருப்பார்வை அருளுவாயே!

உள்ளமெல்லாம் குளிரடைய உயிரெல்லாம் நலமடைய உதவுகின்ற
கள்ளமிலாப் புன்னகைக்கோர் கருவூரார் என்னுமொரு கரந்தைச் சித்தர்
பிள்ளையென மழலைமொழி பேசிடினும் சிலசமயம் பெருகிப்பாயும்
வெள்ளமென வேதாந்தம் பொழிந்துபெரு வியப்பிலெமை ஆழ்த்துவாயே!

பொருள்கண்ட பூரிப்பில் நல்லொளிதான் நின்முகத்தில் பொங்கிற் றேயோ?
அருள்கொண்ட நின்னகத்தே சூரியனார் ஆயிரம்பேர் அமர்ந்துள்ளாரோ!
சொரிகின்ற நின்கருணைச் சுகமழையின் அனுபவத்தால் துணிந்து கேட்பேன்
இருள்கொண்ட நெஞ்சையெலாம் கரையேற்ற மனிதவடி வெடுத்திட்டாயோ!

நாளெல்லாம் நினதுதிரு நாவருளும் அமுதமொழி கேட்டி ருந்தால்
கோளெல்லாம் சாந்திபெறும், கூடிவரும் அமைதியினைக் குலைக்கும் துன்ப
வாளெல்லாம் கூர்மழுங்கும்; மலராக உருமாறும்; மணக்கும் நின்றன்
தாளெல்லாம் நலத்தினையும் தருமெங்கும் மிகையில்லை உண்மை தானே?

அத்தனையும் தன்னுள்ளே வைத்திருக்கும் ஆனந்தத் தேனையுண்ட
சித்தனெனப் பிறறரிய விரும்பாத சித்தன் நீ! உண்மை, உண்மை!
புத்துடைகள் வகைவகையாய்ப் பூண்டுமகிழ்ந் துலவுகின்ற ஆசை கொண்ட
பித்தனெனத் தோன்றுகிறாய், பிறவாத நிலைபெற்ற பெருமையோனே!

முகமெல்லாம் புன்னகையாய் மொழியெல்லாம் அமுதமென ஊட்டி எங்கள்
அகமெல்லாம் மகிழ்விப்பாய், அணுவளவும் கள்ளமிலாக் குழந்தை யைப் போல்
திகழ்ந்திடுவாய் தனைமறந்து சிரித்திடுவாய் அனைத்தினையும் தெய்வமென்று
புகழ்ந்திடுவாய் உடம்பெல்லாம் புல்லரிக்க எதைஎதையோ புகலுவாயே!

எல்லையில்லாக் காளியவள் எழிலுருவை இதயத்தில் ஏற்றிக்கொள்ளும்
நல்லதொரு பேறெனக்கு நல்குவாயே, சித்தர்பிரான் நல்குவாயே
வல்லவனை நல்லவனை வையமெல்லாம் காப்பவனை முதலீறின்றி
உள்ளவனை எண்ணி மனம் உருகுதற்கும் உய்வதற்கும் வழிசெய்வாயே!



# அப்பண்ண ஸ்வாமிகள்

வங்கத்தைப் புனிதமண்ணாய் வையமே எண்ணவைக்கும்
சிங்கத்தை – ஞானமென்னும் வானத்தை அளந்த அந்தத்
தங்கத்தை – ராமகிருஷ்ணத் தவமுத்தைப் போலத் தோன்றும்
அங்கத்தைக் கொண்ட எங்கள் அப்பண்ண ஸ்வாமி போற்றி!

பார்ப்பவன் தன்னை ஈர்க்கும் பக்குவ ஒளிச்சி ரிப்பால்
தீர்ப்பவன் இருளைத் தேடித் திரட்டிடும் வினையிரண்டை,
ஏற்பவன் பிறருக் குள்ள இதயத்துச் சுமையை, என்றும்
நோற்பவன், குடிசை தேடி நுழைபவன் ஆனாய் போற்றி!

கட்டிய வீட்டில் வந்து காட்டிய தீபத் தாலே
ஒட்டிய உறவே, துன்பம் ஓட்டிய ஒளியே! நெஞ்சில்
முட்டிய கருணை யாலே முறுவல்செய் அழகே! எங்கட்(கு)
எட்டிய அமுதே காக்கும் இறைவனின் மகவே போற்றி!

புறத்தினைக் கடந்துள் ளுக்குள் பொலிவுடன் இருப்பாய் ஆழ்ந்த
அறத்தினைத் தழுவுகின்ற அகத்தினில் நிலைப்பாய் சூழ்ந்த
நிறத்தினை – மதத்தை எல்லாம் நீங்கியே சிரிப்பாய் வாழ்ந்த
திறத்தினை நினைவார்க் கென்றும் தெய்வமாய்க் கொடுப்பாய் போற்றி!

உலர்ந்திடும் எனக்கை விட்ட உள்ளமும், உன்பேச் சாலே
மலர்ந்திடும்; மணத்தை வாரி வழங்கிடும்; நிமிர்ந்து வாழும்!
புலர்ந்திடும் இங்கு வந்து பொழுதெலாம் நிலைத்தி ருக்கும்
நலந்தர நீநி னைத்தால் நடந்திடும் எதுவும் போற்றி!



# காஞ்சி மாமுனியே போற்றி

ஆதியை முற்று ணர்ந்த
ஐயனே! போற்றி! போற்றி!
சோதியாய்ச் சுடராய் என்றும்
தோன்றுவாய்! போற்றி! போற்றி!
சாதனை பல வும் செய்த
தவமுனி! போற்றி! போற்றி!
மாதவம் புரிந்தே இந்த
மாநிலம் காப்பாய்! போற்றி!

காலடி முனிவர் வைத்த
காலடி தொடர்ந்தாய் போற்றி!
சீல நன்னெறியில் நித்தம்
செல்லுவாய், சிறப்பாய்! போற்றி!
ஆலயப் பணிகள் மிக்க
அழகுறச் செய்தாய் போற்றி!
ஞாலமே உய்ய நாளும்
நாடுவாய், நயப்பாய்! போற்றி!

அறத்தினைக் காக்க வந்த
அண்ணலே! போற்றி! போற்றி!
திறத்தினில் உயர்ந்து நின்று
திகழுவாய்! போற்றி! போற்றி!
கருத்தினில் அழுக்கில்லாத
கண்ணியா! போற்றி! போற்றி!
திருத்த நற் செயலே என்றும்
செய்குவாய்! போற்றி! போற்றி!

இருளினைத் தொலைவில் எங்கோ
ஏற்றுவாய்! போற்றி! போற்றி!
அறிவெனும் கோபுரத்தில்
அமர்ந்தவா! போற்றி! போற்றி!
பொருளெனும் இறையை நன்கு
புரிந்தவா! போற்றி! போற்றி!
அருளெனும் நதியில் நித்தம்
ஆடுவாய்! போற்றி! போற்றி!

நாஞ்சில் தொட்டிமயம் மட்டும்
நலமுற நடந்தாய்! போற்றி!
தீஞ்சுவை கலந்த சொல்லால்
தெளிவினை அருள்வாய்! போற்றி!
ஊஞ்சலாய் ஆடும் நெஞ்சை
ஒருநிலை கொணர்வாய்! போற்றி!
காஞ்சி காமாட்சி அன்னை
கழலிணை தொழுவாய்! போற்றி!

அழிவெலாம் அழிக்க வல்ல
ஆற்றலோய்! நின்தாள் போற்றி!
தொழிலெலாம் துலங்கச் செய்யும்
தூயனே நின்தாள் போற்றி!
விழியிலே கதிரைக் காட்டும்
வித்தகா! நின் தாள்போற்றி!
மொழியிலே நெறியைக் காட்டும்!
முதல்வனே! நின்தாள் போற்றி!

தெய்வத்தின் குரலெ டுத்துத்
திருவுரை பகர்ந்தாய்! போற்றி!
ஐயத்தைக் கணநே ரத்தில்
அகற்றியே அருள்வாய்! போற்றி!
உய்யத்தான் உயிர்க ளெல்லாம்
உழைத்திடும் உளத்தாய்! போற்றி!
வையத்தைக் காக்க வந்த
வள்ளலே! போற்றி! போற்றி!

அற்புதக் கலைகள் யாவும்
அழகுற வளர்த்தாய்! போற்றி!
சிற்பமும் வில்லுப் பாட்டும்
திகழ்வுறச் செய்தாய்! போற்றி!
பற்பல சதஸ்கள் கூட்டிப்
பயன்பல விளைத்தாய்! போற்றி!
சிற்பரை மலர்ப்பா தங்கள்
சென்னியில் சுமப்பாய்! போற்றி!

வெள்ளெருக் கதனை மிக்க
விரும்பிடும் விமலா! போற்றி!
கள்ளத்தை உள்ளி ருந்து
கழற்றிடும் கதியே! போற்றி!
உள்ளுருக் குலையா தெம்மை
உயர்த்திடும் உறவே! போற்றி!
வெள்ளத்துத் தூய அன்பை
விழைந்தருள் நதியே போற்றி!

கலவையில் களிப்பைப் பெற்ற
　　கருணையே! போற்றி! போற்றி!
புலமையில் ஆழ்ந்தி லங்கும்
　　புண்ணியா! போற்றி! போற்றி!
எளிமையில் இனிமை காணும்
　　ஏந்தலே! போற்றி! போற்றி!
வளியினை அடக்க வல்ல
　　மாமுனி! போற்றி! போற்றி!

அசைவிலா மௌனம் காத்த
　　அருட்பெரும் கடலே! போற்றி!
திசையெலாம் ஒளியைச் சேர்த்த
　　திருவருட் சுடரே! போற்றி!
இசைவொடு நலத்தை வாழ்த்தி
　　இனிதுற வளர்ப்பாய்! போற்றி!
நசையிலா நெஞ்ச கத்தை
　　நல்லிறைக் கீவாய்! போற்றி!

குற்றமே அற்றி லங்கும்
　　குருபிரான்! போற்றி! போற்றி!
பற்றினை முற்றும் விட்ட
　　பரமேட்டி! போற்றி! போற்றி!
உற்றவோர் உறவென் றென்றும்
　　ஒருவரைக் கருதாய்! போற்றி!
முற்றுமிவ் வுலகம் உன்றன்
　　சுற்றமாய்க் கொள்வாய்! போற்றி!

ஓதியே வேதம் நான்கும்

உணர்ந்தவா! போற்றி! போற்றி!

நீதியை உலகில் நித்தம்

நிறுத்துவாய்! போற்றி! போற்றி!

ஆதிசங் கரரின் அம்சம்

ஆனவா! போற்றி! போற்றி!

பாதியை உமைக்குத் தந்த

பரமனைப் பணிவாய்! போற்றி!

வாதுசூ தின்றி மாந்தர்

வாழ்ந்திட விழைவாய்! போற்றி!

கோதிலா நெறியை யாரும்

கொள்ளுமாறு ரைப்பாய்! போற்றி!

காதலே ஆகி ஈசன்

கழல் தொழு திருப்பாய்! போற்றி!

பாதிரிப் பூவைத் தூவிப்

பாங்குறத் துதிப்பாய்! போற்றி!

தேயம் நன் குயர்ந்து வாழச்

சிந்தை செய் திருப்பாய்! போற்றி!

ஓயுதல் இன்றி ஞான

ஒளியினை விரிப்பாய்! போற்றி!

சேயினைப் போலும் உள்ளம்

திகழ்ந்திடும் பெரியோய்! போ ற்றி!

நாயகி பாவம் தாங்கி

நாதனைக் கலப்பாய்! போற்றி!

என்றுமே கதரில் காவி

எழிலுற அணிவாய்! போற்றி!

நன்றெலாம் நாட்டில் மேவ

நாளெலாம் நினைவாய் போற்றி!

குன்றிடாப் பெருமை இங்கே

கொணர்ந்திட முனைவாய்! போற்றி!

ஒன்றிய மனத்தோ டந்த

ஒருவனைப் பணிவாய்! போற்றி!

வெய்யிலே போன்று சூழ்ந்த

வெவ்விருள் களைவாய்! போற்றி!

கையிலே ஏக தண்டம்

கவினுறக் கொள்வாய்! போற்றி!

மெய்யிலே நீறு பூசி

மெத்தவும் மிளிர்வாய்! போற்றி!

பொய்கையில் பூத்த பூப்போல

பொலி வுறும் முகத்தோய்! போற்றி!

சூழ்கெடு வினைகள் முற்றும்

சுட்டெரித் தழிப்பாய்! போற்றி!

ஊழினை வெல்லு தற்கும்

உபாயம் உரைப்பாய்! போற்றி!

கோளறு பதிகம் ஒதிக்

குறை அறப் புகன்றாய்! போற்றி!

வேள்வியின் ஓசை எங்கும்

விரிந்திடச் செய்வாய்! போற்றி!

புண்ணிய ஸ்படிக லிங்கம்

பூசனை புரிவாய்! போற்றி!

அண்ணலை வில்வத் தாலே

அருச்சனை செய்வாய்! போற்றி!

எண்ணரும் தேச மக்கள்

எண்ணிடும் குருவே! போற்றி!

உண்மையில் உனக்கு யாரும்

ஒப்பிலாய்! போற்றி! போற்றி!

வெற்றியே அன்றி வேறு

விளைத்திடா மேலோய்! போற்றி!

நற்சனா தனதர் மத்தை

நாடெலாம் வளர்த்தாய் போற்றி!

நற்றுணை இறையே என்று

நம்புவாய்! நடப்பாய்! போற்றி!

கற்பனைக் கெட்டா துள்ள

கடவுளைக் கண்டாய்! போற்றி!

ஒரு ஜெயேந் திரரின் நெஞ்சுள்

ஒளியுறத் திகழ்வாய்! போற்றி!

திரு. விஜ யேந்தி ரர்தம்

சிந்தையுள் நிறைவாய்! போற்றி!

சரஸ்வதி என்னும் பட்டம்

தாங்குமெ ங் கோவே! போற்றி!

குருவுன தருளால் எங்கள்

குறையெலாம் தீர்ப்பாய்! போற்றி!

ஊரெலாம் நடந்து சென்றே

உயர்வினை விதைத்தாய்! போற்றி!

சீரெலாம் சேரு மாறு

செய்த எம் பிரானே! போற்றி!

யாரெலாம் நினைவார் உன்னை

அவர்க்கெலாம் அருள்வாய் போற்றி!

காரெலாம் இறங்கி வந்த

கருணையே! கனிவே! போற்றி!

விழுப்புரம் பகுதி தோன்றி

விழுப்பொருள் உரைத்தாய்! போற்றி!

உழைப்பினால் உலகம் ஓங்க

உணர்த்தியே நின்றாய்! போற்றி!

துளைத்திடும் துன்ப வேலைத்

தூக்கியே எறிவாய்! போற்றி!

வழுவிலா துலகம் உய்ய

வழியினை அமைத்தாய் போற்றி!

ஒரு பிடி அரிசி நாளும்

உதவுமா றுரைத்தாய்! போற்றி!

வரனுக்குப் பணத்தை வாங்கும்

வழக்கினை ஒழித்தாய்! போற்றி!

திருவி ழிப் பார்வையாலே

திருவெலாம் தருவாய்! போற்றி!

அருள்மழை பெய்து மண்ணில்

அழகெலாம் நிறைப்பாய்! போற்றி!

நம்திரு நாடு போற்றும்
காந்தியை நயந்தாய்! போற்றி!
சிந்தையின் குழப்பம் நீக்கி
அமைதியைச் சேர்ப்பாய்! போற்றி!
மந்திரம் நமசி வாய
ஓதியே மகிழ்வாய்! போற்றி!
சந்திர சேக ரேந்த்ர
சரஸ்வதி சாமி! போற்றி!

திரும்பிய பக்க மெல்லாம்
தெரிந்திடும் துயரை மாற்றிக்
கரும்பெனும் வாழ்வை நல்கும்
காஞ்சி மாமுனியே போற்றி!
பெரும்புயல் மனத்துள் வீசிப்
பேரழி வெய்தி டாமல்
நிரம்பிய மகிழ்வு நித்தம்
நிலவிட ச் செய்வாய்! போற்றி!

நல்லன உலகில் ஓங்க,
நன்னெறி மனிதர் செல்ல,
தொல்லைகள் தொலைந்து போக,
துணைநிதம் வருவாய்! போற்றி!
கல்லெனும் மனத்துக் குள்ளே
காலடி நீப தித்து
மெல்லிய மலராய் மாற்ற
வேண்டினோம்! போற்றி! போற்றி!

அழகெலாம் நின்றய, எங்கும்

அறமெலாம் பெருக, பொங்கும்

ஒளிதிகழ் அனுஷ நாளில்

உதித்த எம்குருவே! போற்றி!

பழம்பெரும் தேசம்! எங்கள்

பாரத தேசம்! என்றும்

வளமெலாம் ஓங்கி வாழ

வாழ்த்தியே அருள்வாய்! போற்றி!

கையிலே உள்ள நெல்லிக்

கனியினைக் காண்ப தேபோல்

மெய்யனைக் கண்டு கொண்ட

மேன்மையோய்! போற்றி! போற்றி!

தெய்வமே இந்த மண்ணைக்

தேடிவந் துதித்த போலும்

ஐயனே! கருணா மூர்த்தி!

ஆதரித் தருள்வாய்! போற்றி!



# காஞ்சி முனிவருக்கு ஒரு விண்ணப்பம்

மங்கலம் பொங்க மகிழ்ந்த பாரதா்
எங்கே போகிறோம்? எப்படி வாழ்கிறோம்?
ஒருகணம் நினைத்தால் உளம்அழு கின்றது;
இருள்மறைந் தொளியை எதிர்பார்க் கின்றது
ஓங்கிய நலத்துடன் உலவிய மக்கள்
தீங்கினில் சிக்கிச் சீர்குலைந் திடுவதா?
இப்புவிக் கெல்லாம் இறைநெறி யதனைச்
செப்பிய மாந்தர் தியங்கித் தவிப்பதா?
வந்தவர் எவரையும் வருகவென் றுரைத்துச்
சொந்தமென் றெண்ணியோர் துயரில் உழல்வதா?
பழைமையும் புதுமையும் பளிச்சிடும் பாரதம்
அழிவினை நோக்கி அவசரப் படுவதா?
இப்படிப் போனால் எம்கதி என்ன?
எப்படி உலகில் இனிமேல் இருப்போம்?
இருந்திடும் உயிரெல்லாம் இன்புடன் வாழ
அருந்தவம் இயற்றும் அண்ணலே! உங்கள்
பூங்கழல் அன்றிப் பொறுப்புடன் எம்மைப்
பாங்குடன் காக்கப் பாரிலொன் றுள்ளதோ?
தெள்ளத் தெளிந்த சிந்தை யினாலே
உள்ளுக் குள்ளே ஒருவனை இருத்தி
என்றும் "அவனு" டன் இரண்டறக் கலந்து
நின்றிடு கின்ற நிர்மலச் சுடரே!
ஆதி சங்கரர் அமைத்துக் கொடுத்த

பாதையைக் காட்டும் பசும்பொன் மணியே!
பொன்னகர் காஞ்சியில் புரிகிற வேள்வியால்
நன்னயம் திசையெலாம் நல்குமா முனியே!
எங்களுக் கிங்கே இனியவாழ் வளிக்க
உங்களை அன்றி ஒருவரும் இல்லையே!
ஆதலால் சற்றே அருள்மனம் இரங்கி
தீதெலாம் உடனே தீர்ந்திடும் வண்ணம்
இறைவ னிடத்திலே எங்களுக் காக
ஒருசொல் நீங்கள் உரைத்திட வேண்டும்!
அன்புக் கடிமை ஆகும்அவ் விறைவன்
பண்புடன் நீங்கள் பகரும்அச் சொல்லால்
நிச்சயம் இணங்கி நிம்மதி அளிப்பான்!
இச்சகம் எங்கணும் இன்பமே பெருகும்!
நூறுடன் இன்னொரு நூறாண் டுலகில்
ஆறென யார்க்கும் அன்பருள் பாய்ச்சி
ஆன்மிக விளக்கை அழகுடன் ஏந்தி
மாண்இறை அருளால் வாழிய தேவே!



# பதின்மூன்றாம் ஆழ்வார்

ஓமெனும் மந்தி ரத்தை ஓதிய வண்ணம் ஒடி
நாமநீர் வேலி சூழும் நல்லுல கனைத்தும் காத்து
மாமுகிற் கருணை மாயோன் மகிழ்ந்தணி மாலை யாகிப்
பூமணம் விரிக்கும் தூய பொன்னிசூழ் திருவரங்கம்!

நெற்கதிர் அன்புள் ளாரின் நெஞ்சுபோல் நிறைந்து காண
நற்சுவைக் கனியின் சாறு நதியென விரைந்து பாய
கற்பனை தனிலும் காணாக் கவினெலாம் கண்முன் தோன்ற
அற்புதம் விளைக்கும் பொன்னி ஆறுசூழ் திருவரங்கம்!

இலங்கையர் கோனை வீழ்த்தி இன்முகச் சீதை மீட்டு
நலந்திகழ் அயோத்தி வந்து நவமணி முடிய ணிந்த
குலமகன் இராமன் அன்பு கொண்டு வீடணனுக்குக் கீந்த
உலகுயர் விமானம் பொன்னி ஊடொளிர் திருவரங்கம்!

ஆதவன் உதிக்கும் பக்கம் அருள்மலர்ப் பாதம் நீட்டி
மேதற்கு சென்னி தன்னை மேற்கெனும் திக்கில் வைத்துக்
காதலால் தெற்கு நோக்கி வடக்கிலே முதுகைக் காட்டி
மாதவன் விழித்துத் தூங்கும் மாண்புயர் திருவ ரங்கம்!

மேவிய அன்பினாலே மென்மலர் கொய்து தூவி
பாஉகந் தளித்துப் பாடிப் பரவிடும் அடியார்க் கெல்லாம்
பூவுல கிதனில் உள்ள பொன்னுல கென்று வானத்
தேவரும் வந்து வாழத் தேர்ந்திடும் திருவ ரங்கம்!

அரவணை மேலே அந்த அரங்கிலே பள்ளி கொண்ட
பரமனை நெஞ்சில் வைத்த பக்தர்கள் எண்ணிப் பாரில்
ஒருவனாய்த் திகழ்ந்த செம்மல் உத்தமன் தர்மவர்மன்
திருவளர் மார்ப னுக்குச் செய்தவோர் பெரிய கோயில்!

வழிவழியாக மன்னர் மரபினர் வந்து நித்தம்
தொழுதுளம் அமுது போற்றும் தூயனின் அரிய கோயில்!
பழுதிலா அன்பு காட்டும் பாமரர் தமக்கும் இன்பம்
எழுமையும் அளிக்க வல்ல இறைஉறை பெரிய கோயில்!

ஆயிரம் எண்ணம் சூழும் அகத்தினை ஒருப்ப டுத்திக்
கோயிலும் சென்று பள்ளி கொண்டவன் தனைக்கும் பிட்டால்
பேயிருட் குகையாய்த் தோன்றிப் பின்னிடும் வாழ்க்கை மாறித்
தாயருட் சோலைக் குள்ளே தழைத்திடும் கரும்ப தாகும்!

நிரம்பிட இந்த எண்ணம் நெஞ்சுளே நின்ற தாலே
கரங்குவித் துருகி நின்று கண்களில் நீர் உகுத்து
மருந்து நீ துன்பநோய்க்கு மாற்று நீ என்று போற்றி
அரங்கனைப் பக்தி செய்த ஆழ்வார்பன் னிருவராகும் !

மண்ணுல கனைத்தும் காக்கும் மனத்தினால் நீலமேக
வண்ணன் கோபி லத்தில் வண்சட கோப ருக்குத்
தண்ணருள் காட்டி வையம் தழைத்திட உழைக்கச் சொன்ன
எண்ணரும் செயலை எண்ணில் இன்பமோர் கங்கையாகும்!

வண்சட கோபர் வந்த வழியிலே நீயும் வந்து
ஒண்ணுவோர்க் கருள்பு ரிந்து நாற்பத்து நான்காம் பட்டம்
கண்ணியத் தோடு தாங்கிக் கடல்நிற மேனி கொண்ட
அண்ணலை அகத்தில் வைத்த அழகிய சிங்கர்நீயே!

கலங்கிடும் உலக வாழ்வில் கதறிடும் உயிர்கட் கெல்லாம்
இலக்குமி நரசிம்மம் தான் இனியன செய்யும் என்று
துலக்கமாய் எடுத்துச் சொல்லித் தொடர்ந்து நற் பணிகளாற்றி
நலக்கொடி நாட்டி நிற்கும் நன்னயச் சிங்கர் நீயே!

உன்னரும் பெருமை எல்லாம் உரைத்திடல் என்றால் ஆமோ?
இன்னருட் கரிய மாலின் எழிலடி தொழுது நின்ற
பன்னிரண் டாழ்வா ரோடு பதின்மூன்றாம் ஆழ்வா ராகித்
தன்னையே இழந்த உந்தன் தகைமையை என்ன சொல்வேன்?

திறமையை விரிப்பாய்! உன்னைச் சேர்ந்தவர் தமக்கும் சேர்ப்பாய்!
நெறிகளை வகுப்பாய்! நெஞ்சில் நீதியை விதைத்து நிற்பாய்!
அறவழி நடப்பாய்! வையம் அவ்வழி நடக்கச் செய்வாய்!
சிறகினை அளிப்பாய்! விண்பால் சென்றுயிர் திளைக்க வைப்பாய்!

நீலவான் போல எங்கும் நிறைந்தருள் பொழியும் அந்த
மாலவன் உறையும் கோயில் மகிழ்வுடன் கட்டி வைத்தாய்!
ஞாலமே பாலையாகும் நாளிலே தாகம் தீர்க்கக்
கோலநற் றிருவுள் ளூரில் குளமொன்று வெட்டி வைத்தாய்!

பசியென எவர்வந் தாலும் பரிவுடன் வரவு கூறிப்
புசியென விருந்திட் டன்பு பொங்கநீ உபசரிப்பாய்!
கசியெனச் சொல்லி நெஞ்சக் கல்லினை உருக்கி நாளும்
வசி அவன் அடிக்கீ ழென்று வாழ்வளித் தருள்பா விப்பாய்!

இருள்களைந் தொளிநி றைக்கும் இனியநற் கல்வி கற்கத்
தருக நீ என்பார்க் கெல்லாம் தடையிலா தளித்தி ருப்பாய்!
திருமணம் மகவுக் கென்று செப்பியார் வந்த போதும்
அருள்மணம் பொங்கச் செல்வம் அள்ளியே கொடுத் திருப்பாய்!

செய்யெலாம் கதிர்செ ழிக்கச் செய்திடும் செய்யாற் றின்கண்
வையகம் போற்றும் முக்கூர் மண்ணிலே நீ பிறந்தாய்!
உய்யவே உலகம் என்னும் உளத்துடன் ஆர்வம் ஓங்கத்
தெய்வநற் றொண்டு நித்தம் செய்வதால் நீ சிறந்தாய்!

ஆண்டுமுன் னூறு முன்னே அச்சுத தேவ ராயன்
பாண்டவர் தூத னான பன்னக சயன னுக்கு
வேண்டியோர் கோபு ரத்தை விண்தொடும் வண்ணம் நாட்ட
ஈண்டுநன் முயற்சி செய்தும் எண்ணம் ஈடேற வில்லை!

குறையுடன் காட்சி தந்த கோபுரம் முழுமை எய்த
உறுதிகொள் மனத்தி னோடும் ஓங்கிய திறத்தி னோடும்
நிறைவுள செல்வர் தந்த நிதியதன் உதவி யோடும்
இறைவனின் கருணை கூட எளிதினில் நீமு டித்தாய்!

பதின்முன்றாம் நாள்மீன் தன்னில் பாரிலே அவத ரித்தாய்!
பதின்மூன்று கலசம் – மாடம் – பளிச்சிடக் கட்டிவைத்தாய்!
பதின்மூன்றாம் ஆழ்வா ரென்று பகர்ந்திட வாழு கின்றாய்!
பதின்மூன்று மட்டும் செய்த பாக்கியம் ஏதும் உண்டோ?

எவரெவர் கோபுரத்தை எழுப்பிட உதவி னாரோ
அவரெலாம் வைகுந் தத்தை அடை குவர் என்று சொல்வாய்!
எவரெவர் கோபுரத்தை ஏமுறக் காக்கின் றாரோ
அவரெல்லாம் அருள் வெள்ளத்தில் ஆழ்பவர் எனப்பு கல்வாய்!

திரண்டெழும் பக்தியோடும் சிந்தையின் நிறைவினோடும்
இரண்டையும் செய்யும் உன்னை எப்படிப் போற்றி செய்வேன்?
அரங்கனின் அருளால் மேலும் ஆயிரம் கோடி காலம்
நிரந்தரம் சிறந்து வாழ்வாய் நீயென வணங்கு வேனே!

பாரெல்லாம் ஓங்கி வாழப் பண்ணுமோர் ஆசை யாலே
சீரெலாம் ஒன்று சேர்ந்து சிறக்குமந் திரம தான
நாராயணாய நித்தம் நமஸ்கரித் தோதி நிற்பாய்!
காரான மேனி யானின் கருணையால் நீடு வாழி!

அன்பினால் அரங்கு ளானைக் கண்டநல் ஆண்டாள் தந்த
இன்பநற் றமிழும் ஆழ்வார் இசைத்த நற் றமிழும் ஓங்கும்
பொன்னொளிர் ஸ்ரீரங் கத்தில் புவிபுகழ் கோபு ரத்தை
மன்பதை உய்யக் கண்ட மாமணி! போற்றி! போற்றி!

* * * *

# நிறையும் அருளைச் செய்வாயே!

கொண்டல் போல அருட்கவிகள் கோடி கோடி குவித்ததிருத்
தண்ட பாணி அடிகள் தரும் தனிக்கௌமார நெறிவிளங்கப்
பண்டை ஞானப் பேராறு பாய்ந்து வரஓர் மடாலயமே
கண்ட இராமா னந்தர்திருக் கழல்கள் சென்னி சூடுவமே!

எந்தை இராமா னந்தமுனி எல்லா உயிர்க்கும் பொதுவாகத்
தந்த ஞான நெறியினிலே தனித்தொண்டாற்றிச் சிவம்பெருக்கும்
கந்த சாமி அடிக ளின்பின் கருணை உருவம் பெற்றதென
வந்த திருச்சுந் தரரேஉம் மாண்பெங் ஙனம் நாம் வழுத்துவதே!

திருநூல் பலயாத்து உளந்தோறும் தெய்வ மணமே பெருக விட்டாய்!
இருநூற்றினுக்கும் மேலான இறையா லயங்கள் தமைப்புதுக்கி
அருநூல் முறையில் குடமுழுக்கிங்கு ஆற்றும் நின்சீர் தனைவிரிக்கப்
பெருநூல் நூறு போதாதே; பேச ஒருநாப் போதாதே!

இறையா லயத்துத் திருப்பணிகள் ஏதும் இடையே நின்றதெனில்
முறையாய் நோக்கி அப்பணிதான் முழுதும் இணையீ டில்லாமல்
நிறைவா கிடவே வழிகாணும் நின்சீர் உரைக்க வல்லேமோ?
குறையாக் கருணை வாரிதியே, குணத்தின் குன்றே! வணங்குகின்றோம்!

காட்சிக் கெளியாய்! பெருகிவரும் கருணைக் கடலே! பாரதத்தில்
மாட்சிக் குரிய தலந்தோறும் மருவித் திருநீ ராடி நிதம்
ஆட்சிக் குரிய இறைவனையே அலரும் நீரும் சுமந்தேத்தும்
பூட்சிக்குரிய தவக்கடலே! பொன்னார் அடிகள் போற்றுவமே!

தடங்கள் சூழும் அவிநாசித் தலத்தில் தமிழால் கவிபாடி
இடங்கர் உண்ட பாலகனை எழுப்பி அருளும் சுந்தரர் போல்
விடங்கள் சூழ்ஐம் பொறிமுதலை விழுங்கி விட்ட எம்உயிர்கள்
அடங்க மீட்டுத் தரும் உனக்கு அருட்சுந் தரப்போர் தகும் தகுமே!

உலகம் வாழ ஓயாமல் உயர்ந்த பணிகள் புரிகின்றாய்!
நிலவும் பொல்லா இருளதனை நீக்கி விடவே விரைகின்றாய்!
மலரும் இதயம் அதற்குள்ளே மாந்தர் நலத்தை நீதாங்கி
அலகில் இறைவன் பூவடிகள் அல்லும் பகலும் தொழுகின்றாய்!

என்றும் கடவுள் பணிக்கெனவே இருக்கும் பெரியோய் அறுபதினை
இன்று கடந்து மகிழ்கின்றாய் ஈசன்அருளால் மென்மேலும்
நன்று புவியில் நீஓங்கி நாளும் இனிய பணிசெய்து
நின்று நிலவி எமக்கெல்லாம் நிறையும் அருளைச் செய்வாயே!

* * * *

# சாந்தானந்த சற்குருவே சரணம்

தத்தாத் ரேயர் தவப்பரம் பரையில்
இத்தரை உதித்த ஏந்தலே – நின்னடி
திருவுயர் ரிஷப தேவரின் வழியில்
அருமைகள் நிறைக்கும் அற்புத – நின்னடி
பெருமைசேர் சதாசிவ பிரம்மேந் திரரின்
திருவடித் தடத்தில் செல்லுவோய் நின்னடி
சுந்தர சுவாமிகள் சொல்லிய வண்ணம்
எந்தச்செயலும் இயற்றுவோய் – நின் அடி
உத்தமர் ஜட்ஜ் சுவாமிகள் உரைத்த
தத்துவம் உணர்ந்த தவமுனி – நின் அடி
சொல்லரும் ஞானச் சுயம்பிர காச
வள்ளல் மனம் நிறை சீடரே – நின்னடி
அவதூத ராகி அனைத்துணர் வறவே
புவனத் திருந்த புண்ணிய – நின்னடி
புவனேஸ் வரிக்குப் புதுகையில் கோயில்
அவனியோர் போற்ற அமைத்தோய் – நின்னடி
சரபேஸ் வரர்க்குச் சந்நிதி அமைத்தே
அருளொளி பெருக்கும் ஐயனே – நின்னடி
அதர்வண பத்ர காளிக் காலயம்
பொதுவிலே நாட்டிய புகழினாய் – நின்னடி
கந்தா சிரமம் கண்டோய் – நின்னடி
வந்தார்க் கருளை வழங்குவோய் – நின்னடி
சிந்தா குலத்தைத் தீர்ப்போய் – நின்னடி
எந்தா யாக இருப்போய் நின்னடி
கைவிட வேண்டாம் மௌனமென் றோதி

உய்வகை காட்டிய உத்தம – நின்னடி
இருவிழி நோக்கால் எம்குறை தீர்க்கும்
குருவே ஏதும் கோதிலா – நின்னடி
மாந்தரின் வாழ்வில் மாட்சிமை சேர்க்கும்
சாந்தா னந்த சுவாமிகள் – நின்னடி
தமிழால் வாழ்த்தித் தலையால் வணங்கினேன்
அமுதாம் நின்னருள் அளித்திடு வாயே!

☆ ☆ ☆ ☆

# அருளெனும் நதியிடை அற்புத அனுபவம்

ஹரிதாஸ் கிரியின் பாடலைக் கேட்டேன்
ஆனந்த வானில் நான்நடை போட்டேன்

(ஹரி)

இறுகிய கல்லையும் இளக்கிடும் இன்னிசை!
எவருளம் ஆயினும் மயக்கிடும் தேனிசை!
அறிவெனும் மலைமேல் ஆத்தும தெரிசனம்!
அருளெனும் நதியிடை அற்புத அனுபவம்

(ஹரி)

ஆயிரம் ஆயிரம் ஆயிரம் பேர்களின்
அகத்துளே அளவிலாச் சுகத்தினைப் புகுத்திடும்!
கோயிலில் இறைமுனம் கொண்டுபோய்ச் சேர்த்திடும்!
குறையெலாம் நீக்கி நம் குலத்தினைக் காத்திடும்!

(ஹரி)

மழையெனப் பொழிந்திடும் இசையினைச் செவிகொளும்
மயிலினம் அழகுடன் களிநடம் புரிந்திடும்!
குழைவுடன் ஒலிதரும் குரலதன் கனிவினைக்
குயிலினம் எய்திடப் பெருந்தவம் செய்திடும்

(ஹரி)

கீர்த்தனை பாடிடும் கிண்கிணிக் குரலினால்
கிறுகிறுத் தென்உளம் ஆடிடும், பாடிடும்!
நேர்த்திகொள் உரையினால் ஈர்த்திடும் தன்மையால்
நீணிலம் முற்றிலும் நிச்சயம் வயப்படும்

(ஹரி)

பாட்டிலே புரட்சியைப் பண்ணினார், மின்னினார்.
பாமரர் அறிஞரைப் பரிவுடன் நண்ணினார்.
பூட்டிய மனத்துளே புத்தொளி கூட்டினார்.
புதுமையும் பழைமையும் பொருந்திடக் காட்டினார்.

(ஹரி)

ஆற்றலின் பெட்டகம், அருமையின் பிறப்பிடம்,
அன்பினுக் கேயோர் ஆழநீர்க் கங்கையாம்!
போற்றுவோம், சுவாமியின் பொன்னடி வணங்குவோம்
புண்ணியன் நல்லருள் பொங்கநாம் வாழுவோம்

(ஹரி)

* * * *

# சகடபுரம் சுவாமிகள் ஸ்ரீ ஸ்ரீ கிருஷ்ணானந்த தீர்த்தர்

இணையிலா இறைவன் எழிற்றிருப் பதமலர்
புணையெனப் பற்றிய புனிதரே போற்றி!
வையகம் தன்னில் வாழு ம் உயிர்களின்
உய்வினைக் கருதும் உத்தம போற்றி!
அருந்தவத்தாலே ஆயிரம் நன்மைகள்
புரிந்து கொண்டிருக்கும் புண்ணிய போற்றி!
தேடி வந்தருள் செய்கிற உமது
ஈடிலா இணையடி இனிதுற வாழ்க!
இருள்கலைந் தோடி இன்பம் பெருகவே
அருளொளி வழங்கும் ஐயனே வாழ்க!
விழியினால் நோக்கி வேதனை தீர்த்துநல்
வழியிலே செலுத்தும் வள்ளலே வாழ்க!
தாரணி மீதில் சனாதன தர்மம்
சீருறத் தழைத்துச் சிறப்புடன்திகழ
விரும்பிய மேலோர் ஆதிசங்கரர்
நிறுவிய உத்தராம்னாய பீடம்
தன்னிக ரற்றுச் சத்தியப் பாதையில்
பொன்னின் நல்லொளி பூத்தவாறிருந்தது!
தோடக பகவத் பாதரில் தொடங்கிப்
பீடும் பெருமையும் பிறங்குமப் பீடம்
தேச மெங்கணும் தெய்வ நன்னெறி
பாசம் மிக்குறப் பரப்பி நின்றது!
சத்திய தீர்த்தர் பிறகதைத் துங்க
பத்திரை நதிக்கரைப் பக்கம் இருக்கும்

புண்ணியச் சகட புரத்திலே அமைத்துக்
கண்ணும் கருத்துமாய்க் காத்திருந்தனர்
சகட மகரிஷி தவம்புரிந் தமையால்
சகட புரம்ஒரு தனிச்சிறப் புற்றது.
கரு நாடகமோ கவினுயர் சங்கரர்
திருவடி பதித்த திருமிகு தேசம்!
சீரிய தவமுனி ரிஷப தேவர்முன்
பேரருள் சுரந்த பெருமைக் குரியது!
அந்த நாள் அங்கே தொடங்கிய அருள்மழை
இந்த நாள் வரையில் இனிது பெய்கின்றது!
ஸ்ரீ ஜகத் குருஸ்ரீ சங்கராச்சார்ய
ஸ்ரீ கிருஷ்ணானந்த தீர்த்தரே. நீவிர்
பெருமைசேர் மடத்தின் பீடாதி பதியாய்
இருந்தின் றெவர்க்கும் இன்னருள் புரிகிறீர்!
பக்தி பெருகிடப் பண்ணும் பூஜையால் ஸ்ரீ
வித்யா உபாசனை விழைந்து செய்கிறீர்!
ஸ்ரீ சக்ர பூஜை செய்தரும் சக்தி
தாசனாய் விளங்கித் தண்ணருள் பொழிகிறீர்!
அருங்குணம் உம்பால் அமைந்திருக் கின்றது!
எங்களின் இல்லம் எழுந்தரு ளியஉம்
பொங்கு நல்லன்பைப் புகலுதல் எளிதல!
உகப்புடன் நற்பணி உலகுக் கியற்றும்
சகடபுரத்துச் சான்றோய் வருக!
பழுதறச் சாத்திரம் முழுவதும் கற்றுத்
தழைத் தொளிர்கின்ற தவமுனி வருக!
ஆதி சங்கரர் அமைத்துக் கொடுத்த
பாதையில் நடக்கும் பாதரே வருக!
சிறப்புயர் ரிஷப தேவர் முன் நடந்த

பரப்பினில் நடக்கும் பண்புளாய் வருக!
மந்திரமாவது மாதவன் தாளெனச்
சிந்தையில் உணர்ந்த சீரியோய் வருக!
உங்களையாம் உள உவப்புடன் வணங்கி
மங்கல வாழ்த்து மகிழ்வுடன் செல்கிறோம்!
வாழ்க மாமுனியே வையக மீதில்
வாழ்க பல்லாண்டு! வாழ்க பல்லாண்டு!
மேதினி மீது மிகநலம் விளைத்து
வேதியன் நல்லருள் விரிய வாழ்கவே!

****

# ஔவையார்

உலகில் பிறக்கும் ஒவ்வொருயிரும்
நலமுடன் இருக்க நாடிய அருளே!
அம்மை அப்பனாய் அன்பைப் பெருக்கிச்
செம்மைத் தடத்தில் செலுத்திய பொருளே !
அறிவுக் கதிரின் அமுதநல் ஒளியைக்
குறைவற எவர்க்கும் கொடுக்கும் சுடரே!
தெள்ளிய ஞானம் தெரிசனப் படுத்தி
உள்ளக் கோயிலில் ஒளிரும் மணியே!
பாருல கெல்லாம் பாட்டியென் றழைத்துச்
சீருடன் வணங்கும் செந்தமிழ் ஔவையே!
வாழும் மொழிகளில் வழங்கும் சொற்களால்
சூழுமுன் பெருமைகள் சொல்லக் கூடுமோ?
பெரும்புகழ் உன்றன் பேருடன் சேர
அருந்தவம் புரியும் அதிசயம் என்னே!
இமயப் புகழை எப்படித் தாயே
அமைதியாய்ச் சுமக்கும் ஆற்றலைப் பெற்றாய்?
நீவாய் மலர்ந்த நித்திலச் சொற்கள்
தேவா தியர்க்கும் ரத்தினக் கற்கள்!
ஆதியில் ஈசன் அவனிக் குரைத்த
வேதம் நிகர்த்த வியன்மொழி உன்மொழி!
மனிதரின் நெஞ்ச வயல்களில் மெய்யெனும்
புனிதப் பயிரைப் போற்றி வளர்ப்பவை!
பொய்யெனும் அந்தப் பொல்லாக் களைகளைக்
கொய்திடும் உயர்ந்த கோட்பா டுடையவை!
கொஞ்சும் தமிழைக் கொடுத்துக் கொடுத்துப்
பிஞ்சு மனத்தைப் பெரிதாய் வளர்ப்பவை!

பெரிதாய் வளர்ந்த பேதை மனங்களைச்
சரியாய் நடக்கத் தகுதி அளிப்பவை!
நாட்டினை இருட்டில் நலிந்திடச் செய்யும்
கேட்டினை விரட்டும் கிழக்குச் சூரியன் !
உன்னொளிக் கரங்களை உலகெலாம் விரித்துப்
பன்னலம் மிளிர்ந்து பரவிடச் செய்வாய்!
அறமெனும் மருந்தை அமுதத் தமிழில்
திறனொடு குழைத்துத் தேனெனத் தருவாய்!
தெய்வ நெறியைத் தெளிவுடன் சொல்லி
உய்யும் வகையை உணர்த்தி அருள்வாய்!
வயிர வார்த்தையின் மாலையி னாலே
உயிரை ஈர்த்திடும் உன்னதம் புரிவாய்!
பாலும் தேனும் பாகும் பருப்பும்
நாலும் படைத்து நற்றமிழ் மூன்றை
வேழ முகத்து விநாயக னவன்பால்
ஆழ மனத்தின் அன்புடன் கேட்பாய்!
பேருல கிதனில் பெருங்கவி உன்போல்
யாரிருந் தார்கள் அருந்தமிழ் பாடி?
பெண்ணினம் உன்னால் பெருமைகள் சூடி
மண்ணிதில் வாழ்ந்த மகிமைகள் கோடி!
ஆண்களும் பெண்களும் அவனியில் நிகரெனும்
மாண்பினைக் காட்டிய மாகவி நீதான்!
செந்தமிழ் நிலத்தில் தெய்வப் பிறவியாய்
வந்துநீ பிறந்தது வரமெனக் கொள்வோம்!
ஆதியும் பகவனும் அருமையாய்ப் பெற்றுனை
மேதினிக் களித்ததாய் மிகப்பலர் கூறுவர்!
எழுசீர்க் குறளால் இவ்வுல குள்ளோர்
வழுவற வாழ வகுத்த வள்ளுவன்,
கோலத் தமிழில் குறிஞ்சிக் காட்சியைச்

சால விரித்திடும் சமர்த்துக் கபிலன்,
தன்னுயி ரதனினும் தமிழ்க்கவி உன்றன்
இன்னுயிர் பெரிதென எண்ணிய அதிகன்,
செப்பும், திறன்பல திகழ்ந்தொளிர் கின்ற
உப்பை, வள்ளி, உறுவை ஆகியோர்
உன்னுடன் பிறந்த உத்தமர் என்று
சொன்ன சரித்திரம் தொன்றுதொட் டுண்டு.
சான்றுகள் காட்டிச் சரித்திரம் இதனை
ஆன்றோர் மறுக்கும் அனுபவம் உண்டு!
எப்படி ஆயினும் என்ன வென்று நீ
செப்பிய கவிதைத் தேனுண விரைந்தேன்.
ஆதியில் வாழ்ந்த அவ்வை ஒருத்தியாம்!
பாதியில் வந்த பாட்டிவே றொருத்தியாம்!
நடையில் தெரியும் நயத்தினைக் கொண்டே
எடைபோட் டிதனை எடுத்துரைக் கின்றார்!
எவரெவர் எவ்விதம் இயம்பினும் என்மனச்
சுவரில் அழியாச் சுடர்ச்சித் திரமாய்
ஒளிவிடும் ஔவைநீ ஒருத்திதான்; இதனைத்
தெளிவுடன் ஏதோ செப்பிய தென்னுளே!
அதிகன் அளித்த அருங்கனி யாலும்
விதிவெலும் யோக வித்தையி னாலும்
நிலந்தனில் நீண்ட நெடுநா ளிருந்து
நலம்புரிந் தாயென நம்பித் தொடர்கிறேன்!
அவ்வையே உன்போல் அழகுத் தமிழைச்
செவ்விதின் வளரச் செய்தவர் உண்டா?
சின்ன வயதுச் சிறுவரும் விரும்பிக்
கன்னல் நறுந்தமிழ் கற்றிடும் வண்ணம்
எளிய சொற்களால் இனிய கவிதைகள்
அளித்த அன்னையுன் அருமையென் னென்பேன்.

உயர்ந்த குறளார் உலகை அளக்க
முயன்றார் ஒன்றே முக்கால் அடியால்!
இரண்டே வார்த்தையில் இவ்வுலக த்தினை
வரைந்து காட்டிய வாக்குக் கரசிநீ!
அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறளெனச் சொன்னாய்!
குறளினும் சிறிய கோலக் கவிதைகள்
திறமைகள் செறியச் சிறுவர்க் களித்தாய்!
புரியாக் கவிதைகள் புகலா தெவர்க்கும்
தெரியக் கவிதைகள் தெளிவுறப் படைத்தாய்!
சிறுவர்க் கென்றுநீ தீட்டிய பாட்டெலாம்
அறிஞர் சிந்தையும் அள்ளிக் கொண்டதே!
வண்ணத் தாரகை வானில் ஒளிர்வ போல்
எண்ணத் தோரணம் எங்கும் நாட்டினாய்!
எத்தனை எத்தனை எத்தனை நீதிகள்
வைத்தனை உன்றன் வண்டமிழ் வரிகளில்!
நன்னெறி அதனைநீ நாட்டுக் குணர்த்திட
இன்னரும் தமிழையே ஏந்தி வந்தனை!
செந்தமிழ் வளர்க்கநீ செய்த தொண்டுகள்
இந்தப் போதிலும் எழில்சமைக் கின்றன!
உலக வாழ்க்கையே உயர்தமிழ் தன்னை
நலமுறச் செய்யவே நண்ணிய தாமெனத்
திருமணம் தவிர்த்துத் திக்கெலாம் தமிழை
அருமையாய் வளர்த்த ஆற்றலைப் பேசவா?
ஈசனைப் போற்றிட இனியதாய் மொழியெனப்
பேசிய உனது பிடிப்பினைச் சொல்லவா?
அறம்செய விரும்பென ஆரம் பித்துநீ
நறும்தமி ழுடுக்கிய நயத்தைக் கூறவா?
உவமையில் இமய ஒளியை விரித்துநீ

நவயுகம் காட்டிய நன்மையைப் போற்றவா?
“முத்தமிழ் அவ்வையின் மொழிகளை நீக்கி
எத்தனை செல்வமும் இழக்கச் சம்மதம்”
என்று பாரதி இயம்பிய சொற்களில்
ஒன்றி இருக்கும் உண்மையை விளம்பவா?
செப்படி வித்தைகள் செய்திடும் உன்றனை
எப்படிப் போற்றினும் எல்லாம் பொருத்தமே!
செந்தமிழ் மட்டுமா திறம்பட வளர்த்தனை?
அந்தநாள் அரசிலும் அரியபங் கேற்றனை!
தொண்டை மானுடன் தூயவன் அதியன்
சண்டை இடுமொரு தருணம் நேர்ந்திட
அதியமான் சார்பில் அரசியல் தூது
முதியவள் நீபோய் மோதல் தவிர்த்தனை!
தொண்டை நாட்டிலே தொடுபவர் இன்றி
மண்டிக் கிடந்தநல் வாள்களும் வேல்களும்
கண்ட போதுநீ காவலன் அதியனின்
சண்டைக் கருவிதம் தன்மையைக் கூறினாய்!
அடிக்கடி போரிட அதியன் சென்றதால்
ஒடிந்து போய்அவை உலைக்களம் தன்னில்
பழுது பார்த்திடப் படுவதைப் பற்றிநீ
அழகுறக் கூறி அறிவு றுத்தினாய்!
என்னுடன் மோதிட எவர்வரு வாரென
மன்னவன் ஒருவனின் வார்த்தைக் கணைகளைக்
கேட்டதும் விடையாய்க் கிளத்திய உன்மொழி
ஊட்டமாய் வீரம் உணர்த்துவ தாகும்!
தாக்க எழுந்த தண்டுக் கெதிரில்
ஊக்கம் மிகுந்த ஓரர வம்போல்
பயமெதும் அற்றுப் பாயும் இளைஞர்கள்
உயர்ந்த தொகையிலே உள்ளனர்; மேலும்

முடிவிலே காற்று மோதும் போதிலே
எழுகிற ஒலியை இருசெவி கேட்டுப்
போர்ப்பறை அதுவெனப் புத்தியில் கருதி
ஆர்த்தெழும் தலைவனும் அமைந்துளன் என்றாய்!
அரசர்க ளாலும் அவிழ்க்க இயலாப்
பிரச்சினை வந்தால் பிழையறத் தீர்ப்பாய்!
அரசினுக் கேற்ப அமையும் குடியெலாம்
திருவுற வாழச் செய்ய நினைந்தனை!
இறைவன் படைப்பில் எவரும் நிகரெனும்
நிறைமொழி உணர்த்தி நீதிகள் கூறினை!
இட்டவர் பெரியோர் இடாதார் சிறியோர்
சட்டப் படிக்குள சாதி இரண்டு தாம்,
என்று நல்லுரை இயம்பி மனிதரை,
ஒன்று படுத்திய உண்மைச் சேவகி!
"ஒருபொழு தொருவன் ஊண்ஒழிதல் பார்க்கும்
நேர்நிறை நில்லா தென்னுமென் மனனே"
என்று குமுறிய இதயம் தாங்கிநீ
நின்ற செய்தியை நினைத்துப் பார்க்கிறேன்!
உலகில் ஒருவனுக் குணவிலை என்றால்
நிலமதை அழிக்க நினைத்த பாரதி
உன்வழித் தடத்தினை ஒட்டி நடந்ததை
என்விழிப் பாவையில் இணையக் காண்கிறேன்.
"ஒவ்வாக் கானத்து உயர்மரம் பழுத்த
துவ்வாக் கனியெனத் தோன்றிய" மனிதராய்
ஈயா தவரைநீ இழித்துச் சினத்தைத்
தீயாய் உமிழ்ந்த சிந்தையும் உணர்கிறேன்!
அன்புடன் நீசொலும் அறிவுரை போற்றி
மன்பதை வாழ்ந்தால் துன்பமே இல்லை.
அறம்பொரு ளின்பம் வள்ளுவன் அளிக்கத்

திறம்பட வீட்டைச் செய்யநீ போந்தாய்!
மோன சுகத்தில் மூழ்கிக் கிடக்க
ஞானக் குறளை நயந்து வழங்கினாய்!
தெய்வ நினைவிலே திளைத்தினி தாடி
உய்ய மானுடர்க் குதவிகள் செய்தாய்!
சீதக் களபச் செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பனைப் பாடிப் பரவினாய்!
அறுமுகச் சிறுவனுன் அருந்தமிழ் விரும்பிக்
குறும்புகள் செய்த கூத்தோர் அற்புதம்!
உண்மையில் இந்த உலகினில் ஓங்கிப்
பெண்மை வாழ்ந்திடப் பெரும்பணி புரிந்தாய்
பெண்ணினம் உன்னால் பெருமைகள் சூடி
மண்ணினில் வாழ்ந்த மகிமைகள் கோடி!
ஆயினும் என்ன? அவலம் சூழ்ந்திடத்
தாய்க்குலம் இந்நாள் தத்த ளிப்பதேன்?
பணமும் பொருளும் பற்பல கேட்கும்
குணமுள ஆண்கள் குவலயத் திருப்பதால்
பெண்குலம் இந்நாள் பெருமைகள் இழந்து
கண்களில் உவர்நீர் கசிந்திட உளது.
இந்தப் பழக்கம் எப்பொழு தொழியுமோ
அந்தநாள் தானே அகமகிழ் பொன்னாள்!
அவ்வைப் பாட்டியே! அன்புடன் மறுபடி
எவ்வித மேனும் இங்குநீ பிறந்து
மீண்டும் பெண்களை மேன்மைப் படுத்த
வேண்டும் எனவே விழைகிறேன் தாயே!



# நன்றி சொல்ல வேண்டும்

என்றும் எண்ண வேண்டும் – மறவாமல்
    என்றும் எண்ண வேண்டும்.
நன்றி சொல்ல வேண்டும் – மனதார
    நன்றி சொல்ல வேண்டும் (என்றும்)

இறைவ னோடு நம்மை – நாளும்
    இணைய வைக்கும் தூய
திருமு றைகள் தந்த – மூன்று
    தெய்வ மாந்தர் தம்மை (என்றும்)

செல்ல ரித்து வீணே – யாவும்
    சேத மாகி டாமல்
நல்ல வற்றை மீட்ட – சோழ
    ராஜ ராஜன் தன்னை (என்றும்)

அரச வைக்கு வந்து – நல்ல
    அமுத கான மாகத்
தெரிந்த வற்றை ஓதி – நின்ற
    சிவன டியார் தம்மை (என்றும்)

சீர்மி குந்த தான – செல்வத்
    திருமு றைகள் தொகுத்த
நாரை யூரின் நம்பி – ஆண்டார்
    நம்பி நல்லார் தம்மை (என்றும்)

அடிய வர்கள் மூவர் – கைகள்
அடையா ளங்கள் பதிந்த
இடத்தைக் காட்டித் தந்த – பொள்ளாப்
பிள்ளை யாரைப் போற்றி (என்றும்)

தொழுது மாந்தர் வாழ – பக்தி
தோயும் ஏடு தந்த
அழகு மிக்க தில்லை – வாழும்
அந்த ணர்கள் தம்மை (என்றும்)

மண்வி யக்கும் வண்ணம் – தமிழ்
மாலை யான நூலின்
பண்வ குத்துத் தந்த – இசைப்
பாடி னியார் தம்மை (என்றும்)

யாழி சைத்த நீல – கண்ட
யாழ்ப்பா ணரோ டவரின்
வாழ்வி ணைந்த துணைவி – அன்பு
மதங்க சூளா மணியை (என்றும்)

இணையி லாத வகையில் – சௌந்தரம்
இலங்கு பாட லெல்லாம்
உணர்வு பொங்கப் பாடி – வந்த
ஓது வார்கள் தம்மை (என்றும்)

நன்றி சொல்ல வேண்டும் – நாம்
என்றும் எண்ண வேண்டும்.

* * * *

# கம்பர்

புவியர சாண்ட மன்னர் போற்றியே வணங்கி நின்ற
கவியர சான கம்பர் கவிதையைக் கற்கும் தோறும்
செவியமு ததனை உண்ணும் சிந்தனை சிறக டிக்கும்!
குவியநின் றிருக ரங்கள் கும்பிடும்! செந்நா வாழ்த்தும்!
தமிழராய்ப் பிறந்தார் – ஆனால் தரணியின் மகனாய் வாழ்ந்தார்!
சமயம் வை ணவமே – ஆனால் சகலமும் சமமாய்க் கொண்டார்!
தமிழ்க்கவி படைத்தார் – ஆனால் கலை யுலக கனைத்தும் வென்றார்!
இமயமாய் உயர்ந்தார் – ஆனால் இரங்கிடும் இதயம் பெற்றார்!
வேழமே என்னும் வண்ணம் வீரமே உருவாய் வந்த
சோழஆ தித்த மன்னன் துணைக்கொளும் தூய நண்பர்!
ஆழமாய் எதையும் நோக்கி, அவனியோர் பயனைப் பெற்று
வாழவே கவிதை செய்த மானுடத் தேவர் கம்பர்!
அகராதிச் சொற்கள் எல்லாம் அழகிய பவனி சென்று
புகழாரம் சூடிக் கொள்ளப் புதியதோர் பாதை காட்டி
ஜெகம்யாவும் உள்ள மாந்தர் சிந்தையைக் கவர்ந்து கொள்ளச்
சுகராகம் மீட்டி நின்ற சுடர்மதி கம்பர் வாழ்க!

பாரதம் ஒருகண் மற்றொருகண்
　　பரம் பொருள் என்று நினைத்திருந்த
பாரதி போற்றும் புலவர்களுள்
　　பைந்தமிழ்க் கம்பர் முதலாவார்

அழுந்தூ ரினிலே அவர்பிறந்தார்!
　　அனைவர் மனத்தும் அவர் பதிந்தார்!
எழுதிய கவிதைத் திறனாலே
　　என்றும் புகழில் அவர்சிறந்தார்!

தனக்கென் றேயொரு முத்திரையைத்
தமிழுலு கதனில் பதித்துவிட்டார்!
சினைக்கும் கருத்தில் அழகூட்டிச்
செவிக்குள் தேனைச் சேர்த்துவிட்டார்.

வடமொழி யதனில் வான்மீகி
வழங்கிய இராம காதையினை
மடைதிறந் தோடும் வெள்ளமென
வண்டமிழ் மொழியில் வடித்துவிட்டார்!

மூல நூலையும் விஞ்சுகிற
முறையில் அழகைக் குவித்துவிட்டார்!
காலம் கடந்து நின்றொளிரும்
கவினை அதிலே நிறைத்துவிட்டார்!

எத்தனை எண்ணம் இடையிடையே!
எத்தனை வண்ணம் நடையினிலே!
எத்தனை சந்தம் செவிநுகர!
எத்தனை உணர்வு புவிமகிழ!

எத்தனை நீதி நலம்கொணர!
எத்தனை சேதி உலகுணர!
எத்தனை இனிமை நாம்பருக!
எத்தனை மகிமை வான்புகழ!

கற்பனைச் சிறகை விரித்திடுவார்!
காவிய வானில் பறந்திடுவார்!
நற்பயன் பற்பல நிறைத்திடுவார்!
நாளும் பொழுதும் உயர்ந்திடுவார்!

சொற்கள் எண்ணில அவர்செந்நாச்
சுழற்சியில் பூமழை யாய்ப் பொழியும்!
கற்கள் ஆயினும் அவர் புகலும்
கவிதை எழிலில் உருகிவிடும்!

பாத்திரம் ஒன்றைக் கதைக்காகப்
படைத்திட நேர்ந்தால் அந்தவொரு
பாத்திர மாகவே நம்கம்பர்
மாறிக் கவிதை படைத்திடுவார்

காவியப் போக்கில் ஓராறு
கடுகிச் சென்றால் இவர்நடையில்
ஓவிய மாக நதியொன்று
ஓடும் சலசல ஒலிகேட்கும்!

வண்ண மலர்கள் அதில் பூத்தால்
வள்ளற் கம்பர் கவிதையிலும்
தண்ணொளி தெரியும்! இன்பமணம்
தாரணி முற்றும் பெருகிவரும்!

ஒருமான் அதிலே ஓடிவந்தால்
உண்மையில் கம்பர் கவிதையிலும்
துருதுரு வென்று மானொன்று
சுற்றித் திரிந்து விளையாடும்!

கடலொன் றதிலே ஆர்ப்பரித்தால்
கவிதைக் குள்ளும் கடல்பொங்கும்!
படமோர் அரவம் அதிலெடுத்தால்
பாட்டும் அழகாய்ப் படமெடுக்கும்

எந்த உணர்வு காவியத்தின்
 இடையில் வருமோ அவ்வுணர்வைச்
சந்தத் தமிழின் சொல்பின்னித்
 தருவார் கம்பர் கவிதையினால்.



# காளிதாசர்

பட்டொளி வீசிப் பறக்கிற நமது
பாரதக் கொடியில் பளிச்சென ஒளிரும்
வட்ட வடிவச் சக்கரம் அமைத்து
வையகம் தன்னில் அறத்தை வளர்த்துத்
திட்டமிட் டென்றும் தேசம் உயரச்
செய்த அசோகன் தந்தைநன் றாண்ட
கட்டியம் கூறும் அவந்திநா டதனில்
கலைகள் பிறந்ததுஜ் ஜயினியில் அன்றோ?

ஓங்கும் கலைகளுக் குறைவிட மான
ஊர்உஜ் ஜயினியில் உன்னத மாகத்
தீங்கணு காமல் குடிகளைக் காத்துத்
தேசப் பெருமையைத் திசைதொறும் சேர்த்துப்
பாங்குடன் ஆண்ட பரம்பரை அதனில்
பார்புகழ் விக்கிர மாதித் தனைப்போல்
ஈங்கிது வரையில் இருந்தவர் யாரோ?
எண்ணச் சுடரிடை திகழ்ந்தவர் எவரோ?

விண்ணொளிர் வெண்மதி மறைந்தது போலே
விளங்கிய கலையெலாம் வீழ்ந்தஅக் காலை
புண்ணிய பூமியில் விக்ரமா தித்தன்
போந்தனன் கலைவளம் பொங்கிட மீண்டும்!
எண்ணரும் பேரெழில் எங்கணும் விரிய
இலக்கிய நறுமணம் இனிமையைச் சொரிய
மண்ணிது வானென மலர்ந்தது! புதிய
மங்கல விடியல்கள் புலர்ந்தன யாண்டும்!

ஆயிரம் ஆயிரம் அறிஞர்கள் கூடி
அழகுடன் வீசிய அறிவொளி ஆடி
ஞாயிறு மண்வரச் செய்தது தேடி!
நன்மைகள் பூத்தன வேஒரு கோடி!
ஆயவிண் மீனிடை ஒன்பது கோள்கள்
அவனியை இயக்கிடும் தன்மையை ஒப்ப,
தூயவர் அவர்களுள் ஒன்பது சிறந்தோர்
துலங்கிய வழித்தடம் காட்டினர் ஆங்கே!

சிறந்தவர் இடையே சிறந்தவ ராகத்
தெய்வத நற்றுணை நிறைந்தவ ராக,
அறம்தழைத் திடவழி அமைப்பவ ராக,
அற்புதக் கவிதைகள் படைப்பவ ராக,
திறம்தனில் யாரையும் வெல்பவராக,
சீரிய நல்லுரை சொல்பவ ராக,
வரம்பல வாங்கியே வந்தவ ராக,
வாழ்ந்தவர் மாகவி யாம்காளி தாசர்!

சூரிய குலத்தினன் இராமனைப் பற்றிச்
சுந்தரக் காவியம் தந்தவான் மீகி,
பாரதம் பாடியோர் கீதையை அளித்த
பண்புயர் வியாசநன் மாமுனி, இவர்போல்
தாரணி மானுடர் யாவரும் போற்றத்
தக்கவர் காளிதா சக்கவி ஆவார்!
ஊருல கவர்உயிர் ஓவியக் கவியால்
உண்மையில் எய்திய நன்மைகள் பெரிதே!

அவர்தரும் கவிகளில் அழகெலாம் திரளும்!
　　அம்புலித் தண்ணொளி அவனியில் பரவும்!
கவலைகள் யாவையும் கணத்தினில் மறையும்!
　　கருத்திலே புதுமையின் காட்சிகள் நிறையும்!
உவகையின் உச்சியில் உளம்செல விரும்பும்!
　　ஒவியச் சோலையின் பூமணம் நிரம்பும்!
தவநலன் எனும்படி வாய்த்த வைகாளி
　　தாசரின் நூல்நயம்! சத்தியம் கண்டீர்!

இயற்கையோ டவர்கவி உறவுகொண் டாடும்!
　　இரத்தினச் சுருக்கமாய் அமைந்தணி சூடும்!
அயர்ச்சியை அகத்தினுள் அற்றிடச் செய்யும்!
　　அமைதியை மழையென உற்றிடப் பெய்யும்!
உயர்ச்சியின் உயர்ச்சியில் உட்பொருள் தேடும்!
　　உண்மையின் உண்மையில் உணர்வினைப் பாடும்!
நயத்தினில் நயத்தினை நயப்பவர்க் கீயும்!
　　நாதமும் கீதமும் தீதற வேயும்!

சொற்களை வீணிலே அடுக்குவ தில்லை!
　　தொய்ந்திடும் வரிகளால் மடக்குவ தில்லை!
புற்களை அறுவடை செய்து கொணர்ந்து
　　பொற்கதிர் அவைஎனப் புகலுவ தில்லை!
பற்களை இளித்தொரு பணத்தினுக் காகப்
　　பண்பினை மறந்து பறந்ததும் இல்லை!
நற்பயன் பற்பல பண்ணிய தன்றி
　　நாடியே பாழ்செய ஒடிய தில்லை!

ஒன்பது சுவைகளும் அவர்கவி விருந்தில்
　　உலகினர் பயனுறும் நல்லுண வாகும்!
அன்பது தாங்கிய நெஞ்சின ரான
　　அவருடை வாழ்க்கை ஒளிவிளக் காகும்!
துன்பது சூழ்ந்து சுழன்றிடு மிந்தத்
　　தொல்லுல கம்தனில் மன்பதை எல்லாம்
இன்பது பொங்கி இருந்திட எண்ணி
　　எழுதிய யாவையும் இறைவர மாகும்!

மாதவன் இராமனாய் மண்ணகம் மீது
　　வந்து பிறந்தவோர் பெருமைக் குரிய
ஆதவன் மரபினன் திலீபன் தொடங்கி
　　அக்கினி வரணன் என்பவன் வரையில்
சேதமி லாவர லாறெனக் கவிதை
　　செய்த ளித்தஅக் காளி தாசரின்
சாதனை தன்னை நினைத்திடும் போது
　　தலைகுவிந் திரண்டு கரங்களும் கூப்பும்!

கோலம் சிறந்த குமரனை அழகு
　　கொஞ்சும் கவியில் கொணர்ந்து நிறுத்தி
நீலம் கலந்த மேகசந் தேச
　　நேர்த் தியில் நெஞ்சக நோயினைக் குறைத்து
காலப் பருவம் ஆறை யும் ருதுசம்
　　ஹாரம் அதிலே கவினுறக் காட்டி
ஞாலப் புகழை எய்திநிற் கின்ற
　　ஞானப் பெருங்கவி காளி தாசராம்!

தழைக்கும் இயற்கையின் மகள்என விளங்கித்
    தங்கச் சிலையென வந்தெழில் வீசி
விழிக்குள் அமுதினை நித்தம் விளைத்த
    மெல்லிய லாகிய சகுந்தலை யாளை
மொழிக்குள் இருத்தி முகவரி தந்து
    மோகனப் புன்னகை சிந்திடும் கவிதை
பழத்தின் சுவையென வழங்கிய வள்ளல்
    பார்புகழ் காளி தாசரே யன்றோ?

உலக இயற்கையின் உட்பொருள் முற்றும்
    ஒளிந்து கிடக்குமோர் உயர்ந்த நாடகம்,
நலம்திகழ் விக்ரம ஊர்வசி யாகும்!
    நண்ணிய காதலின் மாறிடாச் சோகம்!
கலையுயர் பரதநன் நாட்டியம் தன்னைக்
    கருவியாய்க் கொண்டரும் காதலின் பிறப்பைச்
சொலவரும் மாளவி காக்கினி மித்திரம்
    சுந்தரத் தூறல்கள் சிந்திடும் கவிவான்!

அலைஅலை யாய்மனம் அழகினை விரிக்க,
    அணிஅணி யாய்நினை வாயிரம் உதிக்க,
மலைமலை யாய்எழில் வானதை முட்ட,
    மணிமணி யாய்ஒளிச் சிந்தனை கொட்ட,
கலைகலை யாவகை கவிமலர் பூக்க,
    கவின்கவி னாய்வளம் புவிமகள் தேக்கத்
தலைநிமிர்ந் துலாவரத் துணைவரும் காளி
    தாசரைப் போற்றுவம் வாழிபல் லாண்டே!



# உள்ளொளி பெருக்குவோமே!

உலகெலாம் அன்பு வெள்ளம் ஊறியே பரவி மாந்தர்
குலமெலாம் ஓங்க லான கொள்கையில் இறையைப் போற்றி
நலமெலாம் நிறைந்து நின்ற நாயன்மார் வரலா றெல்லாம்
அலகிலா இனிமை சேர அளித்தவர் சேக்கி ழாராம்!

பொழில் வளம் பெருகிச் செல்வம் பொலிந்திட வீதி தோறும்
எழில்வளர் மனைகள் வானை எட்டிடும் குன்றத் தூரில்
தொழிலதை உழவாய்க் கொண்ட தூயவர் குடியில் தோன்றி
மொழிநலம் முற்றும் தேர்ந்து முதிர்ந்தநல் லறிவைப் பெற்றார்!

அருண்மொழித் தேவர் என்ற அழகிய நாமம் பூண்டே
அரசியற் புகுந்து சோழ அரசனின் அமைச்ச ராகி
ஒருகுறை இன்றி நாளும் உயர்வினை மிளிர வைத்து
மருளினை ஒட்டி ஈசன் மாண்பினை உணரச் செய்தார்!

திறமது பொலிந்து நின்ற சேக்கிழார் பெருமான் வாழ்வில்
பிறமத நூலைப் போற்றிப் பேசிய அநபா யன்தன்
அறிவிலே ஒளியை ஊட்டி அறவழி காட்டும் நோக்கில்
குறையிலா அடியார் கொண்ட பெருமையைக் கூறி நின்றார்!

சிவனவன் அடியார் வாழ்வைத் தெளிவுற அறிவான் வேண்டித்
தவமுயர் சேக்கி ழார்பால் தமிழ்க்கவி வேந்தன் கேட்டான்!
அவனது விருப்பம் போல ஐயனும் பாடல் செய்யப்
புவியுயர் தில்லை போந்து புண்ணியன் கோயில் புக்கார்!

ஈசனே உலகெலாமென் றியம்பியே துவக்கி வைக்க
மாசிலாக் காவி யத்தை சேக்கிழார் மகிழ்ந்து செய்தார்!
நேசமும் அறத்தின் மிக்க நெறிகளும் பக்திப் பாங்கும்
தேசமும் சிறந்த தந்தச் சீரிய காவி யத்தால்!

உலகெலாம் என்று சொன்னால் மங்கலம் ஓங்கி நிற்கும்,
உலகெலாம் என்னும் போதே உன்னதம் எழிலைச் சிந்தும்,
உலகெலாம் என்ற பாட்டில் ஓம் அதைக் காணுகின்றோம்.
உலகெலாம் வாழி என்றே உள்ளொளி பெருக்கு வோமே!



# குமாரன் ஆசான் (கேரளக் கவிஞர்)

நாராயண குரு வணக்கம்!

நாரா யணகுரு நாரா யணகுரு
　　நாரா யணகுருவே!
காராய் அருள்புரி காராய் அருள்புரி
　　காராய் அருள்புரியே!

(நாராயண குரு)

போரா யிருக்கிற பூதல வாழ்க்கையைப்
　　பொழிலென மாற்றிவிடு!
யாரா யிருப்பினும் அன்பினை யான்செய
　　அருளமு தூற்றிவிடு!

தீரா திருக்கிற தீமைகள் யாவையும்
　　தீயினில் போக்கிவிடு!
தேரா திருக்கிற நெஞ்சினில் அமைதியைச்
　　சீக்கிரம் தேக்கிவிடு!

(நாராயண குரு)

மாறா திருப்பவர் மருள்மனம் மாறிட
　　மதியொளி ஊட்டிவிடு!
ஊறா யிருப்பவை ஓடி மறைந்திட
　　ஒருவழி காட்டிவிடு!

ஏறா திருப்பவர் வாழ்வில்முன் னேறிட
　　ஏணியை நாட்டிவிடு!
சேறா யிருப்பினும் தாமரை பூப்பதைச்
　　சிந்தையில் தீட்டிவிடு!

(நாராயண குரு)

அழகுமலர்ச் சோலையென அமைந்திருந்த கேரளத்தில்
குளறுபடி செய்வதற்குக் கோரக் கரமோங்கி
உருவெடுத்த சாதியெனும் ஒவ்வாப் பெரும்பேயைக்
கருவறுத்து வா வென்று கடவுள் அனுப்பி வைத்த
தூதுவராய்த் தோன்றித் துயருற்ற மானிடரின்
நாதியென வாழ்ந்தமகான் நாராயண குருவாம்
வல்லான் படைப்பினிலே வாழும் மனிதஇனம்
எல்லாம் சமமன்றி இழிவில்லை, உயர்வில்லை
வருணத்தைக் காட்டி வாழ்வைக் குலைத்துவிடக்
கருதுவது வஞ்சமனக் கயவர்களின் சூதாகும்;
இந்துமதம் எனவிளங்கும் எழிலுடைய மாளிகையுள்
வந்து புகுந்துவிட்ட வல்லிருளை வேரறுப்போம்
என்று நிதம்முழங்கி எல்லோரும் பேரொளியில்
நன்று குளித்திருக்க நாளும் உழைத்தமகான்!
ஐம்புலனை வென்றாலும் அவற்றை வெறுக்காமல்
அம்புவியோர்க் கன்பென்ற அமுதத்தை ஊட்டியவர்!
சும்மா இருந்தே சுகம் காண எண்ணாமல்
இம்மா னுடம்உயர எண்ணமலை ஏறியவர் !
ஊரார் தமக்குவெறும் உபதேசம் செய்யாமல்
சீரார்ந்த நன்மைகளைத் தினம்பிறர்க்குத் தேடியவர் !
அல்லற்பட் டாற்றாமல் அழுதிருந்த சமுதாயம்
மெல்லத் தலைதூக்கி மேன்மையுற நாடியவர்!
எள்ளளவும் தன்னலத்தை இதயத்தில் கொள்ளாமல்
கொள்ளை மகிழ்ச்சிக்குத் குவலயத்தைக் கூட்டியவர்!
காவி உடைக்குள்ளே கருணைத் திருவுருவாய்ப்
பூவுலகை முன்னேற்றப் போந்தொளிர்ந்த மாமுனிவர் !
அம்முனிவர் காட்டிவைத்த அன்பறத்து நன்னெறியே
தம்முடைய பாதையெனத் தயக்கமின்றித் தேர்ந்தெடுத்து
விரைந்து நடைபோட்டு வெற்றிக் கனிபறித்து,

சிறந்த செயலரெனத் திகழ்ந்தவரார்? எண்ணும்கால்
கோலக் கவிபடைத்த குமாரனாசான் என்பதுவே
ஞாலத்து நல்லறிஞர் நவிலும் விடையாகும்!
பாடுபட்டுத் தொழில்புரிந்து பாருக் குயர்வளிப்போர்
கேடுகெட்ட பொம்மைகளாய், கீழ்ச்சாதிக் காரர்களாய்
திக்கற்ற ஏழைகளாய், தெருவில் நடப்பதற்கும்
வக்கற்ற கோழைகளாய், வயிற்றுக்கு மேல்ஆடை
கட்டவிதி இல்லாராய், கண்டவர்க்குப் பொல்லாராய்
திட்டப் படுபவராய், தீண்டப் படாதவராய்
செருப்பற்ற காலோடு செருப்பாய் உழைப்பவராய்,
நெருப்புற்ற நெஞ்சத்துள் நிம்மதியே அற்றாராய்,
வாய்த்துவிட்ட மார்புக்கும் வளரும் தலைமுடிக்கும்,
ஏய்த்துவிட்ட தறியாமல் எண்ணிவரி தருவோராய்,
ஈசன் திருக்கோயில் இருக்கின்ற எல்லையிலும்
ஆசையுடன் கால்வைக்க அச்சம் உடையவராய்,
விற்கும் விலைப்பொருளாய், வேண்டாக் கடைப்பொருளாய்,
அக்கிரமம் செய்வாரின் அடிமைச் சரக்குகளாய்,
வருணா சிரமமெனும் வாளால் வதைப்பட்டு,
கருவான நாள்தொட்டுக் கவலை மிகப்பட்டு
கூனிக் கிடந்த கொடுமை கண்ட நம்ஆசான்
ஏனிப் படி என்றே எழுந்தார் வரிந்துகட்டி!
எடுத்தார் கவிவில்லை எண்ணச் சரங்கொண்டு
தொடுத்தார் பகையழிய, துயரம் தனைக்கழிய!
இவருடைய கவிவில்லில் இருந்து புறப்பட்ட
தவமுடைய சொற்களினால் சமுதாயக் கீழ்மையெலாம்
சாய்ந்து தலைகவிழ்ந்து சட்டென்று கீழ்விழுந்து
மாய்ந்து மறைந்தொழிய மனங்கொண்டாள் கைரளியாள்!
கைரளியாள் விழிபார்க்கக் கவிஞரவர் மொழிவார்க்கத்
தைரியம்நல் வழிசேர்க்க சார்ந்தபழி நீங்கியது,

கேரளத்துப் பூங்காவில் கிடந்த விஷப் பூண்டுகளின்
வேரழிக்கும் வீரரென விளங்கியவர் நம் ஆசான்!
வானத்தைத் தொட்டு வளர்ந்திருந்த தென்னைகளின்
தேனமுதச் சுனைநீரில் திளைத்திருந்த ஊரான
காயல் கரையதனில் கவிஞர் பிறந்ததனால்
நேயத்தை எப்பொழுதும் நெஞ்சில் வளரவிட்டு,
ஞாயத்துக் காகநிதம் நல்லவிதம் போராடி
தேயத்து மக்களுக்குத் தினமுதவி நின்றாரோ?
ஈழவர்கள் மத்தியிலே இவர் வளர்ந்த காரணத்தால்
தாழ்வுற்ற மாந்தர்களின் சங்கடங்கள் தீர்த்தாரோ?
ஒருநாரா யணரிவரின் உயர்தந்தை ஆதலினால்
குருநாரா யணரவரின் கொள்கைவழி சென்றாரோ?
காளியம்மாள் மைந்தரெனக் கவிவேந்தர் வந்ததனால்
தானெடுத்துத் தீமைகளைச் சாட விரைந்தாரோ?
வணிகர் மகனாக வடிவெடுத்த தன்மையினால்
அணிகள் அமைந்தகவி அலங்காரம் செய்தாரோ?
எதுவாய் இருந்தாலும் இயம்பிவிட்ட சொற்களுக்குள்
மதுவை வடித்துவைத்து மயக்கிவிட்ட மாகவிஞர்!
ஓங்குமலை யாளமதும், உயர்வுடைய செந்தமிழும்
பாங்கார்ந்த ஆங்கிலமும் பண்பார் வடமொழியும்
பழுதின்றிக் கற்றறிந்து பாருலகின் இருட்டுக்குள்
தொழுதுண்டு கிடந்தவரைத் தூக்கிவிடப் பயன்படுத்தி
விழிப்புக் கொளியூட்டி வெற்றித் தடங்காட்டி
இழிவுக் கெரியூட்டி இன்பநிலை கூட்டி,
மறுமலர்ச்சிக் கோபுரத்தில் மயக்கமின்றி ஏறவைக்கும்
உறுதுணையாய் கைக்கொண்ட ஒப்பற்ற நற்கவிஞர்!
சமஉரிமை நல்குகிற சமுதாயம் காண்பதற்குத்
தனதுழைப்பு முற்றிலுமே தந்த பெருங்கவிஞர்!
கடவுள் இருக்குமொரு கருத்திருந்தும் சமயங்கள்

கடந்துலகைப் பார்க்கின்ற காட்சித் தெளிவுடையார்!
எங்கும் சுதந்திரரென் றெண்ணும் மனப்பான்மை
அவருக் கியல்பாக அமைந்த அடித்தளமாம்!
வள்ளி விவாகத்தில் வளரத் தொடங்கி உளம்
அள்ளும் கவிகோடி அள்ளி அளித்திருந்தார்!
உஷா பரிணயத்தின் உளங்கவரும் காட்சிகளில்
நிஷாந்தம் கண்டுவிட நெஞ்சில் நினைத்திருந்தார்!
வீழ்ந்துவிட்ட மலரெடுத்து வீணாக இப்புவியில்
தாழ்ந்துவிட்ட உள்ளங்கள் தழைத்துயர எண்ணமிட்டார்
நளினியினால் லீலாவால் நலந்திகழும் காதலது
வளர்வதற்கு நற்பாதை வகுத்துப் புவிக்களித்தார்!
சண்டாளப் பிச்சுகியால் சமூகக் கொடுமையெலாம்
திண்டாடி வெளியேறச் செய்ய முனைந்திருந்தார்!
உள்ளத்துணர்வுகளை உருக்கும்பிர போதனத்தில்
தெள்ளத் தெளிவாகத் தெரிவித் தமைதியுற்றார்!
சீதையவள் சிந்தனையால் ஸ்ரீராமன் சென்ற ஒரு
பாதைசரி இல்லையெனப் பக்குவமாய்ச் சொல்லிவைத்தார்!
துரவெய்த என்றுமொரு தூய படைப்பாலே
பெருமவஸ்தை தரும் சாதிப் பீடைகளை ஓடவைத்தார்!
போற்றும் கருணாவில் புத்தமதக் கொள்கைகளின்
சாற்றைப் பிழிந்துமிகத் தந்து மகிழ்ந்திருந்தார்!
கலை என்ற பெரியவரம் கவின்படைக்க மட்டுமன்று
உலகத்துக் கேடுகளை ஒழிப்பதற்கும் தான்என்றார்!
பழமைக்கும், புதுமைக்கும் பாலமெனத் திகழ்கின்ற
செழுமை இலக்கியத்தைத் தினமும் படைத்தளித்தார்!
காதற் கவிதைகளைக் கனிந்து பொழிந்ததனால்
காதலித்துப் பெண்துணையைக்கண்டு மகிழ்ந்திருந்தார்!
பாடுகிற பாட்டாலும் பயனுடைய சொல்லாலும்
தேடுகிற புகழெல்லாம் தேடிநிதம் பெருக்கி

ஓடுகிற வாழ்க்கையினை உயர்வடையச் செய்தகவி
ஓடத்தில் செல்லுகையில் உயிரிழந்த தென்னெயோ?
தேடற் கரியவொரு செல்வம் எனத்திகழ்ந்த
பாடற் புலவரவர் பட்டென்று போய்மாளக்
கைரளியால் நின்று குத்த கண்ணீர் பெருகியது!
வைர மனங்களெல்லாம் வருந்திக் கருகியது!
நாசம் தவித்துலகை நன்று நிதம் காக்கும்
ஈசன் விதித்தவிதி இதுவானால் என்செய்ய?
ஆனாலும் ஆசான் அவனிக்குத் தந்திருக்கும்
தேனான கவிதைகளில் சிந்தை தெளிந்திடலாம்!



# பாரதி என் குழந்தை!

தேனின் சுவைமுழுதும்
    திரட்டிக் கவியாக்கி
வானின் மழையாக
    வழங்கிநின்ற வள்ளலினை

தேசப் பயிர் என்றும்
    செழித்து வளர்வதற்கு
நேசப் புனல்வார்த்த
    நெஞ்சினனை, பாரதியை,

ஈசன் அருளால்நான்
    ஈன்றளித்தேன், மேதினியோர்
பாசப் பெருமலையே
    பவனிவரக் கண்டார்கள்!

பிள்ளைகளை எத்தனையோ
    பேர்பெறுவார்! என்னைப் போல்
கொள்ளை அறிவுடைய
    கோமகளைப் பெற்றது யார்?

ஆயிரம்தான் பிள்ளைகளை
    அவனியிலே பார்த்தாலும்
சேயென்றன் பாரதிபோல்
    சீருடையார் யாருண்டு?

நோற்ற தவத்தின்
நுகர்பயனாய் நற்கவிதை
ஆற்றல் படைத்த
அறிஞன் பிறப்பெடுத்தான்!

நாட்டுக்கு நேர்ந்துவிட்ட
நலிவை, அழிவதனைப்
பாட்டுப் பெருவாளால்
பட்டென் றழித்திருந்தான்!

ஊனுடம்பு பாரதமாய்
உயிரே சுதந்தரமாய்
மானுடத்தின் மேம்பாடு
மனமாக வாழ்ந்திருந்தான்!

வல்லூறைப் போல்உடைமை
வந்து கவர்ந்தவனைச்
சொல்லூற்றித் தீமூட்டிச்
சுட்டெரிக்கப் பாடுபட்டான்!

செல்லாத காசாகிச்
சீரழிந்த இந்தியரை
வல்லாளர் ஆக்கிவைத்து
வாளைப் பிடிக்கவைத்தான்!

தூங்கிக் கிடந்து
துருப்பிடித்த தாய்த்தமிழை
ஓங்கிச் சிறந்துலகில்
ஒளிர வழிவகுத்தான்!

பண்டிதர்க்குப் பாடாமல்
பாமரர்க்குப் பாடும்கற்
கண்டுக் கவிஞனெனக்
காட்சி கொடுத்திருந்தான்!

வார்த்தைக்கு வார்த்தை எழில்
வண்ணம் குழைத்தெடுத்து
நேர்த்தித் திரைமீது
நெஞ்சப் படம்வரைந்தான்!

சமுதாய வீதியிலே
தடுக்கிவிடும் தீமைகளை
அமுதான சிந்தனையால்
அகற்றத் துடித்திருந்தான்!

பொய்யுரைத்து வஞ்சனையால்
பூதலத்தை ஏய்ப்பவரை
நையப் புடைத்தெடுக்க
நண்ணும் புயலானான்!

பேருலகில் ஆணுக்குப்
பெண்ணடிமை செய்யாத
சீரியதோர் பாதையினைத்
தேர்ந்து புவிக்குரைத்தான்!

சாதியெனும் பூதத்தின்
சழக்கும் கொடுமைகளும்
மேதினியில் வீழ்வதற்கு
மெத்த முயன்றிருந்தான்!

கீழ்சாதி மேல்சாதி
கேடு தனைக்கடிந்து
வாழ்சாதி ஒன்றெனவே
வையம் உணரவைத்தான்!

எல்லார்க்கும் எல்லாம்என்
றிருக்கும் உயர்ந்தநிலை
அல்லாமல் வேறுநிலை
அறியாக் கவிஞனவன்!

பள்ளிகொளத் தாலாட்டுப்
பாடாமல் பாரதத்தை
பள்ளி எழுந்தருளப்
பாடிநின்ற புலவனவன்!

ஆறுவது சினமெனவே
அமைதிப் படுத்தாமல்
தேறுவது ரௌத்திரமாய்த்
தினம்பழகச் சொன்னமகன்!

காற்றடைத்த பைஎனவே
கட்டுடலை எண்ணாமல்
போற்றி உறுதிசெயப்
புதியவழி காட்டியவன்!

பற்றற்று வாழ்கின்ற
பக்குவத்தைச் சொல்லாமல்
பற்றுற்று மிக்க
பணம்பெருக்கச் சொல்லியவன்!

மையலுக்கு நன்மருந்து
    மட்டுமெனக் கொள்ளாமல்
தையலுக்கு நல்லுயர்வைத்
    தரச்சொன்ன செம்மலவன்!

காதல் அறிந்த
    கலைஞனவன்! பூமியிலே
வேதம் புதுமைசெய
    விழைந்த அறிஞனவன்!

சித்த வயலதனைச்
    செம்மைப் படுத்திஉயர்
பக்தி விதைநட்டுப்
    பாவக் களைநீக்கி

தெய்வத் தருவளர்த்துத்
    தெளிவுக் கனிபறித்து
உய்யக் கொடுத்திருந்த
    ஒப்பற்ற ஞானியவன்!

கண்ணன் திருவடியை
    எண்ணித் துதிபுரிவான்!
வண்ண மயில்முருகன்
    வரவை உரைத்திடுவான்!

அண்டத்தை ஆட்டிவைக்கும்
    அன்னையவள் ஆட்டத்தைக்
கண்டுற்ற பேரின்பக்
    கடலில் திளைத்திடுவான்!

அன்பை வளர்ப்பான்! அறம் வளர்ப்பான்– எந்நாளும்
இன்பை வளர்ப்பான்! எழில்வளர்ப்பான்!
நண்பை வளர்ப்பான்! நயம் வளர்ப்பான்– மானுடத்தின்
பண்பை வளர்ப்பான்! பயன் வளர்ப்பான் பாரதியே!

என்மைந்தன் பாரதியால்
இவ்வுலக வாழ்வுயரும்!
நன்மை மிகவோங்கி
நாளும் மகிழ்வுதரும்!



# நா.மு.வேங்கடசாமி நாட்டார்

நாமகள் உலகில் வந்து
நற்பிறப் பெடுத்த தேபோல்
பூமியில் நாட்டார் வந்து
புண்ணியப் பிறப்பெ டுத்தார்!
சேமமும் சிறப்பும் அந்தச்
செந்தமிழ்த் தாய்க்கு நாளும்
நாமநீர் வேலி சூழ்ந்த
நானில மிதனில் தந்தார்!

திரிசிர புரத்தில் வாழ்ந்து
தீந்தமிழ்ப் பயிர்வ ளர்த்தார்!
அரியநற் சிதம்ப ரத்தில்
அரும்பயிர்க் கனியைப் பெற்றார்!
பெருமழை போலப் பேசிப்
பெருமைகள் அள்ளிக் கொண்டார்!
உருவமே தமிழாய் மாறி
உயர்வெலாம் மொழிக்குத் தந்தார்!

ஆவலோ டரிய நூல்கள்
யாவையும் கற்ற றிந்து!
நாவலர் என்று சொல்லும்
நால்வரில் ஒருவ ராகிக்
காவலர் போலப் பண்பு
காத்திடும் தலைவ ராகி
மேவிய புகழை இந்த
மேதினி தன்னில் கொண்டார்!

இனியநற் கட்டு ரைகள்
எழுத்தினில் வடித்துத் தந்தார்
கனியெனும் பாக்க ளுக்குக்
கண்டுநற் பொருளு ரைத்தார்
அனைவரும் போற்றும் வண்ணம்
அழகிய வாழ்க்கை வாழ்ந்தார்.
நினைவோடு வழுத்து கின்றோம்
நிதமவர் நாமம் வாழ்க!



# திரு.வி.க.

பேருலகை வாழ்விக்கும் தியாக ராஜப்
பெருமானின் திருவாரூர்த் தலத்தில் வாழ்ந்த
சீரியதோர் குடிப்பிறந்த கார ணத்தால்
தியாகத்தின் உருவாகிப் புகழ்வி ரிக்கும்
சூரியனாய்த் திகழ்ந்திருந்த திரு.வி.க.வின்
தொண்டுமனம் கண்டுலகம் வியந்து போற்றி
கூரியநல் அறிவருளும் தமிழின் ஆற்றில்
கும்மாளம் இட்டுநிதம் குளித்து நிற்கும்!

இனிமைச் சுவையா? நடை மிடுக்கா?
எளிமைச் சிறப்பா? உறு தெளிவா?
கனிவைக் கொடுக்கும் பண்பாடா?
கருத்தின் உயர்வா? கவி மரபா?
மனிதப் பிறப்பின் பெரும்பயனா?
வழுத்தும் அனைத்தும் கலந்துதந்து
புனிதம் படைக்கும் தமிழினிலோர்
புதுமை படைத்தார் திரு.வி.க. !

வாழ்வில் இணைந்த தூய்மையெலாம்
வாக்கில் இணைத்துப் பாடியவர்!
தாழ்வு படுத்தும் கேடுகளைச்
சகியா தறப்போ ராடியவர்!
பாழில் புகுத்தும் அடிமைநிலை
பாட்டில் வெறுத்துச் சாடியவர்!
ஏழை வாழ்வில் ஒளிமலர
ஏற்ற வழியைத் தேடியவர்!

போற்றிய நற்குணங்களுக்கோர் தஞ்சம் – நல்ல
புண்ணியர் திரு.வி.க.வின் நெஞ்சம்
வேற்றுமையாம் தீமைகட்கோர் நஞ்சம் -- அன்பு
வீரம் இவை வீற்றிருக்கும் மஞ்சம்.

பொதுமையிலே வள்ளல்ராம லிங்கம் – நல்ல
புரட்சியிலே தேசபக்திச் சிங்கம்
புதுமையிலே பாரதியின் அங்கம் – எங்கள்
புனிதர்தமிழ்த் தென்றல் பசுந்தங்கம்.

பத்தியிலே முந்தையநம் ஆழ்வார் – நல்ல
பண்பினில்பா ருள்ளவரை வாழ்வார்
உத்தமநல் தொண்டினிலே ஆழ்வார் – எங்கள்
உள்ளமெனும் பேரரசை ஆள்வார்.

சாதி எனும்பாகு பாடு – நமைச்
சார்ந்து தினம்கெடுக்கும் கேடு;
நீதி நிறுத்தும்துணி வோடு – நேர்
நின்றே அதனுடன்போ ராடு.

அன்புக் கனிகொடுக்கும் வித்து – நம்
அன்னைக் குலம் உயிரின் சொத்து
தென்பை அளிக்குமொரு சத்து – எனத்
தெளிய உரைத்ததமிழ் முத்து!

பெண்ணின் பெருமையினைப் பாடி – நெறி
பிறழும் மதியினரைச் சாடி
எண்ணம் செயலில்நலம் நாடி – அவர்
ஏற்ற பணிகள்பல கோடி.

உழைப்பாளித் தோழர்களைக் கூட்டி – அவர்
உரிமைகள் உணரும் உணர்வூட்டி
இழைக்கும் கொடுமைகளை ஒட்டி – வழி
இதுஎன அழைக்கும்வழி காட்டி.

மொழிஇன வெறுப்பெனும் ஓர்கேடு – இங்கு
முளைவிட விடாதுறுதி யோடு
வழிஉணரக் கூறியபண் பாடு – கொண்ட
மணவழக னார்க்கினியார் ஈடு?

காந்தியத்தில் ஊறியதோர் உள்ளம் – அது
கருணையெனும் தூய அன்பு வெள்ளம்
சாந்திபெறப் பாயுமொரு பள்ளம் –நவ
சக்திஅவர் சொல்லினிலே துள்ளும்.

உரைநடையி லேபுதுமை இருக்கும் – புவி
ஓங்கிடவே உண்மையொளி பெருக்கும்
அருமைபெறு பாடல்களின் மிடுக்கும் –நமக்கு
அடிமைநிலை போய்விடக் கைகொடுக்கும் !

தொண்டினிலும் சிறந்தததுவே றுண்டா? வாழ்க்கை
தொண்டுக்கே உள்ளது. நல்தொண்டே செல்வம்
கொண்ட பெரும் சமயமும் அத்தொண்டே அன்றோ?
குவலயமே எதிர்த்தாலும் குலைய மாட்டேன்.

தண்டமிழ்என் உயிர்மூச்சு! தமிழ்ப்பண் பாடு
தழைக்க நிதம் உழைப்பதுதான் இறைவன்ஆணை.
கண்டிடுக எனமுழங்கும் திரு.வி.க.வின்
காற்சுவட்டில் செல்வதுநம் கடமை ஆகும்.



# கல்கி கிருஷ்ணமூர்த்தி

மூதறிஞர் ராஜாஜி இந்த நாட்டை
முன்னேற்றப்ப பாதையிலே கூட்டிச் சென்று
மேதகவே உயர்த்தமொரு வேள்வி யாற்ற
வேண்டியதோர் ஆசிரமம் அமைப்ப தற்கு
மாதுமையாள் மகனுறையும் திருச்செங் கோட்டில்
மாண்புடைய என்தாத்தா நிலம்கொ டுத்தார்!
தீதறியாக் கல்கிசில காலம் ஆங்கே
சேர்ந்திருந்தார் ஆதலினால் உரிமை கொள்வேன்

பொன்னிப் புனல் பாய்ந்து
பொற்கதிரின் நெல் குவிந்து
கன்னித் தமிழ்நாட்டின்
களஞ்சியமாய்க் காட்சி தரும்
தஞ்சைப் பகுதியினைச்
சார்ந்ததொரு சிற்றூ ராம்
மிஞ்சும் அழகுடைய
மேன்மைத் திருப்பதியாம்
புத்தமங் கலம் செய்த
புண்ணியத்தின் வசத்தாலும்
அத்தன் அருட்பார்வை
அமைந்த திறத்தாலும்,
அறிவு மலைவிரும்பி
அழகுக் குழந்தையெனப்
பிறவி எடுத்திந்தப்
பேருலகில் வந்தது போல்,

ஞான ஒளிக்கதிர்கள்
ஞாலமிதில் ஒன்றாகி
மானுடமாம் நற்பிறவி
மகிழ்வாய் எடுத்தது போல்,
தேனமுத நதிவெள்ளம்
திரண்டிங் கொருமதலை
ஆனதென மேதினியோர்
அகமகிழும் விதமாகக்
கங்குல் நிறத்தழகுக்
காகுத்தன் பேர் கொண்ட
தங்கக் குணராம
சாமி ஐயர் என்பார்க்கும்,
பொய்யறியா வாழ்வறிந்த
பொற்றொடியாள், அன்புமிகு
தையல்நா யகி என்னும்
தகவுடைய நங்கைக்கும்
பிறந்து வந்த நம்மகிருஷ்ண
மூர்த்தி பெருமையெலாம்
அறிந்துரைக்க மாட்டேன்யான்!
ஆனாலும் ஒன்றிரண்டு
சொல்ல விழைகின்றேன்!
சூச்சூமமாய் நெஞ்சுக்குள்
மெல்ல அவன் கருணை
மேவிப் படர்ந்தமையால்
கன்னல் கறுக்கிருட்டுக்
களையும் கதிர்வரும் கால்
சின்னஞ் சிறியது வாய்ச்
சிரிக்கும் மகிழமலர்

அள்ளி நறுமணத்தை
அவனியெலாம் தெளிப்பதுபோல்
பிள்ளை வயதிலிவர்
பெரிதாய்க் கலைவிரித்தார்!
அகரத்தை ஓதுவித்த
ஆசிரியர் இவரறிவின்
சிகரத்தை எண்ணியெண்ணிச்
சிந்தை மகிழ்ந்திருந்தார்!
பின்னர் இவர்க்கமைந்த
பேராசான் எனும் வகையில்
நண்ணி அறிவளித்த
நல்லவர் ஐய்யாசாமி
அய்யர் எனப்படுவார்;
அருமையுள மாணாக்கர்
உய்ய வழிப்படுத்தும்
உயர்ந்த குணசீலர்!
ஆசிரியர் அமைவதெலாம்
ஆண்டவனின் அருளென்று
பேசுவதன் உண்மையினைப்
பிறரறியும் விதமாகக்
கவ்வுமிருள் நீக்குமொளிக்
கதிர்மதிபோல் வாழ்ந்திருந்த
இவ்விருவர் தொடர்பதனை
எண்ணுவதே மிகப் பொருத்தம்.
சிறுவயதில் ஞானவொளித்
தீபத்தை ஏற்றி வைத்த
அறிஞருக்கு வாழ்க்கையெல்லாம்
அன்புருகி நன்றி செயும்

எண்ணமுடன் திங்கள்தொறும்
இயன்றபணம் அனுப்பி வந்த
அண்ணலிவர் போலுலகில்
யாரும் இருந்ததுண்டோ?
இன்னும் ஒருகுருவும்
இருந்ததுண்டு– தென்பாண்டி
மண்ணில் அவதரித்த
மாமேதை பாரதிதான்!
நாட்டு விடுதலையை
நாடுதற்குச் சொல்லி வைத்துப்
பாட்டைச் சுவைக்குமொரு
பக்குவமும் தந்துதவி
தாய்மொழியின் மேம்பாட்டில்
தன்னை இணைத்தினிமை
தோயும் எழில்நூல்கள்
தோற்று விக்கும் வல்லமையும்
நல்குமொரு மானசீக
நற்குருவாய்ப் பாரதியைக்
கல்கியவர் எண்ணி எண்ணிக்
காலமெலாம் போற்றி செய்தார்!
கல்கியெனும் புனைபெயரின்
காரணத்தை இருவிதமாய்ச்
சொல்கின்றார் நெருங்கியவர்;
சுவையான செய்தியது!
தூயதமிழ் கல்யாண
சுந்தரர்மேல் வைத்தவொரு
நேயத்தின் அடிப்படையில்
நிலைத்தபெயர் கல்கி யென்பார்.

கலியின் கொடுமைகளைக்
களைத்தெறிந்து தீமைகளைப்
பலிகொண்டு நலம்காக்கப்
பரந்தாமன் விரும்பியினி
எடுக்கின்ற அவதாரம்
என்பதனால், மண்ணுலகைக்
கெடுக்கின்ற கேடுகளைக்
கெட்டழியச் செய்திடுமோர்
ஆசையினால் கல்கியெனும்
அவதாரப் பெயர்சூடி
நேசமுடன் தொண்டுசெய்யும்
நினைவில் எழுந்ததென்பார்!
எப்படியோ இருக்கட்டும்
இதயத்தின் நோயதனைச்
செப்படி வித்தை செய்து
சீக்கிரத்தில் குணமாக்கிப்
புண்கொண்ட சமுதாயப்
புரைதீர்த்து மேதினியில்
கண்கண்ட மருத்துவராய்க்
காணும் பெயரது தான்!
அடிமைத் தளையாலே
அவதியுற்ற இந்நாட்டின்
கொடியுயரப் பாடுபடும்
கொள்கைகொண்ட தன்மையினால்
அண்ணலவர் காந்திமகான்
அமைத்த வழித்தடத்தில்
எண்ணம் செயலனைத்தும்
இணைந்து நடைபோட

முன்வந்த வீரரிவர்!
மோதிநின்ற வெள்ளையரைப்
பின்தள்ளி வெற்றிபல
பெற்றுயர்ந்த தீரரிவர்!
சத்தியத்தின் நல்லுருவாய்த்
தாரணியில் காட்சிதந்த
வித்தகராம் காந்தியினை
விரும்பி வணங்குமொரு
தெய்வமெனக் கொண்டுலகு
செழிப்பதற்குப் பாடுபட்ட
மெய்யுணர்ந்த தொண்டரிவர்!
மென்மை மனத்தழகர்!
சிறைச்சாலை அறையென்ன
செய்துவிடும்? விடுதலையாம்
குறிக்கோளின் பாதையிலே
கூறுங்கள் எனக் கூறிப்
பலநாட்கள் இவர்சிறையில்
பட்டதுயர் அத்தனையும்
சொலநாக்கு வரவில்லை!
துடித்துக் களைக்கிறது!
அரசிய லின் தன்மைகளை
ஐயமற நன்குணர்ந்த
ஒருசிலரி ல் இராஜாஜி
ஒப்பிடுவார் யாரு மில்லை!
நாளை நடப்பதனை
நன்றாய் உணர்ந்துரைக்கும்
மூளை அவருடைமை!
முயற்சி தனித்திறமை!

எல்லாரும் இன்பமுற

ஏங்கும் ஒருமனது!

பொல்லாரும் வாழ்வுபெறப்

புரியும் ஒரு விழைவு!

கல்லாரும் கற்றாரும்

கருதும் ஒரு ஞானி!

நல்லாரும் அல்லாரும்

நாடும் ஒரு தெய்வம்!

இவர் வகுத்த பாட்டையிலே

ஏறு நடைபயின்று

சுவரெழுப்பி ஓவியமாய்ச்

சுதந்திரத்தை வரைந்து வைக்கப்

பாடுபட்ட கல்கியெனும்

பண்பாளர்க் இவ்வுலகில்

ஈடுகட்ட யார்வருவார்

என்றுமனம் கேட்கிறது!

தென்பொதிகை அகத்தியராய்த்

திக ழ்ந்திருந்த டி.கே.சி

அன்புமனப் படுகையிலே

அடியூன்றும் தாமரையாய்

நின்று தமிழ்மணத்தை

நெடிது வளர்த்தினிய

தென்றல் நடைபயிலச்

செய்திருந்த கல்கியினை,

கோலத் தமிழமுதம்

கொட்டிவைத்த பொற்குடமாய்ச்

சாலசி றந்தவைகள்

தந்துதவும் பத்திரிகை

தன்னருமைப் பேர்தாங்கித்

தரணியெலாம் சென்றுலவும்

வண்ணம் செயல்முடித்து

வைத்துயர்ந்த கல்கியினை

நினைத்தால் இனிக்கிறது!

நெஞ்சம் அவர் தமிழில்

தனைத்தான் இழக்கிறது!

தாவிக் குதிக்கிறது!

என்றும் தமிழ்சொல்லி

இருந்தவொரு கல்கியினை

நன்றி பல சொல்லி

நான் வணங்கி நின்றிடுவேன்!



# நாமக்கல் கவிஞர்

பாரதிக்குப் பின்னாலே தமிழ கத்தில்
பாடியதார் தேசியத்தை என்று கேட்டால்
சீருயரும் நாமக்கல் கவிஞர் என்று
சிறுமகவும் தெளிவாக எடுத்துச் சொல்லும்!
வீரமுள பாவரியால் தேச பக்தி
விதையதனை மக்கள்மன வயலில் தூவி,
பேருயரும் விடுதலையாம் பயிர்வி ளைத்த
பெரியதமிழ்க் கவிஞரவர் என்று பேசும்!

“பொய்யேதும் சொல்லாதே! பிறர்ப ழிக்கும்
போக்கிரியாய் வாழாதே!” என்று பெற்ற
தெய்வத்தாய் இளவயதில் சொல்லித் தந்த
சீரியநற் போதனையை மறந்திடாமல்
வையத்தில் உயிர்வாழ்ந்த நாள்வ ரைக்கும்
வழுவாமல் கடைப்பிடித்த கவிஞர் கோமான்
மெய்யாகத் தமிழன்னை ஈன்றெடுத்த
மிகஉயர்ந்த செல்வர்களில் ஒருவ ரன்றோ?

சொல்லுகிற விதம் நாளும் செயல்கள் ஆற்றத்
துடிக்கின்ற துணிவுடைய தூய நெஞ்சம்!
வெல்லுகிற விதமாக எழுதி நித்தம்
வெற்றிகளைக் குவிக்கின்ற விந்தைக் கைகள்!
கல்லுருகி மலராகும் வண்ணம் நல்ல
கவிபாடிப் புகழ்தேடும் கனிந்த செவ்வாய்!
எல்லையில்லாச் சிறப்புடைய கவிஞர்க் கிங்கே
இவையன்றோ செல்வமென இலங்கக் கண்டோம்!

பூவடிக்கும் கள்ளினையும் மிஞ்சி, நித்தம்
　　புதியசுவை நல்குமுயர் தமிழில், சந்தப்
பாவடிக்கும் வரமுடைய கவிஞர், இந்தப்
　　பாருலகம் ஆர்வமுடன் புகழ, வாழும்
யாவருக்கும் அறநெறியைச் சொன்னார் இன்ப
　　அன்பென்ற பயன் பெருகச் செய்தார், தெய்வச்
சேவடிக்குச் சிந்தனையைத் தந்தார் எட்டுத்
　　திசையினிலும் பாரதத்தின் பெருமை சேர்த்தார்!

பாட்டெழுதி உள்மனத்தின் உணர்வு முற்றும்
　　படம் வரைந்த நம்கவிஞர் ஓவியங்கள்
தீட்டுகிற கலையினிலும் திறமை காட்டித்
　　திகழ்ந்தரிய பாராட்டைப் பெற்றுக் கொண்டார்!
ஏட்டுமகன் தம்முடைய உளத்தை என்றும்
　　ஈரத்தின் பிறப்பிடமாய் வைத்துக் கொண்டு
நாட்டினர்க்குக் கவியுணவு சமைத்துப் போட்டு
　　நல்லிமயப் புகழ்மலையில் ஏறி நின்றார்!

“ஓவியத்தில் எமைத்தீட்டு, நாமோ உம்மை
　　உயர்வுடைய கவிதையிலே வடிப்போம்” என்று
பாவிலுயர் பாரதியால் அந்த நாளில்
　　பாராட்டப் பெற்றகவி ராம லிங்கர்
ஓவியத்தில் மட்டுமல; உளத்தை ஈர்க்கும்
　　உயிர்க்கவிதை படைப்பதிலும் சிறந்து நின்று
பூவுலக மானுடர்க்குப் பயன்கள் பொங்கிப்
　　பொலிவதற்கு வழிவகுத்த அறிஞ ராவார்!

காவிநிற உடையதனை உடுத்தி டாமல்

கமண்டலத்தைக் கையினிலே எடுத்தி டாமல்

பூவுலகைப் பொய்யென்று புகன்றி டாமல்

புண்பட்டுப் பிறர்நோகப் பேசி டாமல்

சேவையது செய்திருந்தால் போதும்; தெய்வம்

தேடிவரும் என்றுரைத்த பரம ஹம்சர்

பாவடிவில் கவிஞரிவர் தமிழில் தோன்றிப்

பாலிக்கும் பேரருளைச் சொல்லப் போமோ?

காந்தியெனும் கதிரவனைக் கண்டு விட்ட

கமலமென அவர்வாழ்ந்த கதையை நெஞ்சில்

ஏந்துகிற போதினிலே தூங்கிப் போன

இதயங்கள் விழிப்பெய்தி எழுந்து துள்ளும்!

சாந்தமெனும் தேரேறி உறுதி யோடு

சத்தியத்தின் சாலையிலே பவனி நித்தம்

போந்தவரைப் பின்பற்றி இராம லிங்கர்

புரிந்தசெயல் உயர்வெண்ணிப் பூரிப் பெய்தும்!

இந்தியரைக் கொத்தடிமை யாக எண்ணி

இடர்ப்பாடு மிகத்தந்த பிறநாட் டானை

வந்தவழி திரும்பென்று கூறி மூன்று

வண்ணமொளிர் கொடியேந்திப் போரிட் டார்க்கு

மந்திரம்போல் கவியெழுதித் தந்து வெற்றி

வாகையினைச் சூட வைத்த நாமக் கல்லார்

சுந்தரமாய்ச் சுதந்தரநல் வானில் வந்த

சூரியனாய் விளங்குவதில் விந்தை என்ன?

உப்பெடுக்கச் சென்றவர்க்குக் கவிஞர் கோமான்
உணர்ச்சி நதி பெருக்கெடுத்துப் பொங்கும் வண்ணம்
செப்பியஓர் அருங்கவியை நினைக்கும் போது
சிந்தையெல்லாம் முறுக்கேறி ஆர்ப் பரிக்கும்!
கப்புகிற அடிமையிருள் கலைந்து சூழும்
கவலையெலாம் தொடராமல் விலகிப் போக
ஒப்பரிய காந்திவழி காட்டி முன்னே
உறுதியுடன் அவர்நடந்த தெண்ணி வாழ்த்தும்.

கத்தியின்றி ரத்தமின்றிப் போர்தொ டுத்த
காந்திமகான் கொண்டதிரி சூல மாகச்
சத்தியமும் அஹிம்சையதும் அருளை அள்ளித்
தரும் ராமநாமமுமே விளங்கிற் றென்று
சித்தமதில் நன்குணர்ந்த இராம லிங்கர்
தேசமெலாம் அண்ணலைப்பின் தொடரு மாறு
சத்துடைய போர்ப் பரணி பாடித்தந்து
தமிழ்வீரம் செழித்துயரத் துணைபு ரிந்தார்!

நாசத்தின் பிடியினிலே சிக்கிக் கொண்டு
நாள்தோறும் உயிர்விட்டு நலிந்து போன
தேசத்தின் சுகத்துக்குப் பாடு பட்ட
சிறந்ததமிழ்க் கவிஞரிவர் என்னும் அன்புப்
பாசத்தின் அடிப்படையில் தமிழர் நாட்டுப்
பாங்கொளிரும் அரசவையின் கவிஞ ராக்கி
நேசித்த வரலாற்றை மீண்டும் நெஞ்சில்
நினைக்கையிலே பொன்னியென மகிழ்ச்சி பாயும்!

எத்தனையோ நூல்கள் இவர் எழுதித்தந்தார்!

எல்லாமே அமுதம்தான்; என்ற போதும்

சத்தியத்தின் ஓயாத சங்கென் றந்தத்

தவமுனியாம் காந்தியினைப் பாடி வைத்த

முத்தொளிரும் எழிற்கவிதை போதும் ; வாழ்வின்

முடிவுவரை காந்திவழி நாம்ந டக்க!

அத்தகைய கவிஞரை நாம் புகழ்ந்து போற்றி

அனுதினமும் அவர்வழியில் நடப்போம், வாரீர்!



# ரசிகமணி நினைவு வாழ்க

செந்தமிழர் நெஞ்சமெலாம் மந்திரம் போல்
திகழ்ந்தொளிரும் டி.கே.சி இனிமை சொட்டத்
தந்ததமிழ் விருந்ததனை உண்டு நாளும்
தழைத்தவர்கள் ஏராளம்! அன்னார் செய்த
சிந்தனையில் பூத்தஎழில் மலர்கள் இங்கே
செய்திருந்த அற்புதங்கள் அனந்தம்! யாரும்
சொந்தமெனக் கலையதனை அனுப விக்கச்
சொல்லியநல் லறிஞரவர் நினைவு வாழ்க !

கவிதையினை அனைவருமே ரசிப்பதற்குக்
கற்பித்த ரசிகமணி! சூழ்ந்த பேர்க்குச்
சுவையமுதம் பரிமாறிப் பசியை நீக்கிச்
சுகம்தந்த அருமைமணி! அன்பினாலே
புவியிதனில் வாழ்வோரின் இதயம் எல்லாம்
பொலிவித்த வசியமணி! வாழ்நாள் என்றும்
நவநவமாய்க் கற்பனையின் மாலை கட்டி
நல்கியநற் றமிழர்மணி நினைவு வாழ்க!



# கண்ணதாசன்

பலநூ றாண்டுகள் தவமிருந்து
    பைந்தமிழ் அன்னை பெற்றளித்த
உலகம் புகழும் ஒருகவிஞர்
    ஒப்புயர் வற்ற கண்ணதாசன்!

அனுபவப் படிப்பின் அடித்தளத்தில்
    அற்புத மான கவிக்கோயில்
புனிதம் விளங்கச் சமைத்தளித்த
    புண்ணிய வான்நம் கண்ணதாசன்!

புவியினை ஈர்க்கும் திரையிசையில்
    பொங்கும் கவித்தேன் கலந்தளித்த
கவியர செனவே பெயர்பெற்றுக்
    காலம் வென்றவர் கண்ணதாசன்!

எவர்க்கும் புரியும் படியாக
    எளிமை உடைய சொற்களினால்
உவக்கும் கவிகள் பலதந்த
    உயர்ந்த கவிஞர் கண்ணதாசன்!

உரைநடை, நாடகம், புதினமென
    ஒவ்வொரு துறையும் ஒளிகாட்டி
நிறைபுகழ் எய்திய தமிழ்க்கவிஞர்
    நீணிலம் தனிலே கண்ணதாசன்!

வண்ணத் தமிழைச் சிந்துகிற
வாயில் உதிரும் மென்நகையோ
சின்னக் குழந்தை யதன்மனத்தைத்
தெரியக் காட்டி நமைக்கவரும்!

கோலக் கவிகள் தமைஎழுதிக்
குங்குமச் சிவப்பைக் கொண்டகரம்
ஞாலம் நடக்கத் திசைகாட்டும்!
நன்மைகள் ஆயிரம் தினம்கூட்டும்!

நெஞ்சில் நிற்கும் கவிதைகளை
நிதமும் தந்த கண்ணதாசன்,
நெஞ்சில் நிலையாய் நின்றபடி
நிதமும் நமக்குத் துணையிருப்பார்!



# பன்மொழிப் புலவர்
# கா. அப்பாத்துரையார் மணிவிழா

மூச்செல்லாம் தமிழென்றே முழக்கம் செய்யும்
முழுநேரத் தொண்டரிவர்; பேசுகின்ற
பேச்செல்லாம், தாய்மொழியில் ஆர்வம் பொங்கிப்
பெருகிவரும் படிசெய்யும் பிறருக் கெல்லாம்!
வாய்ச்சொல்லில் தேனொழுக வைத்து விட்டு
மனமெல்லாம் நஞ்சிருக்க வாழ்வார் அல்லர்;
பூச்சல்ல, உள்ளபடி பொன்தான் உள்ளம்!
புவிவியந்து போற்றியவர் நீடு வாழ்க!

பெற்றதமிழ்த் தாய்மனது பெரிது வக்கும்
பீடுற்ற வாழ்க்கையினர், பெருநோக் காளர்;
உற்றதுயர் தீரவழி என்ன வென்று
உணர்ந்துகடைப் பிடிக்கின்ற உயர்வாக் காளர்!
நற்றமிழர் வாழ்க்கையிலே நலிவு நீக்கி
நலம்விளைத்துக் காக்கின்ற தனிக்காப் பாளர்!
கற்றதனைப் பிறருணரத் தரும்பேச் சாளர்!
**கா.அப்பாத் துரை**மகனார் நீடு வாழ்க!

புலவரிவர் பன்மொழியில், அலர்மேல் மங்கை
புன்னகையில் இன்பமுறும் பண்புக் கோமான்
நலம்பழுத்த தமிழ்ப்பாடல் நிதம்சு வைத்த
நாவுடையார் கூர்மதியார் எனினும் என்றும்
தலைகனத்துத் தெரியாத தன்மை யுள்ள
தமிழறிஞர் அறுபதினைத் தாண்டு கின்றார்.
மலர்முகத்தில் ஒளிதிகழ நீடு வாழ
மனமுவந்து வாழ்த்துகிறோம் மணிவி ழாவில்!

நீரிருக்கக் கானலையே நாடச் சொல்லும்
நெஞ்சினரின் வஞ்சகத்தைக் கிழித்துக் காட்டும்
கூரிருக்கும் வாள்மனத்தார் கொடுமை செய்யும்
குள்ளநரித் தனத்தையடி யோடே சென்று
வேரறுக்கச் சூள்எடுத்து வேலை செய்யும்
வீரமுள்ள திருமகனார் வெற்றி கொள்ள,
சூரறுக்க வேல்எடுத்து நின்ற அந்தச்
சுடர்முகங்கள் ஆறுடையான் அருள்வானாக!



# பத்மபூஷன் தூரன்

ஏட்டிலே எழுத்தென அமுதினை வடித்து
நீட்டுவாய்; மனித நெஞ்செனும் சிறந்த
வீட்டிலே ஞான விளக்கினை ஏற்றிக்
காட்டுவாய், இருளினை ஒட்டுவாய் தூர!
தினந்தினம் ஆறு முகந்தனைப் பாடி
மனந்தனைத் துலக்கும், நலந்தனை உடையாய்!
பரிவொடு கலந்து பாலினைச் சேய்க்குத்
தருமொரு சொந்தத் தாயினைப் போலே
நாள்தொறும் தொண்டு நயந்தனை மக்கள்
வாழ்வுறச் செய்து வளர்ந்தனை; மோஹன
காந்தியத் தூறிக் கனிந்தனை; அறத்தை
ஏந்திய நெஞ்சோ டிருந்தனை; வாழி!
கனிந்திடு பழமும் காயும் பிஞ்சும்
நினைந்திடு மாறு நிமிர்ந்தனை புகழில்!
பழந்தரு சாற்றின் பக்குவத் தோடு
குழந்தைக ளுக்குக் கூறுநின் னுரையும்
ஆதியை, பாரத அன்னையை, மேலாம்
நீதியை, நல்ல நெறியினை என்றும்
எண்ண வைத்திடும் இயல்பின ரென்பதை
நாடு முழுதும் நன்றாய் அறியும்.
துளிர்விடும் உணர்விலே தொட்டுத் தொட்டு
எழுதிடும் நினது எழுத்திலே ஒருவகை
ஜீவன் பேசும் – சிரிக்கும்! காந்தி
தேவன் காட்டிய திசையிலே இழுக்கும்!
கறையினை உடைய கண்டரைத் தொழுதிடும்
துறையினிற் பெரியரை – தூயநெஞ்சுடன்

வணங்கி வணங்கி மகிழுவாய்; நல்ல
குணந்தனில் நீயொரு கோபுர கலசம்!
புலமையும் ஆற்றலும் பொருந்தின நின்னைவந்
தென்பதில் வியப்பதற் கெதுவுமே யில்லை.
பொருந்திய திறமையைப் போற்றிப் பேணி
விரும்பிடு வார்க்கு விருந்திடு கின்றனை!
தரத்தில் உயர்ந்த தமிழ்கலைக் களஞ்சியம்
வரப்பெரி துழைத்தனை; வாகை சூடினை!
உடல்சிறி திடையே ஒத்துழை யாமல்
இடரினைப் புரிந்தது எனினும் தளரா
தேற்ற பணியினை இனிது முடித்துக்
கொடுத்தனை; வெற்றிக் கொடிபி டித்தனை!
ஆயினும் நின்பெயர் "அடிபட" ஏனோ
வேண்டாம் என்று விடுத்தனை நீயே!
உருகுவாய்; நாட்டிற் குதவுமா றெழுதிப்
பெருகுவாய்; வாழ்வைப் பெருக்குவாய், தொண்டெனில்
நானென முதலில் நண்ணுவாய்; பேரினைப்
பூணெனச் சொன்னால் புறம்புறம் சென்று
விலகுவாய்; எளிமை விடுத்த திரையதன்
பின் இருந் திடுவாய்; பெயரெதற் கென்பாய்!
சொல்வதை யெல்லாம் சும்மா கேட்டுச்
சரிசரி யென்றா தலையினை ஆட்டும்
பண்பது குன்றாப் பாரத தேசம்?
ஓடிநீ எங்குதான் ஒளிந்து கொள்ளுவாய்
தூர தூர தூரமாய்ச் செல்லினும்
வேக வேக வேகமாய் வந்து
பிடித்துத் தலையில் பெரும்புகழ் சுமத்தும்

பண்பது குன்றாப் பாரத தேசம்!
மக்கள் தலைவர் மகிழ்வொடு வழங்கிய
பட்டம் கருதிப் பாராட் டுகிறோம்!
"பொலிவாழ் பூவினைப்" பெயரோடு பொருத்திய (பத்ம பூஷன்)
செய்கையை எண்ணிச் சிந்தை மகிழ்விக்கும்
தூரன்என் றிருந்த தூரனைப் புகழின்
ஆரன்என் றாக்கிய அழகே அழகு!
தூரத்தித் தூரத்தித் தூரனைப் பிடித்திங்கு
அணைத்துக் கொண்டதோர் அரும்பெரும் புகழே!
உன்னையாம் மெச்சுதும்! உன்னையாம் மெச்சுதும்!

ஏறினார் புகழில்; இன்னும்
    ஏறுவார்; ஏறித் துன்பம்
கீறுவார்; இருட்டு நெஞ்சக்
    கீழ்மையைக் கிள்ளி இன்பம்
ஊறுமா றுழைப்பார்! போன
    உடல்நலம் பெறுவார், இந்தத்
தூரனார் நீடு வாழ
    முருகனைத் தொழுவோ மாக!



# சா. கணேசன் மணிவிழா

அடிநினைந் துருகுவார் அனுபவப் பொருளை,
முடிதுறந் தருளிய முழுமுதற் சுடரை,
உலக முழுவதும் உறவெனக் கொள்ளும்
கலையுணர் வுள்ளநற் கருணைப் பெருக்கினை,
பாதத் துறுபவர் பகைவரே யாயினும்
ஆரத் தழுவி அணைக்கும் கரத்தினை,
வரமெனும் பெயரால் வந்தவெந் துயரினைச்
சிரமுறும் முடியெனச் சிரித்தமா மணியை,
காவியக் கோயிலின் கருவறைக் குள்ளே
மேவிட வைத்துத் தமிழ்மெரு கேற்றிய
கவியுல கரசனைக் கம்பனை இந்தப்
புவியினி துணர்ந்து புகழ்ந்திடு மாறு
பணிசெய லாம்நம் பைந்தமிழ்க் காயிரம்
அணிசெய லாமென ஆர்வம் ததும்ப
நினைத்துக் கழகமும் நிறுவி வளர்த்தே
எடுத்த காரியம் இனிது தொடர்ந்து
சாதனை செய்திடும் சா.கணேசனை
மேதினி புகழ்வதில் வியப்பெது மில்லை!
ஏற்றநல் லெண்ணமும் எண்ணிய முடிக்கும்
ஆற்றலும் பொறுப்பும் அமைந்தவர் யாரும்
குறித்த நேரத்தில் கூட்டந் துவங்கப்
படித்திட லாமொரு பாடம் இவரிடம்!
வருகிறதாமே மணிவிழா! வயதிவர்க்(கு)

அறுபதா? என்ன அதிசயம் ஐயா!
அறிவினால் இன்னும் அதிகம் மதிக்கலாம்;
உருவினால் அறுபதென் றுலகம் ஒப்புமோ?
காலங் கடந்து வருகிற கம்பனை
ஞாலம் வியத்து நயந்தே உருகிட
பாய்ந்து பெருகிடும் பாடற் சுவையினில்
தோய்ந்து நாமெல்லாம் தொடர்ந்து மகிழ்ந்திட
இன்னுமோர் அறுபதாண் டிருந்துக ணேசனார்
கன்னித் தமிழினைக் கம்பன் புகழினால்
வளர்த்திடக் குற வள்ளியை அள்ளி
அணைத்தவன் முருகன் அருள்வா னாக!

❄ ❄ ❄ ❄

# அழ வள்ளியப்பா

வையமே வியக்கும் வண்ணம்
　　வள்ளியப் பா! உன் நெஞ்சுள்
தெய்வமே குழந்தை யாகித்
　　திருவிளை யாடல் நன்று
செய்வமே என்று மெள்ளச்
　　சேர்ந் ததோ? சிறுவர்க் காகப்
பெய்வமே பாடல் என்று
　　பெய்ததோ? உண்மை பேசு!

வானத்தை அளந்து பார்க்க
　　வாய்த்திடும் தெளிவை, தூய
ஞானத்தை எய்தி எய்தும்
　　நலத்தினை, உயிரின் மேலாம்
மானத்தைச் சின்னச் சின்ன
　　வார்த்தையில் கோத்து, நெஞ்சின்
ஊனத்தை நீக்கும் பாடல்
　　உரமிடும் கரமே வாழி!

முற்றிய தலையும் வாங்க
　　முடிந்திடாக் கருத்தை, வந்து
சுற்றிய குழந்தை நெஞ்சில்
　　சுலபமாய் சென்று தாவிப்
பற்றியே படரு மாறு
　　பாடலைப் புனைய எங்கே
கற்றனை? ஐயா! என்றன்
　　காதிலும் போட்டு வையேன்!

(வேறு)

குடித்தவர்கள் மேலும் குடித்துயர வந்து
வடித்தாய் கவிதை வளர்தமிழில்! சென்று
பிடித்தால் பிடியிருக்கும் பிஞ்சுகளும் வாங்கிப்
படித்தால் பதியும் படி.

மோனை எதுகை முறிவறியாப் பாடலிலே,
ஆனை குதிரை அழகையெலாம் – தேனை
மிதிக்கும் தமிழில் மிகத் தருவாய், கண்டு
குதிக்கும் குழந்தைக் குலம்!

காட்டிலுறும் யானையினைக் கையிலுறும் பானையினை
ஒட்டுங் கலையும் ஒருகலையா? எழுத்துக்
கூட்டுஞ் சிறிய குழந்தைக்குப் பாட்டெழுதிக்
காட்டுங் கலையே கலை!

(வேறு)

வஞ்சகம் அறியாய்; நல்ல
    மனத்தினால் வளர்வாய்; சின்னப்
பிஞ்சினுள் கனியின் சாறு
    பெருகிடப் புரிவாய்; எண்ணும்
அஞ்சினுள் ஐம்ப தேற்றும்
    அருந்திற லோய்! கு ழந்தை
நெஞ்சினுள் எழுந்த கோயில்
    நடுவினுள் நின்றாய் நீயே!

குழந்தைய ரன்றி, கையில்
　　கோல்பெற முதுகில் கூனல்
விழுந்தவர் தாமும் மெத்த
　　விரும்பிநின் பாவில், முங்கி
அழுந்துவர், புதியோ ராக
　　அரும்புவர் மாச கன்று,
செழுந்தமிழ் நின்கை பட்டுச்
　　சித்தினைப் புரிந்த தென்று!

விதையுளே மரமி ருந்து
　　வெளிவரும்; விரியும்; வெற்றுச்
சதையுளே உயிரி ருந்து
　　சாதனை புரியும், நின்றன்
கதையுளே கவியி ருந்து
　　கருத்தினைச் சொரியும், நாளும்
மதியுளே வளர்ந்து மங்கா
　　மணிவிளக் கெரியு மாறே!

வஞ்சக நோக்கு வந்து
　　வயதுறும் போது பிள்ளை
நெஞ்சக வேலி யாகி
　　நிற்பதன் முன்னே நீ போய்
மிஞ்சிடும் அன்பி னாலே
　　அவனொரு மேலோன் ஆகக்
கொஞ்சுவாய் குலவு வாய்நற்
　　குழந்தையாய் உலவு வாயே!

வம்பினைப் பண்ணும் சின்ன
வயதினைக் கோட்டை விட்டுத்
தெம்பினை யிழந்த பின்னே
விதைப்பதா தெளிவு? மாட்டுத்
தும்பினை விட்டு வாலைத்
தொடர்வதா அறிவு? நன்கு
நம்பினை பருவம் பார்த்து
நலத்தினைப் பயிர் செய்தாயே!

பன்னெடுங் கால மாகப்
பச்சிளங் குழந்தைக் காக
நின்னெடுங் காத லாலே
கவிதையே நிகழ்த்தும் தொண்டு
முன்னிடம் பெற்று வெள்ளி
முளைக்கிற(து); இன்னும் ஓங்கிப்
பொன்னிடம் புகுந்த வைரப்
புதுநகை யதுவும் பூணும்!

அறிந்திடும் அறிவை யார்க்கும்
ஆசையாய்ப் பங்கு வைப்பாய்;
செறிந்திடும் கவிதை யாக்கிச்
சிறுவருக் கீவாய்; என்றும்
திறந்தநல் மனம்கொண் டேநீ
திகழுவாய்; திறமை காணில்
புறந்தனில் விளக்கிப் பேசிப்
புகழுவாய்; பூரிப் பாயே!

நீபுறம் போகாய்; அன்பு
    நெஞ்சுளே நிற்பாய்; வானத்
தேவரும் வியந்து போகத்
    திரளுவாய் அமுத மாக!
ஆபர ணம்தாய்க் கேற
    அழைக்கிறேன்; "சொக்கத் தங்கக்
கோபுரம் போலப் பாடிக்
    குவிக்கிறேன்" என்று வா! வா!

சிறுவருக் குரிய தான
    செந்தமிழ்க் கவிதை பாடிப்
பெறுவதற் கரிய தான
    அறிவினைப் பெருக்கு கின்றாய்!
நிறுவுதற் கரிய ஞான
    நிலையமாய் நெஞ்சம் மாறி
வருவதற் கெளிய சொல்லில்
    வந்துவந் துருக்கு கின்றாய்!

முகத்தினை விட்டு நீங்கா
    முறுவலும், அன்பு வாழும்
அகத்தினை விட்டு நீங்கா
    அழகதும், வம்பு பேசும்
இகத்தினை அதிகம் எண்ணா
    எளிமையும், சிறுவர் நெஞ்சம்
புகத்தனி உரிமை கொண்ட
    புகழதும் வாழி! வாழி!

எழுதிடுங் கவிதை யாலே
    எழுப்புவேன் நாட்டை; நல்ல
தொழிலெனக் கதுவே என்று
    சொன்ன பா ரதிதான், விம்மி
அழுதழு தோய்ந்த பாப்பா
    அறிவுறக் கருதி வாழ்வில்
பழுதறப் பாடி வைத்தான்
    பாதையைப் போட்டு வைத்தான்!

தொடர்ந்தனை; பெற்ற தாயர்
    தொட்டிலின் அருகி ருந்து
தடந்தனைக் காட்ட நன்கு
    தவழ்ந்தனை; எழுந்து நின்று
நடந்தனை; குழந்தைக் கூட்டம்
    நனிமகிழ் வெய்தப் பாடும்
இடந்தனில் அரச னாக
    இருந்தனை, இருப்பாய் வாழி!

(வேறு)

பிஞ்சுக்குப் பாடல் ஒன்றிரண் டெழுதிக்
    காட்டி வைத்தார் – அன்று
பிள்ளையார் சுழியைப் பாரதி யார்தான்
    போட்டு வைத்தார்.
அஞ்சுக்குப் பத்தாய்க் கவிமணி வந்து
    தீட்டி வைத்தார் – நீ
அவர்வழி சென்று கவிதையின் தொகையைக்
    கூட்டி வைத்தாய்!

எமக்கென ஒருவன் உழைக்கிற மனிதன்

இருக்கின்றாய் – பல

எழிற்கவி சொல்லிக் குழந்தைகள் அறிவை

வளர்க்கின்றாய்.

சுமக்கிற சுமையைத் தருகென வாங்கிச்

சுமக்கின்றாய் –படு

சுட்டிகள் உலகின் மத்தியிலே மனம்

உவக்கின்றாய்!

குழந்தைகள் உலகில் நுழைந்தத னாலே

உயர்வடைந்தாய் – அவர்

குறும்பினில் இனிக்கும் கரும்பினைச் சுவைக்கும்

இயல் படைந்தாய்!

பழந்தமி ழினிமை இளந்தளிர் மனத்தில்

பயிராக – நீ

பாடிடும் பாட்டை அறிகிற தகிலம்

தெளிவாக!

அடம்பிடித் தேயழும் குழந்தையும் விரும்பிக்

கேட்டு வரும் – கவி

ஆறுகுளத்தினை ஏழு சுரத்தினைக்

காட்ட வரும்

படம்பிடித் தேதர நீவரு வாய் புதுப்

பாட்டு வரும் – இளம்

பருவத்தி லேதமிழ் உருவத்தி லேஅறி

வூட்ட வரும்!

கள்ளங்கப டறியாப் பிள்ளைகளை யுலகம்
அறியவைக்க – வருங்
கவலையி னிருளை அறிவொளி கொண்டு
முறியடிக்க
உள்ளங்களை நாளும் நல்லவித மாக
விரியவைக்க – மிக
உதவு கிறாய் நீ வாழிய வாழி
நனி சிறக்க!

(வேறு)

முத்தினை ஒத்த பாடல்
மொழிந்தனை; தமிழ்முப் பாட்டன்
சொத்தினைப் பெருக வைத்துச்
சுகந்தனை வரவு வைத்து,
பித்தினை மனம தாகப்
பெற்றவர் சுமைகு றைத்து
வைத்தனை; வருங்கா லத்தை
வார்த்தனை நன்றே வாழி!

(வேறு)

கண்டுநிகர் என்னும் கவிதையினைவிரும்பி
உண்டு வளர் கின்ற உயிரெல்லாம் – தொண்டுயர
வாழுமே வாழுமென்று வாழ்த்துவதால் வந்தினிது
சூழும், வேல் நல்கும் சுகம்!

* * * *

# கி.வா.ஜ. என்னும் மூன்றெழுத்தண்ணல் வாழ்க!

வீட்டுக்கு வீடொளிர் விளக்கென ஸ்ரீராம
கிருஷ்ணராம் பரம ஹம்ஸர்
மேன்மைகள் கூடிய சீடரைப் புவியெல்லாம்
உணர்ந்திட வழிய மைத்தார்!
நாட்டுக்கு நிறைவான பெருமையை ஈட்டியெந்
நாளிலும் உயர்வு நோக்கி
நடந்திட்ட விவேகா நந்தர்தம் குருவினை
நானிலம் அறிய வைத்தார்!
பாட்டுக்கும் பண்புக்கும் பரிவோடு நல்லதோர்
பாதையை அமைத்த ளித்துப்
பைந்தமிழ்ப் பாட்டனார், ஜகந்நாதச் செல்வரைப்
பாரிலே மிளிர வைத்தார்!
கோட்டுக்குள் அடங்காத புகழினைக் கொண்டதம்
குரு, சாமி நாத ஐயர்
கோலநற் றமிழ்நூல்கள் கொணரவே கிவாஜ
குறையாத உதவி செய்தார்!

உவேசா என்றிந்த உலகத்தார் அன்புடன்
உரைத்திட்ட தமிழ றிஞர்பால்
ஒப்பற்ற செந்தமிழ் அப்பழுக் கில்லாமல்
ஓதியே உணர்ந்த றிந்த

சிவாஜ என்னுமோர் மூன்றெழுத் தண்ணல்பேர்
    கேளாத செவியும் உண்டோ?
கிண்கிணிக் குரல்தரும் தண்டமிழ் உரைபற்றிக்
    கிளத்தாத நாவும் உண்டோ?
பூவாளிக் குள்நின்று புறப்படும் தண்முத்தப்
    பொற்புடைச் சொற்கள் சிந்தி
புவியினை ஈர்த்திடும் கவியினை யாத்திடும்
    புதுயுகப் புலவ ரிவரோ?
தூவானத் துள்ளலின் இனிமையும் கருமையும்
    தோய்ந்திடக் கதைகள் கோடி
சொல்லியே நெஞ்செலாம் அள்ளிடும் அற்புதச்
    சூழ்ச்சியின் முதல்வ ரிவரோ?

தூயவெண் கதராடை அணிந்திடும் எழிலான
    தோற்றமும் சிரித்த முகமும்
சுடர்விடும் சிந்தனைக் கோடுடை நெற்றியில்
    துலங்குவெண் ணீறி னழகும்
நேயமே விளைகின்ற நெஞ்சமும் வாழ்விலே
    நேர்மையும் ஒழுங்கு முறையும்
நீதியில் பிறழாது நித்தமும் சத்திய
    நெறியிலே செல்ல விழைவும்
ஆயநற் கலையெலாம் ஆய்ந்தறிந் துயர்வுறும்
    ஆர்வமும் அறிவின் ஒளியும்
அயர்வினால் இயலாமை என்பதை ஒருநாளும்
    அறியாத செயலின் திறனும்
தீயவை காண்கின்ற வேளையில் அவைகளைத்
    தீய்த்திடத் துடிக்கும் குணமும்
சேர்ந்தவோர் உருவெனத் திகழ்கின்ற ஜகந்நாதர்
    தெய்வமே தந்த வரமோ?

கலையாவும் தந்திடும் கருத்தினில் உலவிடும்
கலைமகள் ஏடு நித்தம்
கவினோடு விளங்கிடக் காரண ராகிய
கலைமேதை ஜகந்நா தர்தான்
நலமோடு பொருளோடு நலியாத உடலோடு
நாளுமே அமைதி யோடு
நாட்டிலே அனைவரும் போற்றியே பேசிடும்
நன்னிலை தொடர்வ தாகி
அலர்மேலு மங்கையின் அன்பெனும் கங்கையில்
ஆடிக் களிப்ப தற்கும்
ஆனந்த மோங்கிய தேனென்ற வாழ்க்கையின்
அனுபவம் உணர்வ தற்கும்
மலர்மேவு திருமகள் மருகனாம் முருகனை
மனமார வேண்டுகின்றோம்
மங்காத தமிழோடு சிங்கார நடைபோட
மகிழ்வோடு வாழ்த்து கின்றோம்!

☼ ☼ ☼ ☼

# ஆனந்த வாரி

நாடறிந்த அவர்பற்றி நானா எழுதுவது?
ஏடறிந்த தில்லை இதுபோல் ஒரு புதுமை!
ஆனந்த விகடனவன் ஆணையி டும்போது
ஏன்என்று கேட்பதற்கு என்னால் முடியாது!
சரியென்று சொல்லிவிட்டேன் சம்மதமும் தந்துவிட்டேன்
வாக்குக் கொடுத்துவிட்டு மாற்றுவது கூடாது.
என்றாலும் மனத்தினிலோர் எண்ணம் எழுகிறது
பேருக்கா எழுதுவது? பின்னென்ன? அவர்பற்றி
யாருக்குத் தெரியாது? யானெதற்குச் சொல்லுவது?
எப்பொழுது எப்பொழுதென் றேய்இத் தவமிருந்து
தப்பாமல் – வாரம் தவறாமல் இவ்விகடன்
வாங்கிப் படிக்கின்ற வாசகரைப் கேட்கின்றேன்;
நமக்குள்ளே பொய்யெதற்கு? நாள் தவறா திறைபுகழே
உரைக்கின்ற அவர்பற்றி உங்களுக்கா தெரியாது?
திருமுருக கிருபையினால் தினமும் கதைசொல்லி
அருள்வளர்க்கும் வாரி நம(து) ஆனந்த வாரியினை
அறியாதா வாழ்கின்றீர் – ஐயா எனக்கென்ன
புரியாதா? சும்மா புளுகுகிறீர் வேறென்ன?
வாடிக்கை யாய்த்தினமும் மாலைப் பொழுதினிலே
வேடிக்கை யாக விளங்காத தத்துவத்தை
விளக்கும் தனிச்சுடரை வீடுதோறும் பக்தி
விளக்கும் அருளிசை வாரியினைத் தெரியாதா?
கசக்கின்ற எட்டி – கடவுட் கதைகளென
இசைக்கின்ற பேர்களையும் இழுக்கின்ற காந்தத்தை,
கல்மனத்துக் காரரையும் கசிந்துகண் ணீர்மல்கும்
நல்மனத்துக் காரர்களாய், ஞானப் புதல்வர்களாய்

ஆக்கி அருள்சொரியும் அற்புதத்தை, பக்தர்களை
ஊக்கி உயர்விக்கும் உன்னதத்தைத் தெரியாதா?
ஆயிரம்பல் லாயிரமாய் அதன்மேலாய் எங்கெங்கோ
போயிருந்த கூட்டத்தை புனிதத் திசைகாட்டிக்
கூவும் இனிய குரலாரை – பக்திவிதை
தூவும் உயர்ந்த தொழிலாரைத் தெரியாதா?
இனியஉரை வலைவீசி இதயத்தைப் பிடிப்பாரே,
கனியமனம் கனிய கதைகள்பல உரைப்பாரே,
வங்கக் கடல்புகுந்து வந்ததெனச் சன்மார்க்க
சங்கம் திரண்டுவரும் சாதனையைச் செய்வாரே,
கதையூடே கேள்விக் கணைகள் பலபோட்டு
மூத்த அறிஞரெலாம் மூக்கில் விரல்வைக்க,
பிஞ்சுகள் வாய்திறந்து பேசவைத்துப் பார்ப்பாரே,
அவரைத் தெரியாதா? அடியேனுக் கேரையம்,
தவறென்றால் மன்னியுங்கள் – தமிழகத்தா வாழ்கின்றீர்!
முற்றுந் துறந்த முனிபோல வாழ்வாரைப்
பற்றியவன் என்ன பகர்கின்றான்?
கருதுவதால் ஏதோ கதையளந்து பார்க்கின்றீர்
சரி அதனால் என்னவென்று சந்திப்போம் நாமவரை!
வாருங்கள் என்னோடு வாரியினை மேடையிலே
பாருங்கள் நெஞ்சினிலே பக்தி ரசம் ததும்பும்!
தெரிகிறதா தொண்டின் திருவுருவம்! இப்பொழுது
புரிகிறதா அவர் தொடர்ந்து புரியும் திருப்பணிகள்?
வெறும்பேச்சா அவர்பேச்சு? வேண்டும் "பொருளூறி"
வரும் பேச்சு; நல்லதமிழ் வாள்வீச்சு அவர்பேச்சு!
பண்டிதர்கள் நாட்டில் பலருண்டு கற்றதனைக்
கொண்டு தான்வருவார் குழப்பிவிட்டுப் போய்விடுவார்
மற்றும் சிலருண்டு மணிமணியாய்ப் பேசிடுவார்
சற்றும் அறிவுச் சரக்கிருக்காதவர் பேச்சில்–

ஆனால் நமதுகிரு பானந்த வாரியார்
அறிவுடனே சரக்கும் அமைந்ததொரு பேச்சாளர்
வளர்க்கின்றார் பேசி வளர்கின்றார் – என்றும்
உழைக்கின்றார் நெஞ்சம் உவக்கின்றார் – நாட்டில்
திருப்பணிகள் ஒவ்வொன்றாய்ச் செய்து முடிக்கின்றார்!
தளர்ந்து வரும் கோபுரத்தைத் தாங்கிப் பிடிக்கின்றார்,
கல்வி வளர்க்கின்றார் கண்ணைத் திறக்கின்றார்!
கஞ்சத் தனத்தையுமே கர்ணன் தனமாக்கும்
விஞ்சையெதும் உள்ளதுவோ? வேறென்ன கைவசமோ?
சேர்த்துவைத்துப் பார்க்கின்ற செல்வர்களைக் கூட அவர்
ஈத்துவக்கச் செய்கின்றார் இன்பம் கொடுக்கின்றார்!
அருள்வழியும் பேச்சாலே அஞ்ஞானம் எரிக்கின்றார்!
இருள்பொழியும் நாத்திகத்தை –இல்லையெனும் வாதத்தை
பொல்லாத இரணியத்தை எல்லாம் எதிர்க்கின்றார்!
பொருதியுறும் வெற்றியினால் புன்னகையே உதிர்க்கின்றார்!
தமிழறிந்த நெஞ்சிலெல்லாம் தங்கி விளையாடுகின்றார்
அமுதத்தைத் தமிழென்று அள்ளிக் கொடுக்கின்றார்!
கல்லைக் கரைவிப்பார் காங்கேய நல்லூரார்
மல்லைய தாசின் மகன்கடிய சொல்கூறார்
ஆழ்ந்தபடிப் பவர்படிப்பு; அவர்பேச்சு மாசு எடுப்பு
நகையிருக்கும் உரையிருக்கும்; நடுநடுவே இசையிருக்கும்
திரைவளர்க்கும் நடிகர்களே திகைக்கும் நடிப்பிருக்கும்
முத்தமிழ்தான் அவர்சிந்தும் முத்துத் தமிழென்றால்
ஒத்துக்கொள்வாறெவரும்! உண்மையது –நன்றாகக்
கேளுங்கள் அவர்பேச்சைக் கேட்டதெல்லாம் போதுமென
மீளுங்கள் உங்களுக்கு “வீடுண்டு” ஞாபகத்தில்
வையுங்கள் திருமுருக வாரிமொழிக் கேற்ப நடந்
துய்யுங்கள் வாழ்வில் உயர்ந்து!



# மாவீரர்கள் மருதுபாண்டியர்கள்

அலைமோதும் கடல்தாண்டி பார தத்தில்
அடியெடுத்து வைத்தவர்க்கு வரவு சொல்லி
இலைபோட்டு நன்முறையில் உபச ரித்தும்
இருப்பதற்குத் தோதாக இடம்கொ டுத்தும்
விலைவைத்துப் பொருள்விற்கத் துணைபு ரிந்தும்
மெல்லிதய நல்லன்பைப் பொழிந்த வர்க்கே
உலைவைத்த வெள்ளையரை ஒழித்துக் கட்ட
உழைத்தவர்கள் நன்மருது பாண்டி யர்கள்!

பொல்லாத வெள்ளையர்கள் நமது நாட்டுள்
புகுந்துபல ஏமாற்று வித்தை காட்டிச்
செல்லாத காசாக மக்கள் தம்மைச்
செய்தரசைக் கைப்பற்றிச் சிறுமை கூட்டி
இல்லாத வரியெல்லாம் கேட்டு நித்தம்
இன்னலினைப் புரிந்தமையால் வீறு கொண்டு
வில்லாலே எய்கின்ற அம்பைப் போல
வெளிப்பட்டார் நன்மருது பாண்டி யர்கள்!

எக்குறையும் இல்லாமல் எப்பு றத்தும்
எழில்நிறைய வளம்பெருக விளங்கி நின்ற
முக்குளமாம் பதியினிலே உடையன் சேர்வை
முழுநிலவுத் திருமுகத்தாள் ஆனந் தாயி
தக்கவொரு மணவாழ்வில் மருதச் சாமி
தண்ணருளால் பெற்றெடுத் தந்த செல்வர்
எக்கணமும் தாம்பிறந்த மண்ணைக் காக்கும்
இனியபணி குறிக்கோளாய் ஏற்றி ருந்தார்!

சேதுபதி மன்னரெனத் திகழ்ந்தி ருந்த
திரு.முத்து விஜயரகு நாத ருக்குத்
தீதுவரா தரியபடைத் தலைமை தாங்கித்
தினமுதவி செய்திருந்த உடையன் சேர்வை
மாதவத்து மைந்தர்களும் தந்தை போல
மாண்புடைய தளபதிகள் ஆகி ராம
நாதபுரச் சீமையினைக் காப்ப தற்கு
நல்முத்து வடுகருக்குத் துணைநின் றார்கள்.

காரணமாய்ப் பொய்கூறிப் படையெ டுத்த
கர்னலவன் ஸ்மித்என்பான் கலங்கும் வண்ணம்
வீரமுடன் போரிட்ட வேந்த ருக்கு
வேல்விழியாள் அவர்மனைவி வேலு நாச்சி
கூருடைய வாளேந்திக் களத்திற் கேசிக்
கொஞ்சமுமே அஞ்சாமல் கைகொ டுத்தாள்!
சீருடைய நன்மருது பாண்டி யர்கள்
திறமையுடன் பகைவர்களைச் சிதற டித்தார்!

ஆனாலும் சேதுபதி மன்னர் அந்த
அமர்க்களத்தில் விழுப்புண்ணோ டிறப்பை எய்த,
வீணாகக் குழம்பாமல் வேலு நாச்சி
வெள்ளையரை விரட்டிவிட உறுதி பூண்டு
தேனோடும் திண்டுக்கல் மலைக்குச் சென்று
திறல்வீரன் ஹைதரலி உதவி கேட்டார்!
சேனாதி பதிகளிரு பேரும் அந்தத்
திருவாட்டி உடனென்றும் துணையி ருந்தார்.

ஒப்பரிய வீரத்தின் உருவாய் நின்றே

ஓங்குபுகழ் தனைக்கொண்ட வேலு நாச்சி

சிற்பரனின் திருவடியைத் தேடிச் செல்லச்

சிவகங்கைச் சீமையினை ஆளும் வாய்ப்பு

வெற்பனைய தோளுடைய வீர ரான

வியன்மருது பாண்டியர்க்கு வரலா யிற்று!

தப்பறியாச் சிந்தையுள சோத ரர்கள்

தக்கபடி அச்சீமை தன்னை ஆண்டார்!

எழிலார்ந்த சிவகங்கைச் சீமை அந்த

இருவருயர் ஆட்சியினால் பெற்ற நன்மை

மொழிதேர்ந்து கூறுதற்கு முடிந்தி டாது!

முகம்மலரத் தமதுக்குடி மக்கள் வாழும்

வழி தேர்ந்து செயலாக்கி வளம்கு வித்த

வல்லவர்கள் உண்மையிலே அவர்க ளாவர்,

களிகூர்ந்து வையமெலாம் வாழ்த்தி நிற்கக்

கவினோடும் புகழோடும் அரசு செய்தோர்!

தங்குதடை யில்லாமல் செல்வம் ஓங்கித்

தருமநெறி திசையெட்டும் ஒளி பரப்பி

எங்கணுமே இன்பமெனும் வெள்ளம் பாய

ஏற்றவகை பணியாற்றி, அன்பைப் போற்றிக்

கங்கையினைத் தலைசுமந்த கடவுட் கான

காளையார் கோயிலதன் கோபு ரத்தைப்

பொங்குமெழில் வான்முழுதும் விரிந்தி ருக்கப்

பொற்புடனே அமைத்தளித்தோர் அவர்கள் தாமே!

அண்ணனவர் வேட்டையிலே ஆர்வம் காட்டி
அனுதினமும் காடுகளில் வாசம் செய்ய
வண்ணமுறத் தம்நாட்டை வாழ வைக்கும்
வகையறிந்து நிர்வாகம் தம்பி செய்தார்!
தண்ணினிய தமிழ்மொழியும் கலைகள் தாமும்
தரணியிலே ஓங்குதற்குக் கொடைய ளித்தார்!
உண்ணுதற்குக் கையேந்தும் ஒருவ ரேனும்
ஊர்களிலே இல்லாமல் அறம்வ ளர்த்தார்!

மனத்தினிலே தீயெரிய மீண்டும் மீண்டும்
வன்மையுடன் படையெடுத்த வெள்ளைக் காரன்
கணத்தினிலே மருண்டோட விரட்டி நாட்டைக்
காத்தார்கள் இரண்டுமுறை! என்ற போதும்
இனத்தினன் ஊமைத்துரைக்கா தரவு காட்டி
இருக்கவென அடைக்கலமும் கொடுத்த தாலே
சினத்தினிலே மிகமூழ்கிப் பகைமை கொண்டு
சிவகங்கைச் சீமையின்மேல் போர்தொ டுத்தான்.

ஆனபலம் அத்தனையும் திரட்டி மிக்க
ஆற்றலுடன் பாண்டியர்கள் போர்பு ரிந்தும்
ஈனமனப் பரங்கியரை வீழ்த்தி ஓட்ட
இயலாமல் போர்நீண்டு கொண்டிருக்க,
மானமிலாச் சிலருடைய துரோகத் தாலே
மாற்றான்பால் இருவருமே சிக்கிக் கொண்டார்!
கோனெனவே வாழ்ந்தவரைத் திருப்பத் தூரின்
கோட்டையிலே வெள்ளையர்கள் தூக்கி லிட்டார்.

திருப்பத்தூர்க் கோட்டைக்குள் அவ்வி ரண்டு
செயல்வீரர் திருமேனி அமைதி கொள்ள
விருப்பத்திற் கேற்பஅவர் சிரமி ரண்டும்
மேன்மைமிகு காளீசர் ஆல யத்தின்
உருப்பொலியும் கோபுரத்தின் எதிர்ப்பு றத்தில்
ஒளிதிகழும் நற்சமாதி வைக்கப் பெற்றே
அருமையுற இன்றைக்கும் உள்ள தாங்கே!
அனைவர்க்கும் வழிகாட்டி நின்ற வாறு!

மண்மீதில் அடிமையென வாழ்வ தற்கு
மனமின்றிப் போராடி உயிர்து றந்த
நன்மருது பாண்டியரின் வாழ்க்கை இந்த
நாட்டவர்க்கோர் அணையாத தீப மாகும்!
எண்ணமதில் அவ்விருவர் தமையி ருத்தி
எந்நாளும் நம்நாட்டுக் குழைப்போ மானால்
உண்மையிலே பாரதர்நாம் உயர்ந்து வாழ்வோம்!
ஒப்பரிய புகழிமய உச்சி காண்போம்.



# தொடமுடியாத உயரத்தைத் தொடுதல் கூடும்

என்புக்குத் தெருச்சண்டை போட்டு வீணாய்
இழுக்குற்று மனித இனம் வீழ்ந்திடாமல்
இன்பத்தில் திளைத் தோங்கி ஏற்றம் எய்தி
இருந்தொளிர வழிகாட்டி அழைத்துச் செல்ல
அன்புக்கோர் உருவத்தை அளித்தவ் வீசன்
அனுப்பிவைத்த தூதுவரே காந்தி அண்ணல்
என்பதனை நல்லறிஞர் உலகம் ஒப்பும்;
எந்நாளும் உளமாரப் போற்றி நிற்கும்!

ஈசனவன் திருநாமம், அஹிம்சை, சத்யம்
என்பவற்றைத் திரிசூலம் போலே ஏந்தி
நேசமுடன் உலகத்து மக்கள் வாழ
நிதம் தொண்டு செய்வதற்கே பிறப்பெ டுத்த
மாசற்ற மாமனிதர் காந்தி நெஞ்சில்
மலையருவி எனப்பொங்கிப் பாய்ந்த அன்பால்
தேசத்தில் புதிய ஒளி உண்டா யிற்று!
சிந்தையிலே இருந்தஇருள் அகன்றோ டிற்று!

அடிமையெனக் கிடந்துழன்ற நிலைமை மாறி
ஆனந்த சுதந்திரராய் பார தர்கள்
துடிப்போடு முன்னேறி வாழ்வ தற்குத்
துணைநின்ற காந்திமகான் சொற்ப டிக்கு
நடப்பதுவே நாம்அவர்க்குச் செய்து காட்டும்
நன்றியெனும் எண்ணத்தில் தொடர்ந்து சென்றால்
தொடமுடியா உயரத்தைத் தொடுதல் கூடும்!
சுகம் நமக்கு நிரந்தரமாய் அமைய லாகும்!



# கனல்வளர்க்கும் திருப்பூர்த் திருக்குமரன்

உலகனைத்தும் ஒளிவீசி நின்றி ருந்த
ஒப்பற்ற பாரதத்தாய் இருளில் சிக்கி
நலமனைத்தும் கைநழுவிப் போக, வேற்று
நாட்டாருக் கேவல் செயும் அடிமை யான
நிலைகண்டு மிகவாடிக் கண்ணீர் சிந்தி
நெட்டுயிர்த்துத் தாயவளின் துயரை நீக்க
உலைவின்றிப் போராட உறுதி பூண்ட
உயர்வுடைய பெருந்தலைவர் காந்தி அண்ணல்!

ஆங்கிலத்துப் பேரரசிற் கஞ்சி டாமல்
ஆண்டவனின் துணைக்கொண்டு நேர்மை யோடு
பாங்கொளிர அரசியலில் பவனி வந்த
பாரதத்தின் மூத்தமகன் காந்தி சென்ற
ஓங்கியவோர் வழித்தடத்தில் மக்கள் வெள்ளம்
உவகையுடன் பின்தொடர்ந்து நாட்டில் நல்லோர்
ஏங்கியநற் சுதந்திரத்தை உரிமை கொள்ள
எழுந்தசெயல் மனம்நினைத்து நிமிர்வு கொள்ளும்!

இயற்கையது தருகின்ற உப்பைக் கூட
எடுப்பதற்கும் வகையற்று நாட்டு மக்கள்
துயருற்ற நிலைகண்டு மனம்வ ருந்தித்
துடித்திட்ட மோகன்தாஸ் கரம்சந்த் காந்தி
அயர்வற்றுச் சட்டமறுப் பியக்கம் கண்ட
ஆற்றலினை நன்குணர்ந்த துரைத் தனத்தார்
முயற்சியுடன் இருவருக்கும் நலம்ப யக்கும்
முடிவெடுத்தோர் உடன்படிக்கை செய்து கொண்டார்!

என்றாலும் ருசிகண்ட பூனை போல

இங்கிருந்த அரசாங்கம் காந்தி – இர்வின்

ஒன்றாகச் செய்துகொண்ட ஒப்பந் தத்தை

உதவாமல் செய்துவிட்ட கார ணத்தால்

குன்றாத உறுதியுடன் ஆர்த்தெ ழுந்து

கோணல்மனப் பேரரசை எதிர்த்து நின்று

நன்றான அறப்போரைத் தொடுக்க என்று

நாட்டாரைக் காந்திமகான் கேட்டுக் கொண்டார்!

அண்ணலவர் வாயசைவில் நாடு செல்லும்

அதிசயத்தைக் கண்டுகொண்ட அரசாங் கத்தார்

திண்ணமுடன் அறப்போரை அடக்கும் நோக்கில்

சிறைக்குள்ளே காந்தியினை அடைத்து வைத்தார்!

பண்ணியஇக் கொடுமையினைப் பார்த்த மக்கள்

பதறியுளம் குமுறிமிக எழுச்சி கொண்டு

கண்ணனைய காந்திவழி மாறி டாமல்

கட்டறுக்கப் படைதிரண்டு போர்தொ டுத்தார்!

இந்தியத்து மண்ணுக்குப் பெருமை சேர்க்கும்

எழிலுடைய தமிழ்நாட்டில் திருப்பூர் என்னும்

சுந்தரநற் பதியினிலே அன்று வாழ்ந்த

துடிப்புடைய சில இளைஞர் ஒன்று கூடிச்

சிந்தைசெய்து சட்டத்தை மறுப்ப தற்குத்

தெருவினிலே அணிவகுத்து நடந்து சென்றார்!

அந்தவொரு படைதனிலே கலந்து கொள்ளும்

அரியதொரு பெருவாய்ப்பைக் குமரன் பெற்றார்!

நெஞ்சகமும் நல்லுடலும் நிமிர்ந்த வண்ணம்

நிறையுமெழில் மூவண்ணக் கொடியைத் தாங்கி

வஞ்சமிடும் அரசதனை வீழ்த்து கின்ற

வலிமையுடன் திருக்குமரன் முன்னே செல்ல

அஞ்சுதலே அறியாத வீரர் கூட்டம்

அவர் பின்னே முழக்கமுடன் தொடர்ந்து சென்றார்!

நஞ்சனைய அரசியலார் கோபம் கொண்டு

நசுக்கிவிடக் காவலரை ஏவி விட்டார்!

காசுக்குக் கைநீட்டி அன்னி யர்க்குக்

கால்பிடித்த காவலர்கள் கருணை யின்றித்

தேசத்தைக் காப்பதற்குப் படைதி ரண்ட

தீரர்களைத் தடிகொண்டு தாக்கி நின்றார்!

பாசத்தைத் தாய்நாட்டின் மேலே வைத்த

பண்புடைய திருக்குமரன் தாக்கப் பட்டும்

மாசற்ற கொடியதனைச் சுமந்த வாறே

மண்மேலே உடல் சாய்த்து மரணமுற்றார்!

தான்பிறந்த நாட்டுக்கும் திருப்பூ ருக்கும்

தங்கமென வளர்த்தெடுத்த பெற்றோ ருக்கும்

வான்புகழை உயிர்கொடுத்து வாங்கி வந்த

வண்டமிழன் குமரனைப் போல் வாழ்ந்தா ருண்டோ?

ஊன்உயிரை நாட்டுக்கே உரிமை யாக்க

ஒப்பிநின்ற திருக்குமரன் நாமம் மிக்க

மேன்மையுடன் மேதினியில் எந்த நாளும்

மிளிர்ந்துயரும் என்பதிலோர் ஐயம் உண்டா?

அருமைமிகு தாய்நாட்டின் மானம் காக்க
ஆருயிரை அவிசாக்கி வேள்வி செய்த
ஒருகுமரன் போய்விட்டான் என்ற போதும்
ஒருகோடிக் குமரர்களிங் குருவா னார்கள்!
பெருமையுடன் விடுதலையை வாங்கித் தந்து
பெருமதிப்பை இந்தியர்க்கு வரச்செய் தார்கள்!
கருதுகிற போதினிலே எவர்க்கும் வீரக்
கனல் வளர்க்கும் திருக்குமரன் வாழ்க! வாழ்க!



# சிற்பி நேரு சிறந்து வாழ்க

அடிமையுற்ற பாரதத்தை மீட்டுத் தந்த
அறிஞர்களில் தனியிடத்தைப் பெற்ற நேரு
மிடிமையெனும் பெரும்பேயை விரட்டு தற்கும்
மேன்மைகளைக் கொண்டுவந்து நிரப்பு தற்கும்
கொடுமைகளை வேரறவே நீக்கு தற்கும்
கொள்கையிலே உயர்வதனை ஆக்கு தற்கும்
திடமனத்தோ டெந்நாளும் உழைப்பை நல்கித்
தேயமிதை வாழ்வித்தார்! திகழ்ந்து நின்றார்!

உழைப்பொன்றே அவருக்குத் தெய்வ மாகும்!
ஓடிவரும் நதிநீரைத் தேக்கி வைத்துத்
தழைக்கவழி உருவாக்கும் அணையே அந்தத்
தங்கமகன் தொழுதிருக்கும் கோயி லாகும்!
பிழைக்கவழி தெரியாத ஏழை தன்னைப்
பெரிதுயர்த்தும் நல்லுரையே வேத மாகும்!
மழைக்குதவும் குடையாக மாறி நின்று
மண்வாழச் செய்வதுவே கடமை யாகும்!

பாரதத்து வீதியெலாம் கல்விச் சாலை!
பாரதரின் நெஞ்சமெலாம் அன்புச் சோலை!
ஊரடுத்த பகுதியெலாம் உழைப்பின் ஆலை!
உள்ளவர்கள் வதனமெலாம் உதயக் காலை!
ஏரெடுத்த கரங்களெலாம் இனிக்கும் வேலை!
எழுத்தெடுத்த சிந்தையெலாம் எழிலின் மாலை!
சீரெடுத்த நேருவெனும் சிற்பி, நாட்டை
செதுக்கிவைத்த முறையிதுவாம்! சிறந்து வாழ்க!

* * * *

# அம்பேத்கர்

அன்னை நாடு பாரத்தின்
அரசியல் சாசனம் உருவாக
முன்னின் றுதவிய சிறந்தவொரு
மூதறி வாளர் அம்பேத்கர்!

தாழ்த்தப் பட்ட மக்களுக்குத்
தலையை நிமிர்த்தி நடைபோடும்
வாழ்க்கை அமையும் படியாக
வழியை வகுத்தவர் அம்பேத்கர்

ஈசன் படைத்த மானுடருள்
எவரும் சமமே எனச் சொல்லி
நேசம் வளர்த்து நம்முடைய
நெஞ்சில் நிற்பவர் அம்பேத்கர்!

அன்பு நிறைந்த பேரறிஞர்
ஆற்றல் மிகுந்த செயல்வீரர்
என்றே அவரின் புகழ்பாடி
இருகை கூப்பி வணங்குவமே!



# காந்தி அடிப்பொடியாய்க் காலமெலாம் வாழ்ந்தவரே! (வினோபா பாவே)

சத்தியத்தின் வார்ப்படமாய்த்
 தாரணியில் வாழ்ந்திருந்த
உத்தமராம் காந்திமகான்
 உள்ளம் நிறைந்தவரே!

ஏன்பிறந்தோம் மண்மேலே
 எனஉணர்ந்து வாழ்நாளைத்
தான்பிறந்த பொன்னாடு
 தழைப்பதற்குத் தந்தவரே!

வான்மேக மழைக்கருணை
 மனம்பொழிந்த காரணத்தால்
ஆன்மீகப் பேரொளியை
 அள்ளிக் கொடுத்தவரே!

புல்லாங் குழற்கண்ணன்
 புகன்றஅருங் கீதை வழி
எல்லாரும் செல்வதற்(கு)
 ஏற்றதுணை ஆனவரே!

உறுதியெனும் நெஞ்சுக்குள்
 ஊறிவரும் அன்புநதி
இறுதிவரை வற்றாமல்
 இனிமை விளைத்தவரே!

மனோ பலத்துக்கோர்
　　மறுபெயரே மேதினியில்
வினோபா எனும் வண்ணம்
　　விளங்கித் திகழ்ந்தவரே!

கலகத்து மானுடராய்க்
　　கருத்தழிந்து நின்றவர்பால்
உலகத்து வாழ்க்கையதன்
　　உண்மைநிலை சொன்னவரே!

கொள்ளைத் தொழில்புரிந்த
　　கொடியவரின் நெஞ்சுகளைக்
கொள்ளையிட்டு நல்லன்பால்
　　கோவில்களாய்ச் செய்தவரே!

பள்ளியிலே நீர்கணிதப்
　　பாடம் படித்திருந்தும்
உள்ளம் கணித்ததுவோ
　　ஒன்றும் பரம்பொருள்தான்!

பரம்பொருளை உள்ளுக்குள்
　　பார்த்துணர்ந்த ஞானியரை
விரும்பிநிதம் உள்ளத்தில்
　　வீற்றிருக்கச் செய்தீர்கள்!

பெரியோர் வழிநடந்து
　　பேரமைதி காண்பதுவே
அரியதவம் என்றெண்ணி
　　ஆனந்தம் கொண்டீர்கள்!

எல்லோ ரையும்போல
　　இங்கே பிறப்பெடுத்த
நல்லஒரு ஜீவாத்மா
　　நானிலங்கள் போற்றிசெயும்

மகாத்மா எனத்திகழ்ந்து
　　மானுடத்தை உய்விக்கும்
சகாப்தம் புதிதாகச்
　　சமைத்த பெருமையினால்,

இந்தியத்து மக்கள்படும்
　　இன்னல் களைந்தெறியச்
செந்தா மரைப்பாதம்
　　சிவக்க நடந்தமையால்,

கள்ள விளக்கேற்றிக்
　　கருத்தழிந்து போகாமல்
உள்ள விளக்கேற்றி
　　உய்வித்து நின்றமையால்,

இதயமெனும் கோபுரத்தில்
　　ஏற்றிவைத்துக் காந்தியினை
நிதம் வணங்கி நின்றீர்கள்!
　　நிம்மதியைக் கண்டீர்கள்!

தீதறியாக் காந்திமகான்
　　சிந்தை மிகஉவந்து
தூதரென உமைக்கொள்ளத்
　　தோதாக வாழ்ந்தீர்கள்!

ஒவ்வொருவ ராய்ப்புரிந்த
ஒத்துழையாப் போரில்உமைச்
செவ்வியநற் றலைவரெனத்
தேர்ந்தெடுத்தார் காந்தியவர்!

வெள்ளைத் துரைத்தனத்தை
வேரறுத்து, பாரதத்தில்
கொள்ளையென இன்பத்தைக்
குவிக்க முயன்றீர்கள்!

அடிமை இருள்நீங்கி
அன்னைத் திருநாடு
விடியலினைக் காண்பதற்கு
வேண்டுவன செய்தீர்கள்!

சிறைக்குள் தவமிருந்து
செம்மைநலம் கிட்டாமல்
மறைக்கும் திரைவிலக்கும்
மாமனிதர் ஆனீர்கள்!

மத்தமனம் கொண்டோரால்
மாநிலத்து நல்வாழ்க்கை
அத்தமனம் ஆகாமல்
அறிவொளியாய் நின்றீர்கள்!

அவனால்தான் பூவுலகில்
அசைவனைத்தும் என்பதனைப்
பவுனார் குடிலிருந்து
பறைசாற்றி வாழ்ந்தீர்கள்!

ஆவினத்தைக் காப்பாற்றும்
ஆன்மிகப் பணிபுரிய
மேவிநிதம் நும்வாழ்வில்
மேன்மையினை உற்றீர்கள்!

நிலந்திருத்திப் பாடுபட்டு
நெல்விளைக்கும் வேளாளர்
குலந்தழைக்க ஒட்டாமல்
குறுக்கிருந்த தடையகல

பூதான நல்லியக்கம்
பூதலத்தில் தோற்றுவித்த
ஆதார புருஷரென
அரும்பெருமை பெற்றீர்கள்!

சருவோ தயநெறிக்கே
தமைமுழுதும் ஆட்படுத்தி
உருவாகும் சமுதாயம்
ஓங்கவழி செய்தீர்கள்!

ஆன்மீகம், உண்மைநிலை,
அருங்கடவுள் என்கின்ற
மூன்றுநேர் கோடுகளின்
முக்கோணத் துள்நின்று,

பாசத்தின் வேர்கெல்லி,
பந்தத்தின் தண்டொடித்து,
நேசத்தை மட்டுமிங்கே
நிறைத்து மகிழ்ந்தீர்கள்!

பூதங்கள் ஐந்தாலே
ஆனவொரு பொன்னுடலை
ஆதங்கம் ஏதுமின்றி
அகற்ற நினைத்தீர்கள்!

ஆத்மாவோ டொத்துழைக்க
அறியாத் திருஉடலைக்
காத்திருக்க எண்ணாமல்
கழற்றி எறிந்தீர்கள்!

மனிதஇனம் மண்மீது
மங்கி மறையாமல்
புனிதநிலை எய்தஒரு
புதுவழியைக் கண்டறிந்த

வல்லவராம் மகாத்மா
வார்த்தை தனைச்சுமந்து
நல்லஒரு மாணவராய்
நாளும் உழைத்தீர்கள்!

உம்முடைய பூதாத்மா
ஓடி மறைந்தாலும்
எம்மருகே ஜீவாத்மா
எப்போதும் சுற்றிவரும்!

எவர்மூல மேனுமிங்கே
இயங்கியது நன்மையினைப்
புவனத்து மானுடர்க்குப்
பூமழையாய்ப் பெய்துவிடும்!

பாருலகோர் நல்வாழ்வு
படிப்படியாய் எய்துமட்டும்
யாருளத்தி லேனுமுங்கள்
அந்தராத்மா நின்றுதவும்!

மாந்தருக்குள் ஒருதெய்வ
மணியாய் அருள்விரித்த
காந்தி அடிப்பொடியாய்க்
காலமெலாம் வாழ்ந்தவரே!

புனிதத்தை ஆத்மாவில்
பூரணமாய்க் கலந்துவைத்து
மனிதமகாத் மாவாக
மலர முயன்றவரே!

எமதருகே இன்றில்லை;
என்றாலும் யாமெல்லாம்
உமதரிய வாழ்க்கையினை
உளத்தில் பதித்திடுவோம்!

எங்கே இருந்தாலும்
எங்கள் நலங்கருதிப்
பங்கமிலா நெறியதனில்
பரிவோ டியக்குங்கள்!

நீங்கள் நடந்துவந்த
நேரான பாதையிலே
நாங்கள் நடந்துவர
நாளும் உதவுங்கள்!

பாரதத்தின் புத்திரர்கள்
பாரில் உயர்ந்தவராய்ப்
பேரெடுத்து வாழ்வதற்குப்
பேரருளைச் செய்யுங்கள்!



# பாரதப் பிரதமர் மொரார்ஜி தேசாய்

மூத்தவர், அறிவினில் முதிர்ந்தவர், பிறைகளோர்
ஆயிரம் பார்த்தவர்! அடக்கம் காத்தவர்!
புன்னகைக் கண்ணன் பொழிந்த கீதையில்
நெஞ்சம் நனைந்திட நிதமும் குளிப்பவர்!
அருமைசேர் கீதைக்(கு) ஆய்வுரை எழுதிப்
பெருமையை எய்திய பேரறி வாளர்!
செல்லும் இடமெலாம் தெய்வத் திருவருள்
வெல்லும் என்பதை விரித்தே உரைப்பவர்!
நிரம்பப் படித்தவர்! நெஞ்சினை ஒடுக்கி
வரம்பினுள் நிறுத்தி வாழும் வைணவர்!
வாழ்வினில் நிகழ்வதும் வருவதும் போவதும்
ஊழ்வினைப் படியென உணர்ந்து நடப்பவர்!
பொக்கைவாய்ச் சிரிப்பால் புவியினை முழுதும்
சொக்கவே வைத்த தூயனை – காந்தியை
இதயக் கோயிலில் என்றும் இருத்தி
எதையும் அவர்வழி இனிதே செய்தவர்!
மொரார்ஜி என்னும் முதல்வரை மிகவும்
கறார்ஜி யாகவே காணுகின்றோம் நாம்!
ஆவினை மேய்த்த ஆண்டவன் உயிர்களின்
தீவினை தீர்த்த திறல்மிகு கண்ணனின்
பெயரினைனத் தாங்கிய பெட்புறு தந்தையின்
பெயர்சொலப் பிறந்த உயர்வுறு தனயன்!
பூரநட் சத்திரப் பு ண்ணிய வேளையில்
மார்கழிப் பாவை வழங்கிய கோதை,
பிறந்தனள் என்று பேசுவார் நூலோர்,
சிறந்திடும் இவர்க்கும் சென்ம நட்சத்திரம்

பூரமே என்பதால் பூரிப்(பு) எய்தி
வாஞ்சையின் அமுதை வழங்கிய தந்தை
"ராஞ்சோட்ஜி அவர் நங்கை அக் கோதையின்
நெஞ்சம் கவர்ந்த நேயனின் காந்த
நாமம் அதனை நாளும் உரைக்கும்
மோகம் மிகுந்து முராரி என்ற
பேரினை இட்டுப் பெரிதும் மகிழ்ந்தனர்.
முராரி எனினும் மொரார்ஜி எனினும்
ஒருபொருள் எனவே உரைத்திடு வார்கள்.
ஆகையால், தானோ அந்தமு ராரிபோல்
வாகையைச் சூடி வாழ்கின் றாரிவர்!"



# இந்திரா காந்தி

கோடியென இன்பதுன்பம் குவிந்திருக்கும் இவ்வுலகை
நாடிப் பிறக்கின்ற நல்லுயிர்கள் யாவையுமே
இன்னல் ஒருபாதி, இன்பமொரு பாதியென
மண்ணுலகில் சிலகாலம் வாழ்ந்து முடிந்தபின்னர்
என்றோ ஒருநாளில் இறைவன் திருத்தாளைச்
சென்றே அடைவதுதான் சீரார் இயற்கைவிதி!
எண்ணத் தொலையாத எத்தனையோ உயிர்களிந்த
மண்ணில் கணந்தோறும் வந்து பிறந்தாலும்
இருந்த சுவடெதுவும் எவர்க்கும் தெரியாமல்
பிரிந்து மறைபவையே பெரும்பகுதி ஆகுமன்றோ?
என்றாலும் சிலமட்டும் எவருடைய இதயத்தும்
நின்றாளும் பெருமையினை நிரந்தரமாய்ப் பெறுவதுண்டு.
ஆதார மாய்விளங்கி ஆன வழிகாட்டும்!
சேதாரம் இல்லாத சிந்தனைக்கு வித்தூன்றும்!
அப்படிப் பட்ட அருமை மிகப்பொருந்த
எப்பொழுதும் எங்கள் இதயத்தில் வீற்றிருக்கும்
இந்திரா காந்திஉனை எண்ணுகையில் ஆறாக
முந்திப் பெருமகிழ்வு முன்னேறிப் பாய்கிறது!
உருவத்தால் நீஇல்லை; உண்மைதான்; ஆனாலும்
அருவத்தால் எங்கள் அகமுழுதும் நிறைந்துள்ளாய்!
எதிரினிலே நீஇல்லை: என்றாலும் நின்சிந்தைக்
கதிரொளியில் நாங்களெல்லாம்
கண்ணொளியைப் பெறுகின்றோம்!
அருகினிலே நீ இல்லை ஆனாலும் உன்னுடைய
கருணையினால் யாவருமே காலெடுத்து நடக்கின்றோம்!
பக்கத்தில் நீஇல்லை: ஆனாலும் நீபடைத்த

சொர்க்கத்தில் எல்லோரும் சுகமாக இருக்கின்றோம்!
காவலுக்கு நீஉண்டு; கடவுள் துணை உண்டென்று
நீவளர்த்த மரநிழலில் நிம்மதியாய் வாழ்கின்றோம்!
பாரதத்தாய் பெற்றெடுத்த பாசமிகும் செல்வியருள்
சீரதிகம் பெற்றிங்கு திகழ்ந்தவர் யார் எனக்கேட்டால்
மலர்ந்தொளிர்ந்த ரோஜாவை மார்பகத்தில் அணிந்தபடி
நலம்திகழ நிதமுழைத்த நாயகராம் ஜவகர்லால்
நேருவுக்கு மகளாக நீணிலத்தில் பிறப்பெடுத்தே
ஊருலகம் போற்றநின்ற உன்னைத்தான் நானுரைப்பேன்!
இந்திரா என்னுமுயர் எழில்நாமம் நீபெற்றாய்.
இந்தியா தனைப்புகழில் ஏற்றிவைக்க நீகற்றாய்!
தான்பிறந்த பொன்னாட்டைச் சார்ந்த பகுதியெலாம்
தேன்சொரியும் பூங்காவாய்ச் செய்வதற்கு நீநினைத்தாய்!
இமயப் புகழ்போலே இந்தியத்தின் நற்புகழும்
அமையப் பெறும்வண்ணம் அயராது நீஉழைத்தாய்!
எல்லைக் கடங்காத எத்தனையோ சாதனைகள்
தொல்லைகளுக் கிடையினிலும் துவளாது நீசெய்தாய்!
உள்ளத்தில் பாரதத்தின் உயர்வே குறிக்கோளாய்த்
தெள்ளத் தெளிவுற்ற சிந்தையுடன் நீ நடந்தாய்,
இடறிவிட்ட கற்களையும் எதிர்ப்பட்ட முட்களையும்
சடுதியிலே அகற்றிவிட்டுத் தளராது முன்சென்றாய்!
உறுதிக் குதாரணமாய் உன்மனத்தைச் சொன்னாலும்
கருணைக்கும் அதையன்றிக் காட்டுதற்கு வேறில்லை!
வல்லிரும்பு நெஞ்சுனக்கு வாய்த்ததெனச் சொல்வார்கள்;
நல்லிதயம் பூவென்று நான்பகர்வேன் நிச்சயமாய்!
இதழொன்றைக் கிள்ளுகையில் ஏற்படுமோர் அதிர்வதுவும்
பொதுவாகப் பாதிக்கும் பூதலத்தை எனச் சொல்வாய்!
இப்படியோர் நுண்மையினை ஏற்றிருந்த நின்மனத்தை
எப்படிநான் இரும்பெனவே ஏற்றமைதி கொள்ளுவது?

பாரதத்து மக்களிடம் பாசத்தைப் பொழிந்த உனை,
சீர்நிறைத்துக் கொண்டுவரத் தினமும் உழைத்தஉனை,
காராகி வந்துவளம் கணக்கின்றித் தந்தஉனை,
வேராகி நின்றுநலம் விளைவித்த அன்னைஉனை,
பொல்லா வறுமையினைப் பொசுக்க முயன்றஉனை,
எல்லார்க்கும் எல்லாமென் றிருக்க நினைத்தஉனை,
அறியாமை எனுமிருளை அகற்ற விழைந்தஉனை,
உறவாடி யாவர்க்கும் உதவ முனைந்தஉனை,
படைகொண்டு வந்தாரைப் பந்தாடி நின்றஉனை,
தடைசெய்து நின்றாரைத் தடுமாறச் செய்தஉனை
சமுதாய வீதியிலே தலைநிமிர்ந்து பெண்ணினத்தார்
அமைதியுடன் நடைபோட அனுதினமும் உழைத்தஉனை,
பண்புக்கும் பரிவுக்கும் பாத்திரமாய் நின்றஉனை,
புண்பட்ட நெஞ்சுக்குப் புதுமருந்தாய் வந்தஉனை
எப்புறத்தில் இருந்தேனும் எச்சூழ்ச்சி கண்டாலும்
குப்புறவே கிடத்திவெற்றி கொண்டஅரும் தேவியுனை
இன்றைக்கு மட்டுமிலை;– எம்முடைய நெஞ்சத்தில்
என்றைக்கும் கோயில்கட்டி
இருக்கவைத்து வணங்கிடுவோம்!
உன்னரிய நினைவென்னும் ஒளிவிளக்கால் இவ்வுலகில்
எந்நாளும் எங்கள் எதிர்காலம் சிறப்படையும்!
நீங்காத உன்றன் நினைவாலே எம்வாழ்க்கை
பூங்காவாய்த் தென்றல்வரப் புத்துயிரைப் பெற்றுயரும்!
இன்றைய இளைஞர்களுக் கியம்பியநின் வார்த்தைகள்தாம்
நன்றான வழிகாட்டி நானிலத்தை வாழவைக்கும்!
உன்றன் திருநாமம் உலகிருக்கும் வரையிருக்கும்!
பொன்றாத நற்புகழும் புவியில் நிலைத்திருக்கும்.



# கர்மயோகி இராஜாஜி

எந்தஒரு பயனையுமே எதிர்பார்க் காமல்
எவரொருவர் உலகுக்குப் பணிசெய் வாரோ,
அந்தஒரு மனிதரைநாம் புகழ்ந்து போற்றி
அகமகிழ நற்கர்ம யோகி என்றே
சொந்தமுடன் அழைத்திடுவோம்; நம்மைச் சூழ்ந்த
துயர்துடைக்க வந்தவராய் வரவு சொல்வோம்;
சிந்தையிலே அவருக்கோர் இடத்தைத் தந்து
தெய்வத்தின் தூதரென வணங்கி வாழ்வோம்!

அன்றைக்கு பாரதத்தாய் பெற்றெ டுத்த
அருள்மைந்தர் இராஜாஜி உலகம் உய்ய,
என்றைக்கும் பயனேதும் கருதி டாமல்
இதயபரி சுத்தமுடன் தொண்டு செய்து,
நின்றிட்ட காரணத்தால் தானே இந்த
நீளுலகம் நற்கர்ம யோகி என்றே
இன்றைக்கும் புகழ்ந்தேத்தி உள்ளம் ஆர,
இருகரமும் குவித்துமிக வணங்கக் கண்டோம்!

பின்நாளில் நிகழ்பவற்றை வாய்த்தி ருந்த
பேரறிவின் கூர்மையினால் முன்பே கூறி
எந்நாளும் நன்மைகளைத் தேடித் தந்த
இராஜாஜி போல ஒரு மனிதர் உண்டா?
தன்னாவி நல்லுடலம் பொருளும் கூடத்
தாய்நாட்டின் நலம்காக்கத் தந்த அந்த
பொன்னான மனத்தினரின் நாமம் இந்தப்
பூவுலகம் உள்ளவரை பொலியும் அன்றோ?



# யோகத்தின் கண்பார்வை வாழ்க!

பசியெடுத்து வாழுகின்ற மக்கள் நெஞ்சில்
பாய்ந்தெழுந்து நல்லுணர்வு பரவச் செய்தாய்!
இசைமறந்த குழல்கையில் எடுத்தாய் பொங்கும்
இசைவழிந்து தெருவெலாம் பெருக வைத்தாய்!
விசையிழந்து கிடந்திட்ட மக்கட் கெல்லாம்
விசைகொடுத்து வெள்ளையரை நடுங்க வைத்தாய்!
திசையிழந்த கப்பலை நீ திருப்பி விட்டாய்!
திருப்பியதைக் கரைசேர்த்தாய் வாழி! வாழி!

கள்ளத்தைப் பொறுத்தவரை பிள்ளை யானாய்!
கவலையினைப் பொறுத்தவரை ஞானி யானாய்!
உள்ளத்தைப் பொறுத்தவரை தங்க மானாய்!
ஒருவர்க்கும் அஞ்சாத சிங்க மானாய்!
பள்ளத்தை மேடுறுத்தும் பண்பு கொண்டாய்!
பாரதம் செய் தவப்பயனாய் வந்த நேரு
உள்ளத்தைக் கொள்ளையிடும் ஒருவன் ஆனாய்!
யோகத்தின் கண்பார்வை; வாழ்க! வாழ்க!

சரியில்லை கட்சிநிலை என்று கண்டாய்,
தக்கபடி பலப்படுத்தத் தவறோம் என்றாய்!
பெரிதில்லை பெரிதில்லை பதவி என்ற
பேச்சைநீ செயலினிலே காட்டி விட்டாய்!
"அரிதரிது பதவியினைக் துறத்தல்" என்பார்!
அடைவதுவும் துறப்பதுவும் எளிது னக்கே!
கருதரிய செய்துவரும் காம ராஜ!
காலத்தை வென்றென்றும் வாழ்க நீயே!

* * * *

# சுந்தரச் சொல் அண்ணாதுரை

பண்டிதரின் கைகளுக்குள்
பக்குவமாய் வளர்ந்திருந்த
தண்டமிழை ஊர்வலமாய்த்
தாங்கிவந்த பேரறிஞன்!
எண்டிசையும் அவள்பெருமை
எடுத்தியம்பி இனிதுயரத்
தொண்டுசெய்து நின்றிருந்த
தூயமனத் தோன்றலவன்!
கற்றுக் குழைந்துருகும்
கருத்தருளத் தமிழன்னை
பெற்றுக் கொடுத்தமகன்!
பெருமைக் குரியனவன்!
சுந்தரச்சொல் அண்ணா
துரையின் அருமையினை
எந்தத் தமிழ்மனமும்
என்றும் மறக்காது!
வந்துநின்று மேடையிலே
வாய்மலர்ந்தால் போதாதா?
செந்தமிழின் தேன்பெருகித்
தெருவெல்லாம் ஓடாதா?
தாளிட்ட மனக்கதவம்
தட்டித் திறக்காதா?
பாழுற்ற துன்பத்தைப்
பட்டென்றொடிக்காதா?
வானாக விரிந்த அவர்
மனத்தின் பெரும்பரப்பில்

தானாக விரைந்துவரும்
 தமிழுக் கிணையேது?
தலைகீழாய் அகராதி
 தனைப்புரட்டி வார்த்தைக்கு
வலைவீசித் திரிகின்ற
 வழக்கம் அவரறியார்!
எதுகைகளும் மோனைகளும்
 எதிரே தவங்கிடக்கும்!
மதுவைப் பழிக்குமொரு
 வசனம் நடம்புரியும்!
மூக்கடைத்த சுவைக்குரலில்
 முழங்குமுரை கேட்டுவிடில்
வாக்கடைத்துப் பகைவர்களும்
 வணங்கி விடைபெறுவார்!
சும்மாவா அவர்பேச்சு!
 தூயதமிழ் ஒளிவீச்சு!
அம்மா! அதன்பெருமை
 அளவில் அடங்காது!
விதிகலையாத் தீங்கவிதை!
 விளையாடும் பூந்தென்றல்!
சுதிகலையாச் சங்கீதம்!
 சுகவாழ்வின் ரீங்காரம்!
அலங்காரம் உடையநடை!
 அவர்நடையோர் புதியநடை!
நலங்காண நடந்தநடை!
 நமக்காகப் பிறந்த நடை
சஞ்சலத்தை வெல்லுகின்ற
 சத்தியத்தின் ஜீவநடை!
வெஞ்சிறையைக் கண்டஞ்சி
 விலகாத வீரநடை!

தூற்றுகின்ற மொழிகேட்டுத்
துவண்டுவிழா மனிதநடை!
போற்றுகின்ற மொழிகேட்டுக்
கர்வமுறாப் புனித நடை!
சீராகச் செல்லும் நடை!
செந்தமிழுக் கெதிர்ப்பிருந்தால்
கூராகிக் கொல்லும் நடை!
குதித்தேறி வெல்லும் நடை!
மூடத் தனத்தில்
முளைத்தெழுந்த வற்றையெலாம்
சாடத் துணிந்தநடை!
சான்றோர் புகழ்ந்த நடை!
கடல்நிகர்த்துப் பொங்கியெழும்
காளையரின் திருக்கூட்டம்
தொடரவைத்த நடை அண்ணா
துரையுடைய இனியநடை!
அவர்நடையின் சாயலில் இன்(று)
ஆயிரம்பேர் வந்தாலும்
சுவைவளரும் அவர் உரையின்
சுகம்தனிதான்! அசல் அசல்தான்!
அசல் எங்கே? அமுதமெனும்
அசல் எங்கே? அதில் வழிந்த
இசை எங்கே? எழில் எங்கே?
இன்பநறும் தேன் எங்கே?
பண்ணான பைந்தமிழைப்
பாராட்டி வாழ்த்திசைத்த
அண்ணா துரைபோலே
யார்வருவார் இனிமேலே?
அரசியலில் நேர்மையினை
அடிமுதலாய்க் கொண்டிருந்த

ஒரு தலைவர் அண்ணாபோல்

உலகத்தில் யாருள்ளார்?

துக்கமென்ன துக்கம்

சுதந்திரநன் னாளிலெனப்

பக்குவமாய்க் கேட்டவெல்லப்

பாகுமொழிக் காரரவர்!

செங்கதிரும் சந்திரனும்

திகழ்கின்ற நாள் மட்டும்

எங்கள் அண்ணா துரையிந்த

எழில்நிலத்தில் வாழ்ந்திருப்பார்!

மண்ணுலகில் வாழ்கின்ற

மக்கள் மனங்களிலே

புண்ணியத்தின் வடிவாகப்

பொலிவார்! அவர் வாழ்க!



# எம்.ஜி.ஆர்.

தன்னுடல் காலத் தாக்கால்
　　தளர்ந்திட லறியா வீரன்
உன்னுடன் நடிக்கும் பேற்றை
　　ஒருதரம் பெற்றால் போதும்
மின்னுடல் தடித்துத் தோன்ற
　　மெலிந்திடும் இடையார் வாழ்வில்
மின்னிடல் உறுதி யாமே!
　　விளக்கினார் தெரிந்தார் தாமே!

வாளையே கண்ணில் ஏந்தி
　　வம்பினுக் கிழுப்பார் துள்ளும்
காளையே என்று காதற்
　　களத்தினுக் கழைப்பார் தென்னம்
பாளையே பிளந்து சிந்தும்
　　பக்குவச் சிரிப்பார் நல்ல
நாளையே நோக்கிக் கூட
　　நடித்திடத் துடிப்பா ராமே!

கனிதரு மினிய சாறு
　　கலந்ததுன் பேச்சில்! வெட்டும்
மினல்தரு கடிய வேகம்
　　மிளிர்ந்தது வாளின் வீச்சில்!
பனிதரு மிமயத் திண்மை
　　படிந்தது தோளில்! – மாரி
தனையளித் துதவும் வண்மை
　　தழைந்ததுன் கையில் தானே!

துடிப்பது கண்டு துன்பம்
 துடைத்திட நாடி, அள்ளிக்
கொடுப்பதுன் தொழிலா, நெஞ்சை
 கொள்ளையிட் டள்ளத் துள்ளி
நடிப்பதுன் தொழிலா, நாட்டு
 நலமது கருதிக் கட்சிக்
குழைப்பதுன் தொழிலா இங்கே
 உனக்கெது தொழிலென் றெண்ணித்

திகைப்பது தொழிலாக் கொண்டோம்.
 தீர்ந்தது கணக்கென் றெண்ணி
முகிழ்ப்பதெப் பகையா னாலும்
 முனைமுறிந் தழியக் கண்டோம்!
குகைப் புலி வஞ்சம் தாவிக்
 குதித்தெதிர் வந்தபோதும்
நகைப்பது சிந்திச் சிந்தி
 நசுக்கிய புரட்சி கூத்தே!

துளைத்திடு துயரந் தன்னைத்
 துரத்தியே நெஞ்சில் இன்பம்
விளைத்திடக் கருதி வெள்ளித்
 திரையினில் விருந்து வைப்பாய்!
களித்திட விருந்து தந்த
 கணக்கது நூறா, ஏற்றும்
**ஒளிவிளக்** குடனே ஓஹோ
 இன்னொரு நூறு தேவை!

தேனதும் பாலும் கூடத்

தெவிட்டிடக் கூடும் நெஞ்ச

வானதில் மின்னும் மக்கள்

திலகத்தின் நடிப்பு மட்டும்

ஏனின்னும் தெவிட்ட வில்லை

என்பது தெரியவில்லை

நானென்ன புகழ்ந்த போதும்

நலமுழு துரைத்த தாமோ?

குறையறி யாத நெஞ்சக்

குளுமையே! ஏறும் கர்வக்

கறையறி யாத நல்ல

கருணையே! பூட்டி வைக்கும்

துறையறி யாத வெள்ளைத்

தும்பையே பல்லாண் டாகத்

திரையுல காளும் மக்கள்

திலகமே நீடு வாழி!

தருவதற் கென்றும் உன்கை

தயங்குவ தில்லை யென்னும்

பெருமையை உணர்ந்த மக்கள்

மனத்தினில் பெருகும் அன்பின்

அருமையில் ஊறி ஊறி

ஆனந்த மாக வாழ

இருமயில் ஆடி ஒன்றில்

ஏறுவான் அருள் வானாக!



# பாரத தேச பக்தவத்ஸலம்

வென்றிடும் நீதி விளங்கி நிலைத்திட
மன்றினுள் நின்று வழக்குரை கலையில்
வல்லவ ராகி வாழப் புகுந்து
அல்லலில் எம்மவர் அடிமைப் பிடியில்
அமுந்திக் கிடப்பதோ? அன்னிய ராட்சி
விழுந்திட வேண்டும் விழுந்திட வேண்டுமென்(று)
எதிர்வழக் காடும் இயல்பது கொண்டு
புது வழக்காடப் புகுந்தனை! நாட்டில்
பொங்கி யெழுந்த புண்ணியப் போரில்
அங்கம் வகித்தனை அரும்பணி ஆற்றினை!
வீட்டு நலமதே விழைந்திட லின்றி
நாட்டு நலத்திலே நாட்டம் வைத்தனை!
மறந்தனை தன்னலம் கிடந்தனை சிறையில்
பறந்தது சுதந்திர பாரத மணிக்கொடி!
பாரத தேச பக்த வத்ஸலா!
பேரது மறையாப் பெரும் புகழ்த்தலைவ!
யாரும் மதித்திடும் அன்புடைப் பெரும! நின்
சீரதை யுணர்ந்தே சென்னை மாநிலம்
அன்று தொட்டுனை அமைச்சர் அவையினில்
கண்டு மகிழ்ந்து கனிந்து நின்றது!
எத்தனை துறைகள் இத்தரை மீதினில்
அத்தனை துறையையும் ஆண்டு பார்த்தனை!
ஆண்டனை வெற்றி அடைந்தனை தொடர்ந்து

ஈண்டு அமைச்சர் எண்மரில் முதல்வராய்க்
கண்டதில் மகிழ்ச்சி கண்டனம் வாழி!
வள்ளுவர் குறளில் வகுத்த இலக்கணம்
உள்ள அமைச்சரென் றுவந்து போற்றிப்
புகழ முருகன் புரிக திருவருள்!
மகிழ்ந்து நின்னாட்சியில் மக்களும் வாழ்க!



# ம.பொ.சி.

## சுமக்கப் பிறந்தாய் சும!

மாறி யமைய மனங்கொண்டாய் – வெள்ளையரைச்
சீறி யெழுந்தாய் சிறைப்பட்டாய் – ஆறி
அடங்காய் கிளர்ந்தாய் அடைந்திட்டாய் வெற்றித்
தடங்கள் உனது தடம்.

ஒடிக்கும் வறுமைக் கொடுங்காய் நீ ஒன்றை
முடிக்கும் வரையும் முடங்காய் நீ–வீரம்
குறையாக் குணமுன் குணம்பிறந்த நாட்டை
மறவா மனமுன் மனம்!

கனல்தெறிக்கப் பேசுவதில் கண்ணகி நீ; நல்ல
மனமினிக்கத் தீட்டுவதில் மாதவி நீ; ஊடுருவிப்
பார்க்கும் இருவிழியில் பாய்ந்து வரும் ஒளியில்
யார்க்கிங் கிணைசொல்வேன் யான்?

பற்றைத் துறந்துதமிழ்ப் பாட்டுப் பொழிந்தவனின்
ஒற்றைச் சிலம்பையெடுத் துன்போலக்–கற்பை,
கனலழகை, காவியத்துக் கண்ணகியை, பொங்கும்
மனவழகை யார்காட்டு வார்?

மூட்டையினைக் காப்பார் முணுமுணுப்பிற் கஞ்சாமல்
பூட்டை உடைத்துப் புலமையிலாப் பாமரர்க்கும்
ஏட்டை, எழில்நலத்தை எரிமலையாள் கைச்சிலம்பின்
பாட்டைக் கொடுத்தாய் பரிந்து!

துள்ளிவரும் செந்தமிழாம் தேனின் துளிபட்டு
வெள்ளிநிறம் காட்டிடுதோ மீசையெனக் கேட்கின்றான்
தெள்ளுதமிழ் பொங்கும் சிவஞானச் செல்வமுனைப்
பள்ளிசெலும் என்பையன் பார்த்து!

பார்த்தாய் எடுத்தாய் பழந்தமிழ் நூலாலே
கோத்தாய், ஓர்எல்லை குறித்தாய், குரல்எழுப்பிக்
காத்தாய் திருத்தணியை, கன்னிக் குமரியையும்
சேர்த்தாய் முகமலரச் செய்து!

வெற்றிக் குறுநகையும் வீரத்திரு விழியும்
முற்றிக் கனிந்த முழுவடிவே – பற்றி
இழுத்துச் சிறையிலுனை இட்டாலும் தாயை
வழுத்தத் தவறாதுன் வாய்!

கூனை நிமிர்த்திக் கொடுத்தாய் – சுதந்திரமாம்
வானைப் பிடிக்க வழிசெய்தாய் – தேனை
நிகர்த்ததமிழ்க் கேற்ற நிலைகேட்டாய் – மோதித்
தகர்த்தே எறிவாய் தடை!

கொட்டவந்த தேளின் கொடுக்கறுக்கத் தாவியநற்
கட்டபொம்ம வீரனையும் கப்பல்விட்ட் தீரனையும் கற்றறியக்
காட்டினையே, காலமெல்லாம் நீ வாழ்க
பெற்றறியாப் பேறெல்லாம் பெற்று!

உழைக்கப் பிறந்தாய் உணர்வெடுத்தாய் வெற்றி
முடிக்கப் பிறந்தாய் முரசெடுத்தாய் எல்லை
அமைக்கப் பிறந்தாய் அரும்புகழை என்றும்
சுமக்கப் பிறந்தாய் சும!

தொண்டு புரிந்தாய் சுகம்தந்தாய் தூயவருள்
கொண்டு மிதந்தாய் குளிர்வித்தாய் – உண்டு
மகிழ்ந்து தமிழை மலர்வித்தாய் – நெஞ்சம்
நெகிழ்ந்து புகழ்ந்தோம் நினை!

மங்கி யறியாத மாணிக்கச் செஞ்சுடரை
பொங்கி வரும் வீரப்புது முறுக்கை – சிங்கமெனும் சிங்கத்தை
நொந்து சிதையாது மின்னுகிற
தங்கத்தை வாழ்த்துகிறாள் தாய்!

வந்துதுயர் தந்த வயிற்றுவலி நோய்தீர்க்கக்
கந்தன்உனை அன்றுநான் கைதொழுதேன்–சொந்தமுடன்
இன்றிறைஞ்சிக் கேட்கின்றேன் இன்னுமோர் பல்லாண்டு
நன்றினிது வாழஅருள் நல்கு!

வாசத் தமிழ்வளர்க்கும் வள்ளல் இவராலே
தேசம் மிகவும் சிறப்படையும்! மாசகன்று
வாழும், சமூகம் வளர்ச்சிபெறும்! மாந்தரிடை
சூழும் கலையாச் சுகம்!

பாரதிக்கு மட்டுமல்ல; பைந்தமிழை ஓங்குவிக்கச்
சீரதிகம் கொண்ட செயலாற்றிப் – பேருலகில்
என்றும் புகழெய்தி எங்களரும் ம.பொ.சி.
நின்றொளிர வாழ்க நிலைத்து!



# அவினாசிலிங்கம்

மண்ணிதனில் வதிகின்ற மாந்தர் எல்லாம்
வாழ்க்கையெனும் பாதையிலே – தடுக்கி வீழா
வண்ணமருந் துணையாக நின்று காக்க
வல்லதுவாய் விளங்குகின்ற கல்வி என்ற
கண்ணதனைத் தருகின்ற கருத்தில் தொண்டு
காலமெலாம் செய்யும்அவி நாசிலிங்க
அண்ணலவர் பெருமைக்கோர் அளவே இல்லை!
அத்தனையும் விரித்துரைக்க மொழியே இல்லை!

கல்லூரி தன்னிலவர் படிக்கும் போது
கருத்தினிய நண்பரவர் சின்னு வோடு
செல்லூறிக் கிடக்குமொரு சமுதா யத்தின்
சிந்தையிலே ஒளியூட்ட வந்து தித்த
நல்லோராம் குருராம கிருட்டி னர் பால்
நாட்டமுள்ள இருசீடர் தம்மைக் காண
அல்லேனும் பகலெனும் தயக்க மின்றி
ஆசையுடன் செல்வாராம் – வணங்கு வாராம்!

இருவரிலே சிவானந்த ரென்பார் என்றும்
எளிமையுடன் அனைவரொடும் பழகு கின்ற
அரியதொரு குணம் படைத்தார்; அன்பு காட்டி
ஆதரிக்கும் பண்புடையார்; அறிவு மிக்கார்
வருபவரை ஏதோஓர் சக்தி யாலே
மறுபடியும் மறுபடியும் வரவ ழைத்தே
அருளதனை அள்ளிஅள்ளி வழங்கி நிற்பார்!
அன்பாலே உலகதனை ஆண்டு கொள்வார்!

சித்பவா னந்தரென இலங்கி நின்ற

சின்னுவுடன் அவிநாசி லிங்கர் ஆன்ம

தத்துவங்கள் முற்றிலுமே உணர்ந்த றிந்த

தவமுனிவர் சிவானந்த வள்ள லாரின்

சத்தியநன் னெறியுணர்த்தும் மொழிகள் கேட்டுத்

தக்கவிதம் தம் வாழ்வை அமைத்துக் கொண்டார்!

சித்தமதில் குருநினைவே என்றும் ஓங்கச்

சீரியநற் பணிகள்பல செய்ய லானார்!

நெருக்கமுடன் குருவோடு பழகு தற்கு

நேர்ந்துவிட்ட வாய்ப்பதனை எண்ணி எண்ணி

உருக்கமுடன் மகிழ்ந்திடுவார். நமது மண்ணை

உயர்த்தவந்த விவேகா னந்தர் தந்த

அருட்கவிதை சந்யாசி கீதத் துக்கோர்

அழகுடைய வடிவமெனத் திகழுகின்ற

திருப்பொலிவை – தம் குருவை நன்றி பொங்கச்

சிந்தையெனும் தவிசேற்றி வணங்கி வாழ்வார்!

பணக்காரன் ஏழையெனும் பாகு பாடு

பார்த்தறியாப் பண்புடைய குருவின் பாதை

இணக்கமுடன் செல்வதையே நாடி நின்ற

இயல்புடையார் அவினாசி லிங்க வள்ளல்!

தனக்கெனவே வாழாமல் பிறர்க்கே வாழும்

தகைமையினால் அவர்செய்த நலங்க ளுக்குக்

கணக்கெனவே ஒன்றில்லை! கால காலம்

காசினியில் அவர்பெயரே நிலைத்தி ருக்கும்!

வேதனைகள் வந்துவந்து வெருட்டி வாழ்வை
வீணாக்கும் ஒருநிலையைத் தவிர்த்து நாளும்
சாதனைகள் ஆயிரமாய்ப் பெருகி இன்பம்
தங்குமொரு பெருநிலையை அளிக்க வல்ல
நாதியெனும் கல்வியினை இனிய கொங்கு
நாட்டிலுள நல்லகுடிப் பெண்கள் எல்லாம்
ஓதியுணர்ந் தறிவதற்குத் துணையாய் நிற்கும்
உயர்வுடைய கல்லூரி கண்ட செம்மல்!

அவினாசி லிங்கரவர் அகத்தின் உள்ளே
ஆறாகப் பொங்கிவரும் அன்பின் மிக்கார்!
புவிநாசம் தீர்த்துவிடும் உறுதி யோடு
புறப்பட்ட படைவீரர்! வலிமை உள்ளார்!
தவமாந்தர் நலம்தேடி நடந்து சென்ற
தடம்தேடி நடக்கின்ற தகைமை யாளர்!
செவிபாயும் தேனாகத் தமிழை என்றும்
சிறப்புடைய தவிசேற்ற முயல்வார் வாழி!

பொன்னிதயக் காந்திமகான் போட்டுத் தந்த
புதியதொரு வழியினிலே சென்று நாளும்
அன்னியரின் பிடியினிலே உழன்றி ருந்த
அன்னையவள் துயர்களையப் பாடு பட்டார்!
கன்னிமொழி தமிழின்பால் காதல் கொண்டு
கலைகளுக்கோர் களஞ்சியத்தைக் கட்டித் தந்தார்!
நன்னயம்சேர் மனையியலைப் பெண்கள் கற்கும்
நாட்டமுடன் கல்லூரி நாட்டி வைத்தார்!

எந்தஒரு சூழ்நிலையில் இருந்தபோதும்
　　இதயத்துள் ஒளியதனை ஏற்றி வைத்த
அந்தஒரு குருசிவா னந்தர் நாமம்
　　அனுதினமும் மறவாமல் வணங்கி நிற்கும்
சிந்தையது கொண்டஅவி நாசி லிங்கர்
　　சீரோங்கி மேன்மேலும் சிறந்து வாழத்
தந்தையவர்க் குபதேசம் செய்த பிள்ளை
　　சரவணனைக் கும்பிட்டு வேண்டு வேனே!

❋ ❋ ❋ ❋

# பொள்ளாச்சி
# நாச்சிமுத்துக் கவுண்டர்

முயன்றால் எதுவும் முடியுமெனும்
        மொழியை நம்பிய ஒருமனிதர்!
உயர்ந்தார் அயரா உழைப்பாலே
        ஓய்ந்தே அறியாச் சிறப்பாலே!

சுடுகிற துயரைச் சிதறடிப்பார்!
        சோம்பலை எதிர்த்து முறியடிப்பார்!
கடுகை மலையாய் வளரவைப்பார்!
        கைகளை நம்பித் தொழிலெடுப்பார்!

கையைப் பிசையார் கண்கலங்கார்!
        கவலைக் கிரையாய் என்றும்விழார்!
வையத் தொருநாள் உயர்நிலையில்
        வாழ்ந்திடு வேன்என எண்ணிடுவார்!

எண்ணிய எண்ணமும் விணாமோ?
        எல்லாம் வந்துகை கூடாதோ?
பண்ணிய புண்ணியம் பாழாமோ?
        பத்தனை மாரியும் பாராளோ?

நீட்டி நெறித்துப் படுக்காமல்
        நிமிர்ந்து செல்லும் மாடுகளைப்
பூட்டி நடத்தும் பழங்காலப்
        போக்கு வரத்துப் புலியானார்!

கூடிய பொருளும் சிந்தனையும்
குழைந்து கொஞ்சிக் குலவியதால்
வாடிய தறியா மலராக,
வற்றிய தறியா நதியாகப்

பொலிந்து தொழில்தான் மேன்மேலும்
பூரணம் நோக்கி நகர்ந்ததுவே!
வளர்ந்து பலகிளை பரப்பியது!
வாழ்க்கையை முழுதாய் நிரப்பியது!

ஆளும் படியே அமர்ந்தாலும்
ஆக்கம் மிகவும் இருந்தாலும்
நாளும் உழைக்கும் தொழிலாளர்
நலமே கருதும் பண்பாளர்!

உழைப்பார்க் கும்பிற் காலத்திற்(கு)
ஒதுக்கி கொடுத்த குணசீலர்!
பிழைப்பார் தமையும் மன்னிக்கும்
பெருமைக் குரியார் அருளாளர்!

உருளும் பணந்தான் வந்தவுடன்
உலகின் சிலரின் வாழ்க்கையிலே
அருளும் நெறியும் பறந்துவிடும்!
ஆணவப் போக்கே மிதந்துவரும்!

செருக்கே வளரும் சினம் வளரும்
செல்வம் வந்தால் சிலருக்கு!
அழுக்கே அறியா மனமொன்றே
அமைந்தி ருந்தது இவருக்கு!

பணிவே அணியா யணிந்திடுவார்
பக்குவ மாக நடந்திடுவார்!
துணிவே உடையார் அவரெதையும்
தொட்டால் துலங்கும்! மகிழ்ந்திடுவார்!

வல்லமை பெற்றார் வளம்பெற்றார்!
வறியவர்க் குதவும் உளம்பெற்றார்!
நல்லன எவையெவை அவையெல்லாம்
நாடிச் செய்யும் நினைவுற்றார்!

குறையறச் செய்யும் அருள்மாரி
அம்மன் கோவில் குட முழக்கை
நிறைவுறச் செய்தே கவுண்டரவர்
நிதமும் அருளில் நனைந்திட்டார்!

சின்னஞ் சிறிய உதவியதைச்
செய்தார் ஒருவர் என்றாலும்
நன்னெஞ் சுடையார் நினைத்திடுவார்!
நன்றியை என்றும் மறந்தறியார்!

வாட்டும் பசியை விரட்டிவிட
வயிற்றுக் கிட்ட ஒருவரினை
மீட்டும் மீட்டும் போய்ப்பார்த்து
மிகவும் நன்றி காட்டியவர்!

மாடு வாங்கப் பணந் தந்த
மாதினை எண்ணி மனம் நெகிழ்ந்து
ஓடி ஓடி உதவியவர்!
உருகி உருகி அருளியவர்!

என்று மணையாப் புகழ் விளக்கை
ஏந்திய வீரத் தலைவரவர்!
நன்றி மறவாச் செம்மலவர்!
நாச்சி முத்துக் கவுண்டரவர்!

அஞ்சா நெஞ்சர்! போக்கிரிகள்,
அடியாள், பிடியாள் அனைவரையும்
பஞ்சாய்ப் பறக்கப் பண்ணியவர்!
பாயும் புலியாய்ச் சீறியவர்!

துணிவும், உழைப்பும், தெய்வத்தைத்
தொழுதே உருகும் நற்செயலும்,
பணிவும் சேர்ந்தால் கவுண்டரவர்
படமே தெளிவாய் உருவாகும்!

நாச்சி முத்துக் கவுண்டரவர்
நாமம் நல்லவை அத்தனைக்கும்
சாட்சியாய் நின்று நமைக்காக்கும்
சக்தியின் அருளும் பெருகிவரும்!



# அமரர் ராஜீவ் காந்தி

சீருயர்ந் தோங்கித் திகழ்கிற நமது
பாரத சரித்திரப் பாதையில் ஒளியைப்
பாங்குடன் சேர்த்த பண்டிதர் நேரு
ஓங்கிய அன்புடன் உலகுக் களித்த
சந்தனம் ஒத்த சிந்தைய ரான
இந்திரா ஈன்ற எழிலுயர் ராஜீவ்!

வாழ்பவர் எல்லாம் வளத்தோடு வாழ
சூழ்வன யாவும் சுகத்தினை வளர்க்க
நாளும் உழைத்து நற்பயன் அதனை
வேள்வியின் அவிசாய் மேலுற வழங்கி
ஒப்புயர் வின்றி உலகிலே என்றும்
நற்புகழ் கொண்ட நல்லவர் ராஜீவ்!

நல்லவர் அவரை நாயகன் விரும்பி
எல்லையில் வாஎன இயம்பிய தாலே
நன்றாய் இருமென நமைவிடுத் தாங்கே
சென்றார் போலும்! செய்வதென் இனிமேல்?
உத்தமர் அவரின் உயரிய வழியில்
நித்தமும் நடந்து நிம்மதி பெறுவோம்!

புண்ணிய ராஜீவ் புவியினில் உள்ளோர்
எண்ணம் தனிலே எழில்விரித் திருப்பார்!
என்றும் அவர்புகழ் இமய மலைபோல்
நின்றிட இறைவன் நிறைந்தருள் புரிவான்!
வாழிய ராஜீவ்! வாழிய அவர்குலம்!
வாழிய நமக்கவர் வழங்கிய நலங்கள்!

வாழிய பாரத மணித்திரு நாடு!
வந்தே மாதரம்! வந்தே மாதரம்!

# அன்னை தெரசா

என்இறைவன் சிலுவையிலே அறையப் பட்டார்;
இன்னல்களை அளவின்றிச் சுமந்து கொண்டார்;
அன்னவரைப் போலேயே அடியேன் கூட
அல்லல்களைச் சுமந்தபடி ஏழை யாக
மண்ணுலகில் வாழ்வதையே நான்ப ணிந்து
வணங்குகிற இயேசுபிரான் விரும்பு கின்றார்.
என்னுமொரு புதிதான பாடம் தன்னை
இன்றைக்குத் தெளிவாகக் கற்றுக் கொண்டேன்.

அனுபவத்தால் ஏழைமையின் கொடுமை முற்றும்
அறிந்து கொண்டு கால்வலிக்க நடந்து சென்றேன்.
மனிதரிலே ஏழையர்கள், பசியைக் கொஞ்சம்
மாற்றுகிற சிறிதளவு உணவ தற்கும்,
இனியநிழற் சிறுகூரை யதற்கும் நித்தம்
ஏங்கியலைக் கழிகையிலே எந்த மட்டில்
மனவெறுப்பும் வேதனையும் அடைந்தி ருப்பார்
எனநன்றாய் நேரினிலே புரிந்து கொண்டேன்.

எந்தவித ஆதரவும் இன்றி நாளும்
இன்னலுறும் தடைப்பட்டார்; அன்பு காட்டச்
சொந்தமெதும் காணாமல் எந்தப் போதும்
சோகமுறும் அனாதையர் விழிக ளில்தான்
அந்தஒரு மெய்யிறைவன் தோன்றுகின்ற
அற்புதத்தைக் கண்டிடலாம்; வீதிஓரம்
நொந்துபசி பிணியாலே உழல்வோ ரெல்லாம்
நோக்கிடும்என் கண்கண்ட தெய்வம் ஆவார்.

"தெருவதனில் ஆதரவற் றிறப்போன் தானும்
 
தீமையினால் ஒடுக்கப்பட் டழிவோன் தானும்

வருத்துகிற தொழுநோயால் நலிவோன் தானும்

மண்மீது நானேதான்" என்னும் உன்றன்

குரல் எனது மனக்கடலில் அலைகள் போலக்

குதித்தொலிக்க என்உள்ளம் உறவை நாடி

உருகிஉயர் அன்பதனை வேண்டும் ஏழை

யுடன் ஒன்றத் துடிக்கிறது மிகவும் ஏங்கி!

இறைவாநான் உனைவணங்கிக் கேட்டுக் கொள்வேன்

இலட்சியநற் பாதைக்குக் கூட்டிப் போவாய்!

நிறைந்தசுக லொரேட்டா மடத்து வாழ்க்கை

நிழலாடி நெஞ்சுறுதி குலைக்க லாமா?

சிறிதேனும் தளராத நெஞ்சு ரத்தை

மட்டும்நீ சிறியேனுக் களிக்க வேண்டும்.

இறைவா நான் உனைவணங்கிப் பிரார்த் திக்கின்றேன்

இலட்சியநல் வழிக்கென்னை அழைத்துச் செல்வாய்.

சின்னஒரு துளியளவே அன்பிற் காகச்

சிந்தைமிக மிகஏங்கித் தவித்து வாடி

இன்னலுறும் பலமனிதப் பயிர்கட் கெல்லாம்

எழில்முகிலாய் அன்புமழை சொரியும் ஆர்வம்

பன்மடங்காய்ப் பெருகிவர, நெஞ்சம் முற்றும்

பரிவாலே உருகிவர நின்ற தூய

அன்னையவர் தெரேசாவின் இந்தப் பாட்டில்

அலைமோதும் அன்பிற்கோர் அளவும் உண்டா?

அன்பென்னும் பெருவெள்ளம் ஊறு கின்ற
        அழகுடைய நல்லிதயம் தாங்கி நின்று,
பண்பென்னும் அணிமணிகள் பூண்ட வாறு
        பாருலகைத் தனதுவயப் படுத்திக் கொண்டு
துன்பமென்ற கொடும்பேயால் தாக்கப் பட்டுத்
        துடிக்கின்ற மானுடர்க்குத் துணையாய் ஓடி
இன்பமென்ற பெரும்பரிசை நல்கு கின்ற
        எம் அன்னை தெரேசாபோல் எவரும் உண்டா?

எங்கேயோ இருக்கிறஅல் பேனி யாவில்
        எழுபத்தெட் டாண்டுகள்முன் பிறந்த அக்னெஸ்
இங்கேவந் தேழையர்க்குத் தொண்டு செய்யும்
        எண்ணத்தை இளவயதில் வளர்த்துக் கொண்டார்.
பொங்கிவரும் ஆசையுடன் மணத்துக் கேங்கும்
        பூவையினைப் போல் தனது கொள்கைக் காகப்
பங்கமறத் தனைத்தானே அர்ப்ப ணிக்கப்
        பரமனிடம் அருள்வேண்டி ஏங்கி நின்றார்!

துன்பமுறும் ஏழையர்பால் உண்மை அன்பைச்
        சொரிவதற்கு வறியவராய் வாழ வேண்டும்;
தன்மனது திரியாமல் ஆண்ட வன்பால்
        சார்வதற்குக் கற்புநெறி காக்க வேண்டும்;
மண்ணுலகில் இறையவனின் நோக்கம் முற்றும்
        மாசறவே ஈடேற்றப் பணிவு வேண்டும்;
என்னுமுயர் கொள்கைகளை உறுதி யாக
        எப்பொழுதும் கடைப்பிடித்து வாழ்ந்தார் அன்னை!

கனவதனை நனவாக்கச் செல்வோர்க் கெல்லாம்
　　காசினியில் தடைக்கற்கள் கோடி தோன்றும்!
மனஉறுதி மாறாமல் மேலே போனால்
　　வான்முட்டும் பெருவெற்றி கைக்குள் கிட்டும்!
தனதுநலம் அணுவளவும் கருதி டாமல்
　　தாரணிவாழ் ஏழையரின் துன்பம் போக்க
அனுதினமும் பாடுபட உறுதி பூண்ட
　　அன்னைஎதிர்ப் பட்டதடை அனைத்தும் வென்றார்!

இலட்சியநற் பயணத்தில் வந்து சேர்ந்த
　　இடம்நமது பாரதத்தின் வங்க மாகும்.
நிலப்பெருமை மிகஉடைய கல்கத் தாவில்
　　நிறுவியுள மரியன்னை பள்ளி தன்னில்
நலக்குவியல் தரும்கல்வி கற்பிப் போராய்
　　நாட்டமுடன் தன்பணியின் தொடக்கம் செய்தார்.
அலைத்திருந்த இளவயதுக் கனாப்ப லித்தே
　　அடைத்திருந்த கதவெலாம் திறக்கக் கண்டார்.

என்டேலி பள்ளியிலே கல்வி போதித்
　　திருக்கின்ற போதினிலே எதிரில் நித்தம்
திண்டாடும் ஏழைகளுக் கென்ற மைந்த
　　சேரியிலே பிணியோடும் வறுமை யோடும்
மன்றாடிக் கொண்டிருக்கும் மக்கள் தம்மை
　　மனம்வெதும்பித் தினம் பார்த்துக் கொண்டிருந்தார்.
கொண்டாடும் நற்கல்வி அந்தச் சேரிக்
　　குழந்தைகளுக் கெட்டாதென் றுணர்ந்து நைந்தார்.

அவர்களுக்கும் கல்விவளம் சேர வேண்டும்;
அல்லலிலா நல்வாழ்க்கை அமைய வேண்டும்;
கவலைதரும் பெருநோய்கள் தீர வேண்டும்;
கட்டுதற்கும் ஓர்ஆடை கிடைக்கவேண்டும்,
உவகையுடன் அவர்ஓடி ஆட வேண்டும்;
உள்ளத்தில் மகிழ்ச்சியது கூட வேண்டும்;
இவைபோன்ற எண்ணங்கள் எழுந்து பொங்க
இரவுபகல் தூக்கத்தை இழந்து விட்டார்!

பள்ளியதில் பணிசெய்தால் பாவப் பட்டுப்
பரிதவிக்கும் ஏழைகளுக் கன்பு செய்ய
எள்ளளவும் இயலாதென் றெண்ண மிட்டார்;
எப்படியும் வெளியேறி விட நினைத்தார்.
உள்ளமதில் உறுதியுடன் கிறித்த வத்தின்
உயர்ந்தமதத் தலைவர்களுக்கெழுதிக் கேட்டார்!
கள்ளமிலாப் பெண்விடுத்த வேண்டு கோளைக்
கடைசியிலே மதத்தலைவர் ஏற்றுக் கொண்டார்.

அவ்வளவுதான், சிறகதனை விரித்து வானில்
ஆனந்த வட்டமிடும் புறாவைப் போல
செவ்வியதன் பணிதொடங்க அருகி ருந்த
சேரியினைத் தேர்ந்தெடுத்து விரைந்து சென்றார்.
கவ்வுகிற வறுமையினால் கதியி ழந்து
கடைப்பட்ட மக்களிடை குடிபு குந்தார்.
எவ்வகையும் ஏழையரின் வாழ்வில் நல்ல
இன்பத்தைச் சேர்த்துவிட முனைந்து நின்றார்.

தொடக்கத்தில் பலதடைகள் வந்த போதும்
துவளாமல் தன்பணியைத் தொடர்ந்து செய்தார்.
அடக்கத்தின் இலக்கணமாய் வாழ்ந்து காட்டி
அன்புக்குக் கங்கையெனத் திகழ்ந்தி ருந்தார்.
படிப்பற்ற மிக ஏழைச் சிறுவ ருக்குப்
பாடங்கள் அன்போடு சொல்லித் தந்தார்.
ஒடுக்கப்பட் டழிகின்ற மாந்தர்க் கெல்லாம்
உறுதுணையாய் ஓடிவந்து துன்பம் தீர்த்தார்.

தன்னலமே சிறிதுமிலாப் பணியி னாலே
தாரணியோர் யாவருமே புகழ்ந்து பாடும்
நன்னிலையை அவர்எய்தித் திகழு கின்றார்!
நம்தலைவர் நேருவினால் புகழப் பட்டார்!
பொன்ஒளிரும் நன்நோபல் பரிசு பெற்றார்!
பூவுலகில் பிறர்பணிக்கே வாழ்ந்தி ருக்கும்
அன்னையவர் தெரேசாமேன் மேலும் ஓங்கி
ஆண்டவனின் திருவருளால் நீடு வாழி!

பிள்ளையினைப் பெறவில்லை என்ற போதும்
பேருலகில் அன்னையெனும் பேரைப் பெற்றுக்
கொள்கையிலே எப்பொழுதும் உயர்ந்து நின்று
குறைப்பட்ட மனிதருக்குத் தொண்டு செய்து
வெள்ளமெனும் அன்பதனை வழங்கி நிற்கும்
மேன்மைமிகு தெரேசாவாம் அன்னை வையம்
உள்ளவரை ஒப்பற்ற புகழைத் தாங்கி
உயர்இறைவன் அருளாலே வாழ்க! வாழ்க!



# டாக்டர். முத்துலெட்சுமி

தொல்லையே எம்மை வந்து தொடருமோ துணைக்கென் றிங்கே
இல்லையே யாரும் என்று ஏங்குவோர் தமக்கு வாய்த்த
சொல்லையே கடந்த முத்து லெட்சுமிச் சுடரே போற்றி!
எல்லையே இல்லா அன்பின் இதயமே போற்றி, போற்றி!

தொண்டினுள் சிறந்த தொண்டாய்த் துவக்கினை ஒளவை இல்லம்!
எண்ணிய எண்ணம் போல இணையிலாக் கல்வி என்னும்
கண்ணினைத் திறந்த தெய்வக் கருணையே! கனிவே! மின்னும்
புண்ணியப் பொலிவே எங்கள் புனிதநற் றாயே போற்றி!

பாவையர் குலத்தை வந்து பற்றிடு கின்ற துன்பக்
கோவையை விலக்க வந்த குளிர்தரு நிழலே போற்றி!
காவலர் இன்றி மெத்தக் கலங்கிய பிஞ்சு கட்குச்
சேவையே புரிந்த முத்துத் திருமகள் போற்றி போற்றி!



# ஈடறியா எதிராசர் என்றும் வாழி

முன்பொருநாள் விடியலிலே பாலை வாங்கி
　　முனைப்புடனே அடுப்பிலதை வைத்துக் காய்ச்சி,
தென்புதரும் நற்காபிப் பொடியின் சாறும்
　　தித்திக்கும் சர்க்கரையும் அளவாய்ச் சேர்த்தே
என்கணவர் பருகுதற்கு நான்கொ டுத்தேன்;
　　என்றாலும் அவரதனை ருசித்தி டாமல்
தன்குருவாம் எதிராசர் கலந்து நல்கும்
　　தனிச்சிறப்புக் காபிக்கே ஏக்கம் கொண்டார்!

என்னதனித் தன்மையதில் என்று கேட்டேன்;
　　எதிராசர் என்றாலே இனிமை என்றார்!
புன்னகையால் யாவரையும் வெல்லுகின்ற
　　பொலிவுடைய திருவதனம்! நெடிய மேனி!
மின்னலினைப் பாய்ச்சுகிற தூய ஆடை!
　　மிடுக்குடைய நல்லநடை! தெளிந்த சிந்தை!
கன்னலினை விஞ்சுகின்ற சொல்லின் ஊற்று!
　　கல்வியின்நல் ஒளியதனைத் தெளிக்கும் கண்கள்!

நேர்மையெனும் கைத்தடியை ஏந்தி வாழ்க்கை
　　நெடுவழியில் பயமின்றிச் செல்லும் வீரம்!
ஆர்வமுடன் எதனையுமே அறியும் ஆசை!
　　அறிந்தவற்றை மற்றவர்க்கும் உரைக்கும் எண்ணம்!
பார்வையிலோர் அழகுமலர் பட்டால் தன்னைப்
　　பறிகொடுத்து நிற்கின்ற குழந்தை நெஞ்சம்!
சீருடனே இவையொன்றி வடிவெ டுத்தால்
　　திருவுடைய எதிராசர் தம்மைக் காண்போம்!

பயத்தோடு தன்னிடத்தே அணுகு கின்ற
பலருடைய பிரச்சனைகள் பற்றி என்றும்
அயராமல் ஆராய்ந்தே அவற்றைத் தீர்க்க
ஆனவழி என்னவெனக் கண்டு பின்னர்
உயர்நீதி மன்றேறிப் பிறர்வி யக்க
ஒப்பற்ற முறையினிலே வழக்கைக் கூறி
நயமிக்க வெற்றியினைப் பெற்று வந்து
நல்குகிற எதிராசர் ஒப்பா ருண்டோ?

குற்றஇயல் பற்றியுள சட்டம் யாவும்
குறையின்றி மிகமிகவே நுணுக்க மாக
கற்றறிந்து வாதாடும் அவரைப் போலக்
காண்பதெனில் இவ்வுலகில் கடின மன்றோ?
தெற்றெனவே நீதிபதி அறிந்து நல்ல
தீர்ப்பதனை வழங்கிடவே உதவு கின்ற
விற்பனராய் எதிராசர் எந்த நாளும்
விளங்கியதை மறந்திடவா முடியும் நம்மால்?

காலையிலே துயில்நீங்கி விழிக்கும் போதில்
கண்ணிரெண்டும் இலக்குமியின் படத்தைப் பார்க்கும்!
வேலையினைத் தொடங்குகிற வேளை தன்னில்
வெற்றியதன் உச்சிதனைக் கரம்வ ளைக்கும்!
நூலையொரு கரம்தொட்டுப் புரட்டும் போதில்
நுண்ணறிவு நொடியிலதை அறிந்து கொள்ளும்!
சோலையிலே அமைதியுடன் நடக்கும் போதில்
தூயமல ரழகைஉளம் ரசித் திருக்கும்!

ஆடவர்க்கு மட்டும்தான் கல்வி என்னும்

அநியாயம் தொடராமல் உழைத்து ழைத்துத்

தேடியநற் செல்வமெலாம் கொட்டித் தந்து

சென்னையிலே பெண்களெல்லாம் சென்று கற்க

ஈடறியாக் கல்லூரி கண்ட எங்கள்

எதிராசர் வாழியெனக் கணவர் சொன்னார்.

பீடுடைய எதிராசர் நாமம் என்றும்

பேருலகில் வாழியென வணங்கி நின்றேன்!

❋ ❋ ❋ ❋

# ஆர்க்காட் டிரட்டையர்

மண்ணுல கத்தொரு மானுட னாக
எண்ணம் முழுதும் என்றும் நிறையும்
தெய்வ இராமனின் சிறப்பினைச் சற்றும்
வையக மாந்தரின் வார்த்தைகள் அளக்கா!
மனிதனாய்ப் பிறந்து மனிதனாய் வளர்ந்து
மனிதனாய் வாழ்ந்த மாலவன் அவனை
எண்ணிடில் இதயம் இறக்கைகள் விரித்து
வண்ணம் நிறைந்தொளிர் வானில் பறக்கும்!
இன்பமே கத்தின் இடையில் புகுந்து
துன்பத் தூசியைத் துடைத்து மகிழும்!
அந்த இராமனின் ஆருயிர்த் துணைவி
வந்தனைக் குரிய மங்கையாம் சீதை!
மாதவன் நிழலாய் வாழ்ந்தவள் சீதை!
சீதையின் உயிராய்த் திகழ்ந்தவன் இராமன்!
மிதிலைச் செல்வியும் மேன்மையன் இராமனும்
இதயம் கலந்ததன் இன்ப விளைச்சலாய்
உலகெலாம் ஓங்கும் உவகையில் மிதக்க
இலவகுச ரென்றும் இரட்டையர் தோன்றினர்!
சூரிய வம்சச் சுடரொளி பெருக,
பாரத நற்புகழ் பாரினில் விரிய
நன்மைகள் கோடி நாடெலாம் விளைய,
இன்மைகள் யாவும் இல்லையென் றாக,
திறன்மிக உயர, சிந்தனை மிளிர,
அறம்வளர்ந் தோங்க, ஆற்றலும் சிறக்க
அன்புக் கடலில் அகிலமே ஆட,
இன்பமே எங்கும் இருமடங் கானது!

காவிய இரட்டையர் காசினி தன்னில்
தூவிய மகிழ்ச்சி சொல்லுதற் கரிது!
அண்ணல் இராமனின் அவதா ரத்தின்
புண்ணியப் பெருமைகள் புவியோர்க் குரைத்தனர்!
அறவழி சென்றால் அவனியே வணங்கும்
முறைமையைக் கூறி முன்னே நடந்தனர்!
இவர்க்கும் முன்னமே எழில் நகர் ரோமை
புவனம் அனைத்தும் புகழ்கிற விதத்தில்
உண்டு பண்ணினர். ஒப்பிலா இரட்டையர்
(ROMULEO-REMUO)
என்று காண்கையில், இரட்டையர் என்றால்
மண்மேல் என்றுமே மாண்பினை அடைபவர்
என்னுமோர் எண்ணமே எவர்க்கும் ஏற்படும்.
அந்த இருவர் போல் அண்மை நாளிலே
இந்த மண்ணிலே இருவர் வாழ்ந்தனர்!
அன்பினால் உலகம் ஆர்க்காட் டிரட்டையர்
என்றுரைத் தென்றும் ஏத்திப் புகழ்ந்தது!
கதிர்க்குலச் செல்வரைக் காட்டிலும் புகழ் எனும்
நிதிக்குவை இவர்கள் நிறையச் சேர்த்தனர்!
இந்தியப் பேரொளி எங்கணும் பரப்ப
வந்தவ ராகவே வாழ்ந்து காட்டினர்!
தவம்மிகப் புரிந்த தகுதியி னாலே
அவர்களைப் பயந்த(து) ஆந்திர தேசம்!
தர்ம நெறியிலே சந்ததம் நடந்ததால்
கர்நூல் அவர்களைக் கனிவுடன் பெற்றது!
சிந்தனை உயர்வு செழித்தமை யாலே
செந்தமிழ் நாடு சிறப்புடன் வளர்ந்தது!
மாதவன் பேரருள் மண்டிய தாலே
கோதிலாக் **குப்பு சாமி முதலியார்**

இரட்டையர்க் கமைந்த இனிய தந்தையாய்த்
திரட்டிய நற்புகழ் செப்பவொண் ணாது!
இருவரை முன்னம் ஈன்றவள் சீதை!
இருவரைப் பின்ஈன் றவள்சித் தம்மாள்!
சீதை பெற்ற செல்வரைப் போலவே
மாதிவள் பெற்ற மக்களும் வாழ்ந்தனர்!
கரியவன் பெருமையைக் காசினிக் குரைத்த
இரட்டையர் போலவே இந்த இரட்டையர்
பாரத நாட்டின் பாங்குயர் பெருமைகள்
சீருடன் உலகில் திகழச் செய்தனர்!
இருவரில் மூத்தவர் இராம சாமியார்!
கருவில் திருவோடு காலடி வைத்தவர்!
அறிவின் எல்லையை அமைதியாய் அடைந்தவர்!
திறனின் பூரணச் செயற்பா டுடையவர்!
நேரிய பாதையில் நிதமும் நடந்தவர்!
சீரிய நோக்கினால் சிறப்பினை உற்றவர்!
மாசறக் கற்று மனித இயலிலே
தேசுற விளங்கிய சிந்தனை யாளர்!
சரித்திரம், சட்டம், தத்துவம் இவையெலாம்
விரித்துரைக் கின்ற வித்தை தெரிந்தவர்!
ஆங்கிலப் பேச்சினால் யாரையும் எளிதில்
பாங்குடன் கவரும் பான்மை மிகுந்தவர்!
பேச்செனில் பேச்சு! அப்படிப் பேச்சு!
ஆச்சரி யங்கள் அமைந்திடும் பேச்சு!
கருத்துக் குவியல்கள் கவினொளி விரிக்கும்!
திருத்த நினைவுகள் தெளிவினைக் கொடுக்கும்
செல்வ வளம்பெறும் சிந்தனை பூக்கும்!
நல்லதிட் டங்கள் நயம்படத் தோன்றும்!
தொழில்பல தொடங்கும் துடிப்புப் பிறக்கும்!

இழிவுகள் முற்றும் எட்டி உதைக்கும்!
தாய்த்திரு நாடு தரணியில் உயரும்
வாய்ப்பினைக் கொணர வல்ல நல்உரை!
ஆங்கில மொழியில் அவர்உரை ஆற்ற
ஓங்கிய புகழ்மலை உலவிய அண்ணா
தமிழினில் மாற்றித் தந்ததில் இருந்துதான்
தமது நல் அரசியல் தவத்தைத் தொடங்கினார்!
அறிஞராண் ணாவின் அரசியல் வாழ்க்கை
விரிகதி ராக விளங்கிய தறிவோம்!
புரட்சித் தலைவர் பொற்குவை வழங்கி
அறிஞரின் சிலையை அமைத்துக் கொடுக்க
நன்னகர் சென்னை நடுவினில் வைத்து
விண்ணுயர் இராமர் விரும்பித் திறந்தார்!
ஆதியில் இந்த அருந்தமிழ் நாட்டில்
நீதிக் கட்சியை நிறுவிய தூண்களில்
ஒருவராய் இராம சாமியார் உதவி
அருமையும் பெருமையும் அமையச் செய்தவர்!
நீதிக் கட்சியில் நின்றி ருந்தாலும்
சாதனை யாலும் தகுதியி னாலும்
தேசியக் கட்சியைச் சேர்ந்தவர் எனினும்
நேசக் கரம் தரும் நிலையில் இருந்தவர்!
இதய சுத்தியோ டிருந்தரா ஜாஜி
மதித்துப் போற்றிய மாண்பைப் பெற்றவர்!
ஐக்கிய நாடுகள் அமைத்த அவையிலே
முக்கிய மானவ ராகமுன் நின்றவர்!
மனத்தினில் பாரதம் மட்டுமல் லாமல்
அனைத்துல கத்தையும் ஆழப் பதித்து
பூரண அமைதியும் பொலிவுறு செல்வமும்
சீரிய நெறிகளும் சேர்க்க விழைந்தவர்!

இத்தமிழ் மண்ணில் இராம சாமியார்
எத்தனை தொழில்கள் இலங்கிடச் செய்தார்!
பற்பல தொழில்கள் அவர் புகழ் பாடும்!
அற்புத மனிதர் அவரெனப் பேசும்!
நற்றொழி லாலே நாட்டுப் பெருமையை
உற்ற வகையிலே உயர்த்திய வல்லுனர்!
தொழில் எனும் ஒருசொல் துலங்கும் நாள்வரை
எழிலுடன் இலங்குவார் இராம சாமியார்!
இருவரில் இளையவர் இலக்குவ ராவார்!
பெருமைகட் கெல்லாம் பிறப்பிட மானவர்!
அறிவியல் துறையிலே ஆதவன் போன்றவர்!
மருத்துவக் கல்வியின் மன்னராய் வாழ்ந்தவர்!
ஆறுபோல் அன்புநெஞ் சகத்தினில் பெருக
பேறு பார்த்ததில் பெரும்புகழ் சேர்த்தவர்!
இளமையில் தாயை இழக்க நேர்ந்ததால்
பலதா யார்களைப் பரிவுடன் காத்தவர்!
என்மகள் நளினி இங்கு பிறக்கையில்
அன்புயர் மருத்துவர் அவர்தான் எனக்கும்!
பார்புகழ் சென்னைப் பல்கலைக் கழகப்
பேர் உயர்ந் தோங்கப் பெரும்பணி புரிந்தவர்!
ஓயுதல் இன்றி உழைப்பினை நல்கி
ஆயிரம் புதுமைகள் அங்கு கொணர்ந்தவர்!
இலங்கு நட்சத்திரம் இருபத் தேழென
விளங்குதல் போலே வியனார் பல்கலை
வேந்தராய் இலக்குவர் விளங்கிய ஆண்டுகள்
இருபத் தேழனில் என்ன பொருத்தமோ?
விண்மீன் ஒளிக்கதிர் வீசிடல் போல
அண்ணலும் அறிவொளி அங்கே பரப்பினார்.
கால்நூற் றாண்டிவர் கடமை புரிந்ததால்

ஆல்போல் தழைத்த(து) அக்கலைக் கழகம்!
உத்தமர் ஆற்றிய உயர்ந்த வேள்வியால்
எத்தனை துறைகள் எழுந்தன அங்கே!
எத்தனை மாணவர் ஏற்றம் பெற்றனர்!
எத்தனை நாடுகள் ஏத்திப் புகழ்ந்தன!
எத்தனை வளங்கள் இங்கு கொழித்தன!
எத்தனை உளங்கள் இங்கு செழித்தன!
எத்தனை நலங்கள் இங்கு வளர்ந்தன!
எத்தனை சுகங்கள் இங்கு விளைந்தன!
எண்ண முடியுமா? இயம்ப முடியுமா?
வண்ணத் தமிழிலே வடிக்க முடியுமா?
கவின்மிகு பல்கலைக் கட்டிடக் கற்களும்
இவர்புகழ் தானே இயம்பக் கேட்கலாம்!
பல்கலை வேந்தராய்ப் பட்டொளி வீசிக்
கல்விக் கதிரொளி கருத்திற் பாய்ச்சினார்!
உவப்புடன் பல்கலை உறுப்பின ராக
அவர்ஆ ளுகையில் அடியேன் இருந்தேன்.
மதிமிக உடைய எதிராஜ் பேரால்
புதியகல் லூரி பொலிவுடன் தோன்ற
ஆன உதவிகள் அனைத்தையும் செய்து
ஞான பூமியாய் நாட்டைப் புதுக்கினார்!
முன்னவர் மனித இயலை முழங்கினார்!
பின்னவர் அறிவியல் பெருமை வழங்கினார்!
முன்னவர் மிக்க முனைப்புடன் தந்தைபோல்
நன்னய மனித இயலையே நாடினர்!
பின்னவர் மிக்கப் பிரியமாய்த் தந்தையார்
சொன்ன அறிவியல் தொடர்ந்து கற்றனர்!
கீர்த்திகள் குவிக்கும் கிருஷ்ண சாமியும்
சீர்த்திகள் சேர்க்கும் தாமோ தரனும்

மூத்தவர் வழியில் முயன்று நடந்து
நேர்த்திகள் ஆயிரம் நிரப்பு கின்றனர்!
மிகவியன் மிளிரும் வேணுகோ பாலும்
தகவுள இராமச் சந்திரன் தானும்
பின்னவர் வழியில் பெரிதும் நடந்து
பொன்னுல காகப் புவியைச் செய்கிறார்!
இராம சாமியும் இளையவர் தாமும்
தராதலம் யாவும் சுற்றிவந் தாலும்
வைணவர் என்னும் வளமார் கொள்கையைக்
கணப்பொழு தேனும் கருத்தில் நீங்கிலர்!
இறுதி நாள்வரை இருவரும் அதனை
உறுதியாய்ப் பற்றி உலகில் வாழ்ந்தனர்!
திருவொளிர் நுதலில் ஸ்ரீசூர் ணத்தைத்
தரித்து வைணவத் தத்துவம் காட்டினர்!
செஞ்சொல் குழையவும் நெஞ்சகம் உருகவும்
அஞ்சன வண்ணனை அனுதினம் துதித்தனர்!
நிறைவெலாம் தருபவன் இறையவன் என்பதால்
கறையிலா மனத்துடன் கழலிணை தொழுதனர்!
ஆன்மிகத் தளத்திலே அறிவொளி பரப்பிய
மேன்மையர் அந்த மேதையர் இருவரும்
அறிவின் பெட்டக மாகிய சென்னியில்
சரிகை மின்னிடும் தலைக்கட் டணிந்து
பாரத தேசப் பண்பா டதனை
ஊருல கெல்லாம் உணர வைத்தனர்!
இருவரும் அரசியல் ஏற்றம் பெற்றனர்.
இருவரும் பல்கலைத் துணையர சாயினர்.
இருவரும் வைணவ நெறிதனைப் பற்றினர்.
இருவரும் வெற்றியாம் எழிலியை மணந்தனர்.

அவனியில் உள்ள அதிசயம் ஏழு!
இவர்கள் இருவரும் எட்டாம் அதிசயம்!
நவயுகம் பிறக்க நாளும் உதவிய
அவர்கள் பிறந்து நூறாண்டுகள் ஆயின!

இணையிலா அந்த இரட்டையர் தம்மை
நினைத்து வணங்கிட நிகழ்கிற திவ்விழா!
அறிஞரைப் போற்றும் அருந்தமிழ் அரசு
விருப்புடன் எடுக்கும் வியனார் திருவிழா!

மங்கலத் தீபா வளிப்பண் டிகையில்
எங்கணும் ஒளிவிளக் கேற்றும் வேளையில்
இருளினை யகற்றி எண்ணநல் ஒளியைத்
தருகிற இரட்டையர் தமக்கோர் எழில்விழா!

புனித இரட்டையர் புகழினைப் பரப்பும்
இனிய இல்விழா இலங்குவ தாகுக!
எங்கும் ஓங்குக இரட்டையர் திருப்பெயர்!
மங்கலம் பொங்கியே வளருவ தாகுக!

வாழிய இரட்டையர்! வாழிய அவர் பெயர்!
வாழிய உலகிது! வாழிய! வாழிய!



# கனிவுடன் ஆசி சொல்வீர்!

அறமெனும் அடித்த ளத்தில்
அன்பெனும் கோயில் கட்டி
இறைநெறி விளக்கை ஏற்றி
எவர்க்குமே வரவு சொல்லி
நிறைபுக ழோடு நித்தம்
நின்றநம் பார தத்தில்
குறைநிறைந் தெப்பு றத்தும்
குழப்பமே காணு கின்றோம்.

தாய்த்திரு நாட்டுக் காகத்
தளர்விலா துழைத்தி ருந்த
கோயங்கா நீங்கள் அந்தக்
குறைகளைந் திடுவ தற்கு
வேய்ங்குழற் கண்ணன் சொன்ன
மேன்மைசேர் கீதை தன்னை
நேயமாய் ஓதி நெஞ்சில்
நிம்மதி சேர்த்தி ருப்பீர்!

அன்னைநம் பாத தத்தை
அழிவிலே கொண்டு சேர்க்கும்
வன்முறை, கொள்ளை மற்றும்
வஞ்சினம் கொலைஎன் கின்ற
துன்பமெல் லாமே எங்கோ
துரத்திவிட் டெங்கள் நெஞ்சில்
இன்பமே பொங்கும் வண்ணம்
ஏற்றவை செய்தி ருப்பீர்!

எனினும்யாம் என்ன செய்ய?
இணையிலா உங்கள் நாமம்
மனத்திலே நினைத்துக் கொண்டு
மாதவன் கீதை தன்னைத்
தினந்தோறும் ஓதி நிற்போம்.
தீமைகள் அனைத்தும் தீரக்
கனிவுடன் ஆசி சொல்வீர்!
கண்ணனும் அருள்செய் வானே!



# கோயங்கா
## தொழுகிறோம்! வாழி! வாழி!

நேர்மையை நெஞ்சில் வைத்து,
நேர்த்தியைச் சொல்லில் வைத்து,
சீர்மையைச் செயலில் வைத்து,
சிந்தையை நாட்டில் வைத்து,
கூர்மையை அறிவில் வைத்து,
கொள்கையை உயர்வில் வைத்துச்,
சோர்விலா துழைத்தி ருந்த
தூயர்உம் போல்வார் யாரே!

ஈசனை எந்தப் போதும்
எண்ணத்தில் சுமந்த வண்ணம்
தூசென எதிர்ப்பை எல்லாம்
தூரத்தில் ஊதித் தள்ளித்
தேசத்தை உயர்த்து தற்குச்
சிறந்தபத் திரிகை தன்னை
நேசமாய் நிதம்ந டத்தி
நிறைபுகழ் பெற்றீர் ஐயா!

வீரமே உருவ மாக
விளங்கிய கோயங் காநீர்
பாரத அன்னை ஈன்ற
பாசநன் மைந்த ராவீர்!
ஈரமே சுரக்க யார்க்கும்
இயல்பினால் உதவி நின்ற
சூரரே! உம்மை நோக்கித்
தொழுகிறோம்! வாழி! வாழி!

☆ ☆ ☆ ☆

# பார்த்ததுண்டோ?

### பல்லவி

பார்த்ததுண்டோ தோழி – பைந்தமிழ் இசை வளர்த்து
சீர்த்தி மிகஅடைந்த செட்டி நாட்டரசர் போல் –
பார்த்ததுண்டோ?

### அனுபல்லவி

வார்த்தை இனிமை மிக்க வள்ளல் குணம்தான் உள்ள
கூர்த்த மதியும் கொண்ட கோமான் அண்ணாமலைபோல்
– பார்த்ததுண்டோ?

### சரணங்கள்

பெற்றுக் கரம்சுமந்து பேணி நிதமும் காத்த
உற்ற அன்னையை மறந்தால் உயர்வு வருமோ என்று
நற்றமிழ்த் தாயைப் போற்றி நறுந்தமிழ் இசையைப் போற்றி
சற்றும் அயராதுழைத்த தலைவர் அண்ணாமலைபோல் –
பார்த்ததுண்டோ?

நேரிய நல்வழியில் சென்று நிறைந்த பொருளை ஈட்டி
சீரிய முறையில் என்றும் தேடிய செல்வம் காத்து
காரியம் அறமாய்க் கொண்டு காத்ததை வகுத்தளித்து
பாரிலே உயர்ந்துநின்ற பண்புயர் அண்ணாமலை போல் –
பார்த்ததுண்டோ?

* * * *

# முத்தைய வள்ளல் நீடு வாழ்க!

சிறப்புறும் குடும்பந் தன்னில்
செட்டிநாட் டரசர் சேயாய்
பிறப்புறும் பெருமை யுற்றாய்!
பிறர்மனம் அறியக் கற்றாய்!
மறுப்பெதும் சொல்லாய் தந்தை
மரபினைக் காத்தாய் வந்து
குறைப்படும் நெஞ்சில் அன்புக்
குளிர்மழை பெய்தாய் ஐயா!

பாடவே வேண்டாம் இந்தப்
பைந்தமிழ் என்னும் பேச்சுக்
கூடவே கூடா தென்னும்
கொள்கையை நெஞ்சில் கொண்டு
சூடவே வந்தாய் அன்னைக்
கிசைமுடி சூட்டிக் கண்டாய்
நாடவே செய்தாய் பொங்கும்
நற்றமிழ் இசையை நீயே!

தனித்திறம் காட்டி நல்ல
தமிழிலே பேசி விட்டால்
மனத்துளே மகிழ்வுற் றண்ணா
மலையிலா படித்தாய் என்பார்!
இனித்திடும் தமிழை நெஞ்சத்
தவிசிலே ஏற்றும் உன்றன்
வினைத்திறம் ஒன்றால் வந்த
விளைவின்றி வேறே என்ன?

இதுவரை கள்ளம் என்பது
இம்மியும் அறியா தாகிப்
புதியதில் புதிய தாகப்
பொலிந்ததே உன்றன் நெஞ்சம்!
எதுவரை குழந்தை நெஞ்சம்
இருக்குமோ பார்ப்போம் என்ற
முதுமையால் என்ன செய்ய
முடிந்தது சொல்லேன், சொல்லேன்!

அறுபது வயதா? மெச்சும்
அறிவினை அளவாய்க் கொண்டால்
இருபது கூட்டி னாலும்
இருக்குமென் றெவரும் சொல்வார்!
கறையது படியா நெஞ்சால்
கள்ளமே அறியாப் பண்பால்
ஒருசிறு குழந்தை என்றே
உன்னையிவ் வுலகம் சொல்லும்!

எதிர்த்திட வருவார் கூட
இனித்திடும் சொல்லைக் கேட்டால்
மதித்திடல் புரிவார், நல்ல
மனத்தினை அறிவார், நெஞ்சில்
பதித்திடம் பெயர்வார், கெட்ட
பகைக் குணம் விழுவார், பாடித்
துதித்திடப் புகுவார் நின்று
தொழுதிடற் குரியாய் வாழி!

உள்ளதை உள்ள வாறே
　　உரைப்பதில் கீரன் தோற்பான்!
கள்ளமே அறியாய்க் கிந்தக்
　　காசினி முழுதும் தோற்கும்!
கொள்ளென அள்ளி அள்ளிக்
　　கொடுப்பது தொழிலாய்க் கொண்ட
வள்ளலே உன்னை நீடு
　　வாழ்கென வாழ்த்தார் யாரே!

****

# அமரர் ஏ.வி.எம்.

காடுவெட்டிப் போட்டுக் கடியநிலம் திருத்தி
வீடு கட்டிக் கொண்டிருக்கும் வேள்வணிகர் பெருமைகளை
நன்றாக என்னுடைய நாவால் எடுத்துரைக்க
ஒன்றா? இரண்டா? ஓரளவில் அடங்குவதா?
நாடுவிட்டு நாடு நாவாய் பல செலுத்திப்
பீடு மிகவோங்கப் பெருவணிகம் புரிந்ததுவும்,
பாராண்ட வேந்தருக்கும் பணஉதவி செய்துபுகழ்ச்
சீராண்டு பேராண்டு சிறப்புயரச் செய்ததுவும்,
கூரறிவும் நல்உழைப்பும் கூடி உதவி வர
நேரியதோர் பாதையிலே நிதம் நடந்து சென்றதுவும்,
இல்லையெனக் கையேந்தி எவர்வந்து நின்றாலும்
இல்லையெனச் சொல்லாமல் இரங்கி அளித்ததுவும்,
செட்டாக வாழ்ந்தாலும் தெய்வத் திருப்பணிக்குத்
தட்டாமல் தயங்காமல் தந்து மகிழ்ந்ததுவும்,
விண்முட்டும், கோபுரங்கள் விளங்குகிற ஆலயங்கள்
எண்ணற்ற அமைத்திங்கே எழில்பரப்பி நின்றதுவும்
அன்னமிடச் சத்திரங்கள் ஆயிரமாய் உண்டாக்கி
இன்னற் பசியதனை எங்கோ விரட்டியதும்
கல்வி ஒளிபெருகக் காசுபணம் கோடியென
அள்ளி அளித்துளத்தில் ஆனந்தம் கொண்டதுவும்
செட்டிமக்கள் தம்குலத்தின் சிறப்புக்குச் சான்றாகும்!
எட்டுக்கண் விட்டெரிக்க இருந்த நிலையுணர்த்தும்!
பெண்ணினத்தை மாநிலத்தில் பெரிதாய் உயர்த்திவைத்த
கண்ணகியைப் பெற்றெடுத்த கவினார்ந்த நற்குலமாம்!

காதற்ற ஊசியதும் கடைவிழிக்கு வாராத
சேதியினை உணர்வித்த சிறப்புமிகு பட்டினத்தார்
வந்து பிறந்தகுலம்! வண்டமிழை இங்குயர்த்தச்
சிந்தனையின் தேரோட்டித் தினம் வென்றவீரர்குலம்!
பூவுலகம் மனதாரப் போற்றுகிற அக்குலத்தில் ஆவிச்சி
பெற்றெடுத்த அருமைத் திருமகனாய்
வையத்தை வாழ்விக்க வந்தவரே நம்முடைய
மெய்யப்பர் எனச்சொன்னால் மிகையேதும் அதிலில்லை!

(வேறு)

கலைத்துறை யதனில் நிலைபெறு பெரும்புகழ்
உலகினில் எய்தி உயர்ந்தவர் பற்பலர்!
'ஏவியெம்' போல இப்புவி யதனில்
மேவிய புகழுடன் மிளிர்ந்தவர் உண்டா?
நாடெலாம் விழைந்து நயமுடன் போற்றும்
ஈடிலாப் பெருமையை 'ஏவியெம்' பெற்றார்!
திரைப்படத் துறையைத் தென்திசை யிதனில்
உருப்படி ஆக்கிய உத்தமர் 'ஏவியெம்'
ஏவியெம் எனப்படும் எழுத்துகள் மூன்றும்
தூவிய கலைமணம் சொல்லவா முடியும்?
ஏவியெம் படமெனில் இந்நா னிலத்தோர்
தாவியே ஓடித் தரிசனம் காணுவர்!
அத்தனை சிறப்பும் அமைந்திடும் அற்புதச்
சித்திரமாகத் திகழும் அவர் படம்!
கதையா? இயக்கமா? கனிச்சுவைப் பாடலா?
எதையான் சொல்லுவேன்? எல்லாம் முதல் தரம்!
சிறுகுறை ஒன்று தென்பட் டாலும்
மறுமுறை படத்தை மயங்கா தெடுப்பார்!

அணுஅணு வாக ஆராய்ந் தறிந்து
துணிவுடன் எதனையும் தொடங்கி முடிப்பார்!
ஏமா றாதவர்! எவரையும் தொழிலில்
ஏமாற் றாதவர்! இனிய பண்பினர்!
எடுத்த காரியம் எப்படி யாயினும்
முடிக்கும் திறனும் முனைப்பும் மிக்கவர்!
ஆயினும் பணத்தை அள்ளுதற் காக
ஞாயமி லாவழி நடந்திட மாட்டார்.
நேர்மைத் தடத்தில் நிதமும் நடக்கும்
ஆர்வம் மிகுந்தவர்! அன்பு நிறைந்தவர்!
புனிதம் நிறைந்த புண்ணியத் தொழிலாய்ச்
சினிமா அதனைச் செய்ய நினைத்தவர்!
பேசிய பணத்தைப் பின்வாங் காமல்
நேசம் நிறைந்த நெஞ்சுடன் தருபவர்!
எவரா னாலும் இவரது படத்தில்
உவப்புடன் நடிக்கும் உயர்மதிப் புள்ளவர்!
பைந்தமிழ்த் திரையில் பலபுது முகங்கள்
வந்தொளி வீச வாய்ப்பினைத் தந்தவர்!
தேனில் குழைத்த தீந்தமிழ் இசையால்
நானிலம் நனைத்த நல்மகா லிங்கமும்
வாழ்க்கையில் யாரும் வளம்பெறச் செய்யும்
ஆக்கப் பணிகள் ஆற்றும்வை ஜயந்தியும்
உளத்திலே நிலைக்கும் ஓவியம் படைக்கக்
களத்திலே வந்த கமல ஹாசனும்
இன்னும் பலரும் இவர்பட் டறையில்
உன்னத மாக உருவா னவர்கள்!
தீட்டத் தீட்டத் திகழ்ந்து பேரொளி

காட்டும் வைரக் கற்களா னவர்கள்!
நந்த குமாரும் நாமிரு வரும், பின்
வந்த வள்ளியும், வாழ்க்கையும், பெண்ணும்,
குழந்தையும் தெய்வமும் குறையிலா அன்னையும்,
வழுவெதும் இல்லா உயர்ந்த மனிதனும்,
ஈடிலாப் புகழை ஏவி.யெம் மிற்குத்
தேடிக் கொடுத்த திரைக்கா வியங்கள்!
இந்திய மண்ணில் இராம ராஜ்ஜியம்
வந்திட உழைப்பை வழங்கிய காந்தி
கண்டு மகிழ்ந்த கவின்மிகு திரைப்படம்
எண்டிசை போற்றும் இராம ராஜ்ஜியம்!
இந்தப் படத்தை எழிலுறத் தமிழில்
தந்திடும் ஆசை தழைத்தகா ரணத்தால்
முயன்று முயன்று மொழியினை மாற்றி
நயம்பட நமக்கு நல்கினார் ஏவியெம்.
மொழிமாற் றத்தை முதன்முதல் இங்கே
எழிலுறச் செய்தவர் ஏவியெம் தானே!
படமெடுத் தாடும் பாம்பு மனிதரைப்
படமெடுத் தொடுக்கப் பாய்ந்தவர் ஏவியெம்.
கறும்பண முதலைகள் காணா தொழியத்
திறம்படு சொற்களால் தீரம் விளைத்தவர்!
"கறுப்பிலே கறுப்பா" காசினி யோரெலாம்
சிறந்தநா மிருவரில் செவிமடுத் திட்டசொல்!
மாட்சியுள் ளவராய் மனிதரை மாற்றும்
காட்சிகள் ஆயிரம் காட்டுவார் திரையில்!
தனியொரு முத்திரை தரணியில் பதித்தே
இனிதுற உலாவரும் இவர்படம் அனைத்தும்!

பாரதி பாடலைப் பட்டிதொட் டிகளில்
சீருற முழங்கச் செய்தவர் ஏவியெம்!
அறவழி தவறா தடைந்த பொருளை
அறமது பெருக அளித்தவர் ஏவியெம்!
அறக்கட் டளைகள் அமைத்துக் கொடுத்துப்
புறமத் தனையும் பொலியச் செய்தவர்!
இருமனம் ஒன்றி இனிதுற வாழத்
திருமணம் புரியச் சிறந்தஇம் மண்டபம்!
அந்தமில் புகழை அளிக்கும் வகையில்
தந்தையின் நாமம் தாங்கிய வண்ணம்
சின்னஞ் சிறுவரைத் தேசத் தலைவராய்
மின்னிடத் தூண்டும் மேல்நிலைப் பள்ளி!
சிறுவர் இலக்கியம் தேர்வுசெய் தரிய
பரிசினை வழங்கப் பாங்குறு தனிநிதி!
'படிக்கிறேன்' என்று பணம் எவர் கேட்கினும்
'கொடுக்கிறேன்' என்று கொடுக்கும் கொடைக்குணம்!
அனைத்தினும் மேலாய் அருங்கவி பாரதி
புனைந்த கவியெலாம் பொதுவிற் களித்தமை!
பெரும்பணம் தந்து பெற்ற உரிமையைத்
தருவதற் கொருசிறு தயக்கமில் லாமை!
இவைகள் எல்லாம் ஏவியெம் நற்புகழ்
குவித்திட அவர்க்குக் கூட்டுறவு வாயின!
காரைக் குடியெனும் கவினுடைப் பதியின்
சீரைப் பெரிதாய்ச் செய்வதற்கென்று
வந்து தோன்றிய வணிக மகன் அவர்!
இந்தியர் தமக்கெலாம் ஏற்றம் அளித்தவர்!
தெய்வத் திருவடி சிந்தையில் தாங்கி

மெய்வழி நடந்தவர் மெய்யப்ப ராவார்!
அவர்க்கரும் துணையாய் அமைந்தரா ஜேஸ்வரி
கவனமாய் அவர்வழி கருதி நடக்கிறார்!
துணைவர் தொடங்கிய தூய பணிகள்
நனிதிகழ்ந் தோங்க நாளும் உழைக்கிறார்!
தந்தையைப் போலவே தவப்புத் திரர்களும்
எந்தப் பணியையும் எழிலுடன் செய்கிறார்.
பிறந்த செல்வரைப் பெரிய வராகச்
சிறந்திடச் செய்த நற் செம்மல்மெய் யப்பர்!
ஆயிரங் காலம் அவர் பெயர் உலகில்
தேய்வெதும் இன்றிச் சிறப்புடன் ஓங்கக்
குன்றமர் வேலன் குறையா தருள்வான்
என்று நான் வாழ்த்தி இதயம் மகிழ்கிறேன்.



# நாடகக் கலைத் திலகம்
# அவ்வை சண்முகம்

ஓராறு முகமென்னும் பெயர்கொண் டாரை
ஒப்பில்லா நாடகத்தால் இசைகொண் டாரை
சீரார்ந்த இயல்வளர்க்கும் செழுமை யாரை
திருவளர்த்த சங்கரதாஸ் ஸ்வாமி யாரைத்
தேரூர்ந்த தெய்வமென வணங்கு வாரைத்
தேடிவந்து வான்புகழும் சேர்ந்தி டாதோ?
பாரூர்ந்து வாராதோ ஷண்மு கத்தைப்
பாராட்டிப் போற்றி மிகப் பாடுதற்கே?

கண்ணுக்குத் தெரியாத கடவுள் சிந்தும்
கருணையிலே உருவாகி மெள்ள இந்த
மண்ணுக்கு வந்துயர்ந்த மனித னாக
வாழ்கின்ற டிகேஎஸ் மணிவி ழாவை
எண்ணுக்குள் அடங்காத இதயக் கூட்டம்
இன்பமுடன் கொண்டாடும் இதனைக் கண்டால்
விண்ணுக்குச் சென்றுபடர் புகழின் அந்த
விரிவதுவும் செறிவதுவும் விளங்கும் தானே?

நொடிக்குமினிப் பிழைப்பத ரிதாமாம் கெட்ட
நோய்ப்பட்ட தென்றஞ்சிப் பிறர்விட் டோடும்
நடிக்குமருங் கலையெனக்கோ உயிரின் நாடி!
நாடகத்தை வளர்த்திடுவேன் மேடை ஏறி!
துடிக்குமிள நெஞ்சத்தின் துணிவி னோடே
தூயதமிழ் ஆர்வத்தின் துணையி னோடே
எடுத்த செயல் முடிப்பேன்என்(று) இயங்கு கின்ற
இனியவரை மிகமகிழ்ந்து புகழார் யாரோ?

பழுங்காலம் ஒன்றுண்டு! நாடகத்தைப்

பலதடவை சலியாமல் பார்த்து விட்டு

எழுங்காலம் நன்றியொரு சிறிது மின்றி

ஏளனமாய்க் கூத்தாடி என்று நெஞ்சம்

புழுங்காமல் புழுங்குமொரு காலம்; அந்த

பொல்லாத காலம் போய்க் கலையைப் போற்றித்

தொழுங்காலம் வரவைத்த ஷண்மு கத்தைத்

தொட்டுவளர் பெரும்புகழை தொடுமா வானம்?

வேர்பாய்ந்த சமுதாயக் கொடுமை என்னும்

வேண்டாத பெருமரத்தை வெட்டி வீழ்த்த

கூர்பாய்ந்த நாடகமாம் வாள் எடுத்துக்

குறிவைத்துச் சுழற்றிடுவார் மேடை மீது!

நீர்பாய்ந்து வருகின்ற ஆறு போலே

நெஞ்சத்தில் கவிபாயும் ஔவை யாரை

ஆராய்ந்த பார்வையிலே பார்த்த வண்ணம்

அருள்புரிவார் நாமெலாம் காணு மாறே!

கூத்துவரும் சிலருக்கு; கற்ற நெஞ்சம்

குழைந்துருகச் செய்யும் இயல் தமிழ்தான் நேரம்

பார்த்து வரும் சிலருக்கு; குயிலோ என்னப்

பாட்டு வரும் சிலருக்கு; இந்த மூன்றும்

சேர்த்து வரும் இலருக்கு! நாமெல் லோரும்

சேர்ந்து தரும் பாராட்டுப் பெரிதா என்ன?

பூத்துவரும் மலர்மகிமை மணமே பேசும்!

புகழொன்றே மனிதனவன் பெருமை பேசும்!

இனியார்வம் யார்க்குவரும் மேடை கட்டி
இவனைப்போல் கூத்தினுக்கோர் ஏற்றம் தேட?
குனியாத மனிதனிவன் நீண்ட நேரம்
குனிந்தபடி நடந்தானே ஔவைக் காக!
தனியார்வம் இதுவன்றோ என்று கூடித்
தமிழகமே புகழ்கமலத் திருவினானை
நினையாத பரமசுக நிலைக் குள்ளாக்க
நெடுமாலின் மருமகன்நின் றருள்வா னாக!

வரத்தக்க ஒருபதவி வந்த தற்கு,
வாழ்வெல்லாம் கலைத் தொண்டு செய்த தாலே,
சிரத்துக்கு மேல்கையை குவித்து நல்ல
சீடனென வாழ்கின்ற தன்மை யாலே,
தரத்தக்க நாடகத்துச் சுவையை யெல்லாம்
தமிழ் குழைத்து நமக்கெல்லாம் தந்ததாலே
பெறத்தக்க பெருமையினை பெற்ற தற்குப்
பெருங்கூட்டம் பாராட்டு பாடல் எல்லாம்!

அருந்தியது தெவிட்டாத அமுதோ என்ன
அனைத்துளமும் மகிழ்ந் தேத்த நாடகத்து
விருந்தியற்றி வருபவர்நம் அரசாங் கத்து
மேல்சபையார் ஆனதிலே மிக மகிழ்ந்தோம்!
திருந்தியது திருத்துகின்ற கலைஞர் தம்மை
சிந்தையொரு கோயிலெனச் செய்து, ஆங்கே
பொருந்திய ஷண் முகத்தரசைத் தேடி வந்து
பொருந்து புகழ் கண்டுமிகப் பூரித் தோமே!

செந்தமிழின் உயிராகச் சிலம்பி சைக்கும்
சிவஞானப் பிசிராந்தை வாய்தி றந்து
சிந்துவதே முத்தென்று நெஞ்சில் ஏந்தும்
ஷண்முககோப் பெருஞ்சோழன் மேடை ஏறி
முந்துவது, நாடகமாம் கலையை, என்றும்
முடமாகிப் போகாமல் முயன்று காத்துத்
தந்திடவே எனுமுண்மை தனை யுணர்ந்து
தாரணியே தாரணிவித் தின்பம் கொள்ளும்!

நிலையென்ன வந்தாலும் "ஐயா"வோடு
நிழலாகத் தொடர்கின்ற இவரை இந்த
உலகென்ன, வானகமே போற்றும் நட்பின்
உறுதியினை மிகவியந்து வாழ்த்துப் பாடும்!
கலைமன்னன் தன்னுடைய தொழில்தி றத்தால்
கவராத நெஞ்சையெலாம் கவர்வான்; வாழ்வில்
அலையென்ன வருந்துயரை மாற்றி, இன்ப
அமுதத்தைக் குடங்குடமாய் அருள்வான் வாழி!

மூன்று தமிழ் வளர்க்கின்றான் வீரம் பொங்க
முரசறைந்து தழைக்கின்றான்; பழங்கா லத்தின்
கூன் முதுகை நிமிர்க்கின்றான்; வள்ளு வத்தின்
குரலதனை மதிக்கின்றான்; வண்டு கட்குத்
தேன் மலராய் இருக்கின்றான்; சிவ ஞானத்தின்
செழுமையையே நினைக்கின்றான்; சீட னாகி
தான்தொடர்ந்து நடக்கின்றான்; புகழ் படைத்த
தாமரையின் திருவானான் நீடு வாழி!



# நல்ல சேனாபதிச் சர்க்கரை மன்றாடியார்

காடுகள் வெட்டிக் கடுநிலம் திருத்தி
பாடுகள் பட்டுப் பயன்பல விளைக்கும்
கொள்கையர் வாழும் கொங்கு நன்னாட்டில்
உள்ளம் நிறைந்த உயரன் பினராய்
நாடுவோர்க் குதவும் நற்பண் பினராய்,
நீடுநற் புகழில் நிலைபெற் றவராய்,
ஊழையும் வெல்லும் உறுதிகொண் டோராய்,
நாளும் விளங்கிய நல்ல சேனாபதி
சர்க்கரை மன்றா டியாரெனும் தகைமை
மிக்கவர் பெருமையை விளம்புதல் எளிதா!
பழகுதற் கினியவர்! பண்பில் சிறந்தவர்!
இளகிய மனத்தினர்! எளிமை விழைபவர்!
சிரித்த முகத்தினர்! சீரிய செய்கையர்!
குறிக்கோ ளுடையவர்! கோப மில்லாதவர்!
மேனியில் கதரை விரும்பி அணிபவர்!
ஞானி களிடத்தே நாட்டம் உடையவர்!
அன்புடன் நல்விருந் தளித்து மகிழ்பவர்!
தென்புடன் யாரையும் செயல்பட வைப்பவர்!
கொங்குநல் வேளிர் குலத்துக் கிவரால்
தங்கிய பெருமை சார்ந்ததிவ் வுலகில்
ஆநிரை உடைய அழகிய தேசமாய்
மாநில மெங்கும் மகிழ்வுடன் புகழும்
அந்த நற்புகழுக்கு அடி கோலியவர்!

இந்தநல் லாரை எவரும் ஒப்புவர்!
ஓமெனப் புகன்று ஒவ்வொரு கணத்திலும்
சாமுண்டி தேவியின் தாள்தொழு திருப்பவர்!
செந்தமிழ் நாட்டுச் சீரிய அரசில்
முந்தியோர் சிறந்த மந்திரி ஆனவர்!
குணத்தில் உயர்ந்த குலக்கொடி வாழ்க்கைத்
துணையெனக் கொண்டு துய்த்தவர் வாழ்க!
அவர் திருநாமம் ஆயிரம் காலம்
புவனம் தன்னில் பொலிவுடன் வாழ்கவே!

****

# நீதியரசர் என்.சோமசுந்தரம்

உலகிலோர் தேசம் ஓங்கியெந் நாளும்
நிலவுதற் கங்கு நீதியின் அடித்தளம்
அசையா வகையில் அமைந்திட வேண்டும்!
வசைவரா முறையில் வழங்கிட வேண்டும்!
சட்டமும் தன்மனச் சாட்சியும் இடுகிற
கட்டளை முற்றிலும் கருதிப் பார்த்தபின்
ஆண்டவன் பேரால் அறத்தின் வழியில்
ஈண்டுநன் நீதி இயம்பப் படுமேல்
ஈடெதும் இன்றி இந்திய நாடு
பீடுற விளங்கிப் பெரும்புகழ் விரிக்கும்!
எங்கே நீதிக்கு இடமென்ப தில்லையோ
அங்கே வளரும் அரக்கரின் கூட்டம்!
இனியவை எல்லாம் எங்கோ மறைய
மனிதரின் வாழ்வு மண்ணுள் புதையும்!
வன்முறை பெருகும்! வம்புகள் நிறையும்!
பன்னரும் துயரின் படையது விரையும்!
நிம்மதி என்பது நெடுந்தொலை வேகும்!
சிம்ம சொப்பனம் தினம் தினம் நேரும்!
எப்படிக் காற்று எவர்க்கும் தேவையோ
அப்படி நீதி யார்க்கும் அவசியம்!
அத்தகு நீதியை அவனி தனிலே
நித்தமும் நிறுத்திய நேரிய மாந்தருள்
சோம சுந்தரத் தூயர் சிறந்தவர்!
தீமைகட் கெல்லாம் தீயெனத் திகழ்ந்தவர்!

உற்ற இடம்விட் டொருபோ திலுமே
சற்றும் நீதித் தராசின் முள்ளது
விலகிடா வண்ணம் வியத்தகு விதமாய்
உலகில் ஏந்திய உத்தமர் அவராம்!
ஓவிய மாக ஒருநூற் றாண்டுமுன்
பூமிக்கு வந்த புண்ணிய மூர்த்தி!
பிள்ளையார்த் தங்கல் பெருமைப் படும்படி
பிள்ளையாய் அங்கே பிறந்தபே ராளர்!
சீர்மையை எந்தத் திசையிலும் சேர்க்கக்
கார்குலம் தந்த கவினுயர் செம்மல்!
சிவகாம சுந்தரி திரு-நாக பூஷணம்
தவத்தின் பயனாய்த் தலைமக னானவர்!
கல்வியே தனக்குக் கண்ணெனக் கருதிச்
சொல்லரும் முயற்சியால் தொடர்ந்து படித்தவர்!
பிறருக் குதவும் பெருநோக் கத்தில்
விருப்புடன் சட்டம் வேண்டிப் பயின்றவர்!
படித்தபின் வீட்டில் படுத்திருக் காமல்
துடிப்புடன் சட்டத் துறையில் நுழைந்தவர்!
மன்றிலே ஏறி வழக்கினை உரைக்கும்
தொண்டினைத் தனது தொழிலாய்க் கொண்டு
வார்த்தைப் படையை வாகாய் அனுப்பிப்
போர்த்திற னோடு பொருதிய வீரர்!
எண்ணிலா வழக்குகள் எளிதிலே வென்ற
திண்ணிய ராகத் திகழ்ந்த பேரறிஞர்!
ஓங்கிய சென்னை உயர்நீதி மன்றில்
பாங்கினை விரித்த பண்புயர் நல்லார்!

இளையவர் இவர்திறன் எண்ணிய மூத்த
வழக்கறி ஞர்பலர் 'வா' எனக் கூறினர்!
நிகரிலாப் பெரியவர் நியூஜண்ட் கிராண்ட்,
புகலரும் புகழுடன் பொலிந்த எதிராஜ்,
என்பவ ருடனே இணைந்து தொண் டாற்றித்
தன்பெய ருக்கொரு தனிஇடம் கண்டவர்!
பிள்ளையார்த் தங்கலில் பிறந்தஇப் பெரியார்
பிள்ளையார் உடைப்பில் பெரியாரை மீட்டவர்!
என்னுயிர்க் கணவர் இவரின் ஜூனியர்!
அன்னையின் அன்பை அவரிடம் கண்டவர்!
திரண்ட அன்பிலே திளைத்தன எங்கள்
இரண்டு குடும்பமும் எனில் அது நிசமே!
பெ ரியவள் எனக்குப் பிறந்த சேதியை
உரிமையோ டென்றன் துணைவர் உரைக்க,
என்னநட் சத்திரம் என்றவர் கேட்டார்.
உத்திரட் டாதியென் றுரைத்தார் என்னவர்!
அதற்குச் சோம சுந்தரர் சொன்னார்
"உத்திரட் டாதி ஊரோரம் தோட்டம்
மெத்த நலங்கள் மேவிடச் செய்யும்"
சொன்ன அவரின் சொற்கள் பலித்தன!
என்மகள் இந்நாள் எழிலுறத் திகழ்கிறாள்!
நாமம் தனிப்பட நாட்டில் பொறித்த
ஓமந் தூரார் உத்தமர் இவரின்
நேர்மையும் வழக்கினை நிகழ்த்தும் ஆற்றலும்
சீர்மையும் நெஞ்சத் திண்மையும் கருதி
உயர்நீதி மன்றில் ஒருநீதி அரசராய்

நயமுடன் அமர்த்த நல்லுரை பகன்றார்!
பன்னிரண் டாண்டுகள் நன்னய மாக
நீதி அரசராய் நேர்த்தி படைத்த
சாதனை யாளர். என்.சோம சுந்தரர்!
நீதியைத் தாங்கிடும் நெஞ்சுளே அந்தச்
சோதி இறையையும் துலங்கிடத் தாங்கினார்!
சிவந்த மேனிச் சிவபிரான் தன்னை
உவந்தவா றென்றும் உருகித் தொழுதார்!
இமயமே ஒருகால் இடம்பெயர்ந் தாலும்
தமது கொள்கையில் சற்றும் தளரார்!
மனித நேயம் மனத்துள் நிறைந்த
புனிதர் சோம சுந்தரப் புண்ணியர்!
அவர்நூற் றாண்டின் அரிய திருவிழா!
புவனமே மகிழும் பொற்புயர் பெருவிழா!
ஈசன் அருளால் இனியவர் அவரின்
வாசத் திருப்பெயர் வாழ்கபல் லாண்டே!



# செண்டெக்ஸ் நாச்சிமுத்து

ஆண்டவன் உருவில் பாதியென
அம்பிகை பங்கு பெறுகின்றாள்!
ஈண்டு மனிதர் வடிவழகில்
இருப்பது பாதி ஆடைகளே!

ஆடை மானம் காக்கின்ற
ஆதர வாக அமைவதுடன்
ஈடே இல்லா வகையாக
எழிலை மாந்தர்க் களிக்கிறது

கண்ணுக் கினிய விதமாக,
காண்போர் மனது களிதுள்ள,
வண்ணம் பொலியும் பேரழகை
வாரி வழங்கி வருகிறது.

பாரத நாட்டுப் பெருமையினைப்
பாருக் குணர்த்தும் பலவற்றுள்
சீரிய கைத்தறி ஆடையதும்
சிறப்பாய் ஓரிடம் பெறுகிறது!

வள்ளுவர் தொட ங்கி இதுவரையில்
வாழ்வில் சிறந்த சான்றோர்கள்
உள்ளம் விழைந்த துணிநெய்யும்
உயர்ந்த தொழிலைச் செய்தார்கள்!

ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாய்
அழகழ கான ஆடைகளை
ஓயுதல் இன்றி எந்நாளும்
உலகுக் களித்து மகிழ்ந்தார்கள்!

கப்பலில் வந்து பிற நாட்டார்
கணக்கில் லாத பணம் தந்தே
ஒப்புமை இல்லா நம் துணிகள்
உவந்து வாங்கிச் செல்வார்கள்!

உழைப்பின் இமய உச்சியிலே
ஒளிரும் அணையா விளக்காகத்
தழைக்கும் நெசவுத் தொழிலிங்கே
தன்னே ரின்றி விளங்கியது!

என்றும் போல இன்றைக்கும்
இத்தொழில் இங்கே மிளிர்கிறது!
அன்றைத் திற மை மிகப் பெரிதாய்
அற்புதம் காட்டி வளர்கிறது!

சேயிழை விரும்பி அணிகின்ற
சேலைகள் எல்லாம் எழில் சிந்திக்
காயும் கனியும் மலரும் உதிர்
கற்பக வனமாய்க் காட்சி தரும்!

மல்லிகை நறுமணம் தெளித்து வரும்!
மாதுளை குறுநகை உதிர்த்து வரும்
முல்லை தனக்குத் துணையாக
மூங்கில் மரத்தை அணைத்து வரும்?

சிட்டுக் குருவி பறந்துவரும்!
தேனிசை வண்டு பொழிந்து வரும்!
பட்டுப்பூச்சி தவழ்ந்து வரும்!
பச்சைக் கிளிகள் மிதந்து வரும்!

யானைகள் நிமிர்ந்து நடந்து வரும்!
யாளிகள் சிலிர்த்து விரைந்து வரும்!
மானினம் துள்ளி மருண்டு வரும்
வானக மீன்கள் திரண்டு வரும்!

ஆடவர் அணியும் ஆடைகளில்
அருமைக் கோடி வரிசையிடும்!
கூடிய எழிலைக் கொண்டு தரும்
கொடைக்கர மாக உதவவரும்!

ஆடையில் கரைகள் இரண்டினிலும்
ஆற்றங்கரை போல் எழில் கொஞ்சும்!
கோடையின் வெம்மை தணிக்கின்ற
குளிர்மதி மெல்ல ஒளி சிந்தும்!

துண்டுகள் – தம்மைக் கண்டவரைச்
சுண்டி இழுக்க வலைபின்னும்!
திண்டுகள் உரைமேல் நல்லிரவைத்
தெரிசனம் செய்ய வரவு சொலும்!

படுக்கை விரிப்புகள் விதவிதமாய்ப்
பளபள வென்று கண்பறிக்கும்!
நடுக்கும் குளிரைத் தடுத்திடவே
நலந்திகழ் போர்வைகள் ஒளிசிறக்கும்!

வாசற் புறத்தில் தொங்கவிட
வனப்புத் திரைகள் வண்ணமிடும்!
ஆசனம் மேலே விரித்துவிட
அதிசயத் துணிகள் மின்னலிடும்!

எத்தனை எத்தனை எழிலதனை
இந்தத் துணிகள் தந்தனவோ
அத்தனை அத்தனை கிளுகிளுப்பில்
அகமும் மயங்கி மலைக்கிறது!

கைத்தறி யாலே இவ்வுலகில்
கவின்மிக ஓங்கி உயர்கிறது!
துய்த்திடும் இன்பம் அனைத்துக்கும்
துணையென வாழ்வில் தொடர்கிறது!

எண்ணம் சுமந்த கற்பனையை
இழைகளி னாலே வடிவாக்கி
வண்ணம் சுமந்த ஆடைகளாய்
இங்கோர் நிறுவனம் வளர்க்கிறது!

மெத்த நலங்கள் சேர்க்கின்ற
மே ன்மை மிக்க இத்தொழிலை
எத்தகு குறையும் இல்லாமல்
இங்கந் நிறுவனம் வளர்க்கிறது!

சின்னஞ் சிறிய அளவினிலே
சென்னி மலையில் உருவாகிப்
பென்னம் பெரிதாய் வளர்ந்துள்ள
பெருமை நிறையும் சென்டெக்ஸ்

கூட்டுற வாலே நன்மைகளைக்
கொண்டு தரலாம் எனத்தெளிவாய்க்
காட்டிய வாறு பணிபுரியும்
கச்சித மான கடமையகம்!

ஏங்கித் தவிக்கும் நிலையின்றி
ஏணிப் படிபோல் நின்றுதவி
ஓங்கும் நிலையில் கைத்தறியை
உலகில் அமர்த்தி வைக்கிறது!

எட்டுத் திசையின் நாடெல்லாம்
எனக்குனக் கென்று போட்டியிட
கட்டழ கொளிரும் ஆடைகளைக்
கப்பலின் மூலம் சேர்க்கிறது!

கண்ணியம் நிறைந்த வணிகமுறை
காலம் முழுதும் பின்பற்றி
அந்நிய நாட்டுச் செலாவணியை
அளவெதும் இன்றிப் பெறுகிறது!

மற்ற தொழில்கள் நம் நாட்டு
மண்ணில் வளர்ந்து வேரூன்ற
பெற்ற அந்தச் செலாவணியைப்
பெரிதும் கொடுத்து மகிழ்கிறது!

ஏழை களாக மடியாமல்
என்றும் கைத்தறித் தொழிலாளர்
வாழை யின் அடியில் வாழையென
வாழ வழிகள் செய்கிறது!

உழைப்புக் கேற்ற ஊதியத்தை
உவகை பொங்க அளிக்கிறது!
பிழைப்புக் கிதுவே துணையென்று
பேசும் விதமாய் இருக்கிறது!

தொழிலை மேலும் வளர்க்கின்ற
சூட்சுமம் யாதென நன்கறிந்து
முழுமூச் சுடனே செயற்பட்டு
முன்னேற் றத்தை அடைகிறது!

பழமையி னூடே புதுமையினைப்
பக்குவ மாக இழையவிடும்
அழகினை, ஆற்றல் திறமையினை
அறிய அறிய இனிக்கிறது!

கைத்தறி நெய்து வாழ்வோர்க்கும்
கலங்கரை விளக்கம் எனும் வண்ணம்
இத்தரை மீது புகழ்க்கதிரை
எங்கும் விரிப்பது சென்டெக்ஸே,

சண்டை போட்டு நாள்தோறும்
சங்கடம் தந்த பெண்கூட
சென்டெக்ஸ் என்று சொன்னவுடன்
சிந்தை மணக்க மலர்கின்றாள்!

தூங்கிக் கிடக்கும் கிழவர்களும்
துடுக்குத் தனத்துச் சிறுவர்களும்
வாங்கித் தருக சென்டெக்ஸ்
வழங்கும் துணியை என்பார்கள்!

ஒருமன மாகி வாழ்க்கையெனும்
உன்னத மாளிகைக் குள்நுழையும்
திருமண மக்கள் விரும்புவது
சென்டெக்ஸ் நிறுவனத் துணியன்றோ?

காரணம் என்ன இதற்கெல்லாம்?
கைத்தறித் தொழிலில் நேர்மையினைப்
பூரண மாக எந்நாளும்
போற்று கின்றது சென்டெக்ஸ்!

தரத்தில் உயர்ந்து நெடுநாட்கள்
தாங்கும் துணிகள் தருகின்ற
கருத்தில் முனைந்து செயலாற்றும்
கண்டிப் புடனே வளர்கிறது!

செப்புதற் கரிய சீர்மையுடன்
திகழும் நிறுவனம் சென் டெக்ஸை
ஒப்புயர் வின்றி உயர்த்தியவர்
உத்தமர் **நாச்சி முத்தன்றோ?**

நாச்சி முத்துவும் கைத்தறியும்
நல்ல தந்தையும் பிள்ளையும்போல்
காட்சி கொடுக்கும் தன்மையினைக்
காணக் காண மகிழ்ச்சி வரும்!

இந்தத் தொழிலை முன்னேற்ற
எத்தனை பாடுகள் பட்டிருப்பார்?
சொந்த நலங்கள் எவ்வளவில்
துறந்து கேடுகள் உற்றிருப்பார்?

எண்ணிப் பார்த்தால் அடங்காமல்
எங்கோ செல்லும் நில்லாது!
பண்ணிப் பார்த்தால் இயலாமல்
பணிகள் தொடரும் முடியாது!

அவரைப் போலத் தொண்டாற்றும்
ஆற்றல் யாருக் குண்டிங்கே?
எவரும் இந்த உலகத்தில்
இல்லை யென்றால் தவறில்லை!

நாச்சி முத்துவின் பெருமைகளை
நாவா அளந்து கூறிவிடும்?
மாட்சி தெரிக்கும் செயல்திறனை
வாயா மலர்ந்து பேசிவிடும்?

உழைப்புக் கிலக்கண இலக்கியமாய்
ஒளிரும் அவரிவ் வுலகத்தில்
கிழக்குத் கதிர்போல் மேலேறிக்
கீர்த்தி பெறுவதில் வியப்பேது?

எத்தனை பதவிகள் அவர் திறமை
எண்ணி அளித்தார் அரசியலார்!
அத்தனை பதவியும் அவராலே
அழகினை உற்று நிறைந்தனவாம்!

ஆள்பவர் அளிக்கும் பதவிகளில்
அமைந்த பொறுப்பை நன்குணர்ந்து
வேள்விகள் என்ற நினைவிலே
வித்தகம் ஓங்கச் செயல்படுவார்!

உண்மை விளக்கின் துணையாலே
ஒவ்வொரு செயலும் புரிவதனால்
எண்ணும் எதிலும் வெற்றிபெற
எளிதில் அவரால் முடிகிறது!

பாரத தேச அரசாங்கம்
"பத்மஸ்ரீ" எனும் பட்டத்தைச்
சீரது பெருகும் அவருடைய
செம்மை உணர்ந்து வழங்கியது!

நாச்சி முத்துவின் உயர்வதனை
நன்னக ரொன்றும் புரமொன்றும்
சாட்சி உரைத்து நிற்கின்ற
தகைமை தந்தனர் தொழிலாளர்!

கல்வித் துறையும் அவராலே
காணாப் புகழை அடைகிறது!
நல்ல வங்கித் துறையதிலும்
நாமம் விளக்கம் பெறுகிறது!

தண்டமிழ் நாட்டின் பெருமையினைத்
தாரணி முழுதும் தெரிவிக்கும்
சென்டெக் ஸாகிய நிறுவனமும்
சிறப்புடன் அவரால் விரிகிறது!

வாணிபம் இன்னும் வளர்ச்சி பெறும்
வகையில் புதிய கடைகளினைக்
காணுதல் நலமென் றிங்கின்று
கட்டிடம் கட்டித் திறக்கிறது!

பொங்கும் மகிழ்ச்சி பூரிக்கப்
புதுமா ளிகையில் வியாபாரம்
தங்கு தடைகள் இல்லாமல்
தழைத்திட நல்லோர் வாழ்த்துகிறார்!

மெத்த மகிழ்வில் நான் இங்கே
மேலும் விற்பனை செழிப்படையக்
குத்து விளக்கை ஏற்றுகிறேன்!
குமரனை எண்ணி வாழ்த்துகிறேன்!



# கார்கில் வெற்றியைப் பெற்றிடக் கொற்றவை அருளுவாள்!

உடல்போனால் தானென்ன? உயிர்போனால் தானென்ன?
ஒப்பிலாப் பார தத்தை
ஒழுங்கற்ற முறையிலே கைப்பற்ற முனைந்திடும்
உளம் கொண்ட வேற்று நாட்டான்
நடுக்குற்றே "ஐயகோ" எனக்கதறி ஓடவே
நாமவனை விரட்ட வேண்டும்;
நள்ளிரவு பனியென்று பாராமல் விழிப்புடன்
நாட்டினைக் காத்து நிற்கும்
படைவீரர் சோர்வுறா திருக்குமா றவர்க்குநாம்
பல்வகையில் உதவ வேண்டும்;
பரிவுடன் அவர்களின் குடும்பங்கள் வாழ்ந்திடப்
பணம், பொருள் வழங்க வேண்டும்!
திடமான சிந்தையும் செயற்பாட்டில் உறுதியும்
சேரநாம் நின்றி ருந்தால்
தேடியே வெற்றியாம் தேவியே நமை வந்து
சேருவாள்! மாலை யிடுவாள்!

திசையெலாம் ஞானநல் லொளிதரும் பாரதத்
திருநாட்டின் நிலையை எண்ணிச்
சீனத்தர், அமெரிக்கர், செருமானிய ருடன்பிற
தேசத்தார் ஒன்று கூடி
இசைவுடன் நல்லறம் நம்பக்கம் இருப்பதாய்
இயம்பிஆ தரவு காட்ட

எதிரியோ கொக்கரித் தில்லாத பாதையில்

ஏகுதற் கெண்ணு கின்றான்!

அசைவிலா நெஞ்சுடன் அவனைநாம் வலிவுடன்

அடித்துமே விரட்ட வேண்டும்;

ஆரவா ரித்திடும் அன்னியன் படையினை

அகற்றியே ஆக வேண்டும்;

விசையுறு பந்தெனப் போர்க்களம் செல்லும்நம்

வீரர்கள் வெல்ல வேண்டும்;

வெற்றியைப் பெற்றிடக் கொற்றவை அருளுவாள்!

வேண்டியே தொழுதி ருப்போம்



# சுகமே நிதமும் வரவாகும்

வெண்பா

பாரதத்தைக் காக்கப் பனிமலையின் மேலேறித்
தீரமுடன் போரிட்ட செம்மல்களைச் – சீரொளிர
என்றுமே அன்பாய் இதயத்தில் வீற்றிரு த்தி
நன்றிக் கடன்புரிவோம் நாம்!

கட்டளைக் கலித்துறை

புரிவோம் தினமும் புதுமைஇந் நாடு பொலிவடைந்து
பெரிதாய்ப் புகழில் பிறங்கும் வகையில்! பிறநிலத்தார்
வருதலும் போதலும் வாஞ்சையி னாலன்றி மாறுபடின்
ஒருநாளும் ஒப்பா துணர்த்துவோம் நன்றாய் உறுதியிதே!

விருத்தம்

உறுதியோ டுலகோ ரெல்லாம்
    ஒற்றுமை காத்துப் போர்க்கோர்
இறுதியைக் காணும் வண்ணம்
    ஏற்றநற் செயல்கள் ஆற்றிக்
குறுகிய குணத்தை நீக்கிக்
    கொள்கையை உயர்ந்த தாக்கி
அறிவினால் திறனால் நித்தம்
    அற்புதம் படைப்போம் வாரீர்!

அகவல்

வாரீர் எனநல் வரவுரைக் கின்றேன்
சீரிய அருஞ்செயல் செய்த நல்லோரே!
இரவெனப் பகலென எண்ணமில் லாமல்
பெரும்பனி குளிரெனப் பின்னடை யாமல்

இன்பத் துணையையும் ஈன்ற தாயையும்
அன்பு மகவையும் அரைநொடிப் போதும்
கருதிய வாறு கண்கல ங் காமல்
பொருதிய பகையைப் பொட்டெனச் சாய்க்க
நெஞ்சை நிமிர்த்தி நீள்புயம் உயர்த்தி
அஞ்சுதல் இன்றி ஆர்ப்பரித் தெழுந்து
சென்ற தீரர்காள்! சென்றுபின் பகையை
வென்ற வீரர்காள்! விழுப்புண் தாங்கி
வந்திடும் உமக்கு வட்ட உலகிலே
எந்த மனிதரும் இணையிலை! உண்மை!!
பன்னெடும் காலம் பாரில்
அன்னை பாரதம் அருளினால் வாழியே!

போற்றும் நமது பாரதத்தில்
புகலும் மதங்கள் பலவெனினும்
ஏற்ற மதமாய்ச் சர்.சீ.வி
இராமன் சொன்னார் அறிவியலை!

புனித மதத்தின் பேராலே
பொல்லாங் கதனை வளர்க்காமல்
இனிதாய் எவரும் இலங்கிடவே
இசைந்த வழியொன் றுளதிங்கே!

அன்பில் விளையும் அருளியலை
அனைவரும் தம்மதம் எனப்பற்றின்
துன்பம் தொடரா தொரு போதும்!
சுகமே நிதமும் வரவாகும்!



# இது சத்தியம்

தெய்விக நெறியினைத் திசையெலாம் பரப்பியே
திகழ்ந்திடும் நமதுயர் பாரத நாட்டினைப்
பொய்வழி பற்றியே கவர்ந்திட முனைந்திடும்
புல்லரை, வெறியரைப் புறமுது கிட்டிட
நையப் புடைத்துநம் வீரர்கள் ஓட்டியே
நாட்டினை எல்லையில் காத்துநிற் கின்றனர்!
வையக மாந்தர்கள் நியாயம்நம் பக்கமே
வாழ்கிற தென்றுரை பகர்ந்திருக் கின்றனர்!

பாரத வீரனின் ஒருதுளிக் குருதியில்
பல்லா யிரமெனத் தோன்றுமா வீரர்கள்
போரிடும் பகைவனைப் பொடியெனச் செய்குவர்!
புன்மையைக் கொய்துயர் நன்மையைக் கொணருவர்!
சீரிய பாதையில் செல்பவர் என்றுமே
சிறப்பினை எய்துவர் என்பதைக் காட்டுவர்!
சூரிய ஒளியினைப் பசுங்கொடி அகற்றுமா?
சுழற்றிடும் புயலினைச் சிறுதிரை என்செய்யும்?

தம்முயிர் பெரிதெனக் கருதிடா நிலையிலே
தாய்த்திரு நாட்டினைக் காத்திடும் பணியினில்
நம்மரும் வீரர்கள் உறுதியாய் உள்ளனர்!
நவிலுவோம் அன்புடன் வாழ்த்தினை அவர்க்கெலாம்!
நிம்மதி யோடவர் நிகழ்வினைத் தொடர்ந்திட
நிறையவே உதவிகள் அவர்க்கு நாம் செய்குவோம்!
அம்மையாம் காளியின் அருளினால் வெற்றியை
அடைகுவர் பாரதர்! ஆம்இது சாத்தியம்!



# பாரதத்தை உயர்த்தி வைப்போம்

வந்தார்க்கு வரவு சொலி அன்பு காட்டி
வாழ்விக்கும் நம்முடைய பார தத்தைச்
சொந்தமெனத் தமக்காக்க முனைந்து விட்ட
துட்டர்களைத் துடிதுடிக்கச் சுட்டு வீழ்த்தி
எந்தஒரு கணத்தினிலும் நாட்டுக் காக
இன்னுயிரைத் தருவதற்கும் தயங்கி டாத
அந்த நல்ல வீரர்களை வாழ்த்தி நிற்போம்!
அட்டியின்றி அவர்க்குதவி அளித்தி ருப்போம்!

சீறுகிற பெரும்புயலை நோக்கிச் செல்லும்
சிந்தையினைப் பாரதர்கள் கொள்ள வில்லை;
வேரறவே அழித்துவிடும் தன்மை கொண்ட
போரதனை விரும்பவில்லை; என்ற போதும்
பேரவாக் கொண்டு நம துயிராம்நாட்டைப்
பின்புறத்தில் கொள்ளையிடப் படைகொ ணர்ந்த
நேர்மையிலா அன்னியனைப் போர்க்க ளத்தில்
நேர்கொள்வோம்! நொடிப்பொழுதில் நிலத்தில் சாய்ப்போம்!

பழகுவது போற்பழகி நரியைப் போன்று
பாசாங்கு தனைக்காட்டி ஏய்ப்ப தற்கு
விழைகின்ற எதிரியவன் உண்மைத் தோற்றம்
வெளியிடையே மலையாகத் தெரியக் கண்டோம்!
பிழைபொறுப்ப தினியில்லை! வஞ்ச கத்துப்
பேய்களினைப் புவிகாக்கும் காளி தேவி
மழைக்கருணை துணைக்கொண்டு விரட்டி வெல்வோம்!
மண்ணுலகில் பாரதத்தை உயர்த்தி வைப்போம்!



# வணங்கிப் பணிந்து வாழ்த்துகின்றோம்

பாரத அன்னை பெற்றெடுத்த
பாசம் நிறைந்த புத்திரரே!
சீரும் சிறப்பும் நாட்டுக்குச்
சேர்க்கப் பிறந்த உத்தமரே!

இருவிழி திறந்து வைத்தபடி
எல்லைப் புறத்தில் காத்திருந்தீர்!
உருகும் வெள்ளிப் பனியூடே
ஓயா தென்றும் பார்த்திருந்தீர்!

உடலைப் பெரிதாய் மதிக்காமல்
உயிரைப் பொருட்டாய் நினைக்காமல்
கடமை பெரிதாய்க் கருதியநீர்
கயமைப் பகையை எதிர்த்திருந்தீர்!

அத்தான் எனவரும் மனைவியையும்
அப்பா எனவரும் மக்களையும்
எத்தரு ணத்தும் எண்ணாமல்
எதிரியைச் சாட முற்பட்டீர்!

இடர்பல வரினும் சளைக்காமல்
எதிரியைக் கண்டு மலைக்காமல்
அடிஅடி அடியென அடித்தீர்கள்!
அலறி நடுங்கிட வைத்தீர்கள்!

தீயென நீங்கள் பகைமுடிக்கச்
செல்லும் அந்த வேளையிலே
தீயவன் உங்கள் உயிர்கொண்டான்
செய்கையி னால்அவப் பெயர் கொண்டான்!

தேசம் காக்க உயிர்தந்த
செல்வர் உம்போல் வேறிந்தக்
காசினி மீதில் யாருள்ளார்?
காணக் கிடைப்பது மிகக் கடினம்!

இன்றைக் குங்கள் இன்னுயிரும்
எழிலார் உடலும் இலையெனினும்
என்றைக் கும்எம் இதயத்தில்
இருப்பீர் உண்மை உண்மையிது!

தேசம் காக்க உயிரீந்த
திருவினர் உங்கள் திருவடிக்கு
வாச மலர்கள் சூட்டுகிறோம்!
வணங்கிப் பணிந்து வாழ்த்துகிறோம்!



# சிங்கம் பேட்டை சரஸ்வதி அன்னை

தன்னிகரே இல்லா சரஸ்வதியின் பேர்படைத்தாய்!
என்னருமைத் தாயின் இளைய சகோதரியே!
தங்கமெனத் தக்கரத்ன சபாபதிக் கவுண்டருக்கு
மங்கலங்கள் சேர்க்குமொரு மகளாய்ப் பிறப்பெடுத்தாய்!
செங்கோட்டு வேலர் திருக்குடும்ப மருமகளாய்ப்
பொங்கும் எழில் விரித்துப் பூரிக்க வாழ்ந்திருந்தாய்!
அர்த்தநாரீ ஸ்வரராம் அன்புடைய நெஞ்சினரைப்
பார்த்தாவாய்ப் பெற்றுமிகப் பாசம் வளர்த்திருந்தாய்!
ஒன்றாய்க் கலந்துளத்தில் உவகை நிரம்பிவர
நன்றாக இல்லறத்தை நடத்தி மகிழ்வுற்றாய்!
பெண் மூவர், ஆண் மூவர் பெற்று வளர்த்தெடுத்தாய்!
உண்மையில் அவர்க்கெல்லாம் உயர்வாய் இடம் அமைத்தாய்!
மண்மாதா தன்னை மனதார நேசித்தாய்!
கண்ணாக நீ கருதிக் காலமெலாம் பூசித்தாய்!
உணவளிக்கும் தேவியென ஒட்டி உறவாடி நின்றாய்!
அணைத்தளிக்கும் அன்னையென அன்புருகப் பாடி நின்றாய்!
தாமதமே இல்லாமல் தன்மனத்தில் நெகிழ்ச்சியுற
பூமாதா உன்றனக்கும் பூரணமாய் அருள்பொழிந்தாள்!
தனம் நிறைந்த லட்சுமியாய், சந்தான லட்சுமியாய்,
மனம் நிறைந்த லட்சுமியாய், மாதவத்து லட்சுமியாய்,
குணம் நிறைந்த லட்சுமியாய், கூலம் நிறை லட்சுமியாய்,
உனைவிளங்க வைத்துத்தான் உளங்குளிர்ந்தாள் மண்மாதா!!
பரிவோடு நீவளர்த்த பயிர்கள் தலைதாழ்ந்து
பிரியமுடன் உன்னைப் பெரிதாய் வணங்கினவாம்!
கொட்டிலிலே கட்டிவைத்த கோமாதாபால் சொரிய
மட்டற்ற சேறாக மண்முழுதும் மாறியதாம்!

ஆடும் கதலியிலை அன்பாய் விசிறியிட,
ஓடும் புனல் வெள்ளம் உன்பாதம் தனைக்கழுவ,
தென்றல் உனைச்சற்றே தீண்டி விளையாட,
கன்றுஅும் மாவென்று கனிவோ டழைத்திருக்க,
விளையும் கரும்புனக்கு வெண்சா மரம்வீச,
குழைகின்ற சிறியநாய்கு குட்டியுனை வட்டமிட,
உற்றார் மகிழ்ச்சியுடன் உனைச் சுற்றி வாழ்ந்திருக்க,
மற்றோர் உனக்குமிகு மதிப்பளித்துப் பாராட்ட,
வாழ்ந்த உன்னை எண்ணுகையில் மனம்களிப்பில் ஆழ்கிறது!
ஆழ்ந்த உன்றன் அன்புலகில் ஆறெனவே சூழ்கிறது!
நித்தமுமே நல்லவற்றை நினைக்கின்ற என்தாயே!
இத்தரணி போற்றிசெய்ய என்றென்றும் நீ வாழ்க!



# செவாலியர் திரு.தியாகராஜா பிஞ்ஞேயிரா வாழ்க!

மண்ணுலகில் வாழ்கின்ற மானுடர்கள் எல்லாரும்
திண்ணமுடன் இன்பத்தில் திளைக்கும் விதமாக
அன்பொளியைப் பரவவிடும் அருமைமிகு கிறித்தவத்தை
என்ன மொழியாலே ஏற்றிப் புகழுவதோ?
"முகத்தில் ஒரு கன்னத்தில் மோதுகையில் கோபமின்றி
அகத்தில் மகிழ்ச்சியுடன் அடுத்ததையும் காட்டென்று"
சொல்லிக் கொடுத்துத் தொல்லுலக மக்களிடம்
எல்லையிலா அன்பதனை இலங்கவைத்த கிறித்துமதம்!
நாசம் தவிர்த்துலகில் நன்மை குவிக்கவந்த
ஏசுபிரான் பேராலே இருக்கும் சிறந்தமதம்!
ஏசுவுக்கு மாணவராய் இருந்தவர்கள் பன்னிருவர்
நேசமுடன் வேதமொழி நிதமுரைத்து நின்றார்கள்!
ஊருராய்ச் சென்றிந்த உலகத்தில் எப்புறமும்
சீரியநற் போதனைகள் திருத்தமுறச் செய்தார்கள்!
குருவுடைய மாண்பதனைக் கொண்டவரே மாணவரென்(று)
உரைப்பதற்குத் தக்கவராய் ஒருசீடர் 'பீட்டர்' என்பார்
பொலிவுமிகு ரோமா புரியதனில் வட்டிகனில்
நலமருளும் போப்பாண் டவராக முதன்முதலில்
வீற்றிருந்து கத்தோலிக் கிறித்தவத்தை விளங்கவைத்துப்
போற்றிப் பிறர்வணங்கும் புனிதர்எனத் திகழ்ந்தார்!
அருமையுள பீட்டரவர் அடிச்சுவட்டில் நடந்துவரும்
இரண்டாம்ஜான் பால் இந்நாள் இருந்தருளும் போப்பாவார்!
காசினியில் வாழ்கின்ற கத்தோலிக் கிறித்தவர்கள்
ஈசனுக்குச் சமமாக எண்ணுகின்ற பேராளர்!

தன்னிகரே இல்லாத தவக்கோலம் பூண்டபடி
புன்னகையால் அன்புநதி பூதலத்தில் பாய்ச்சுபவர்!
அன்பின் திருவடிவாய் அவதரித்து மேதினியில்
இன்ப நறுமணத்தை எங்கும் பரப்புபவர்!
பூதலமே நல்லன்பின் பூந்தோட்டம் போலிலங்கச்
சாதனைகள் கோடிசெயும் சால்புடைய தவமுனிவர்!
நல்லவற்றைக் காண்கையிலே நனிமகிழ்ந்து வாழ்த்ததனைச்
சொல்வதற்குத் தயங்காத தூயநல் மனத்தழகர்!
எவரெவர் நற்செயல்கள் எங்குசெய்யக் கண்டாலும்
அவரைமிகப் பாராட்டும் அன்புடைய சிந்தையுளார்!
அத்தகைய மாட்சியுள அரும்போப்பாண் டவர்இன்று
சித்தம் மகிழ, திரு தியாகராஜ பிஞ்ஞேயிரக்கு
'செவாலியர்' என்னுமொரு சிறப்புயரும் நற்பட்டம்
உவகையுடன் தந்ததன்றி உயர் "கிரகோ ரியன் மரபு
வீரத் திருமகன்" என விளங்கும் விருதினையும்
ஆர்வமுடன் தந்திருக்கும் அருளதனை என்னென்பேன்!
போப்பாண் டவர்மூலம் புகழ்மிகுந்த விருதுகளை
ஏற்பதெனில் யாருக்கும் எளிதாய தொன்றில்லை!
விருதாவாய்க் கொடுக்குமொரு விருதில்லை அது, தகுதி
கருதாமல் கடனுக்குக் காட்டும் மதிப்பில்லை!
உரைகல்லில் தங்கத்தை உரைத்துரைத்துப் பார்ப்பதுபோல்
விருதளிக்கும் முன்பாக விருததனைப் பெறுபவரின்
தகுதியினைச் சீர்தூக்கித் தக்கபடி ஆராய்ந்து
மிகமிகவும் யோசித்து வழங்குகின்ற விருதிவைகள்!
நாட்டின் மதகுருமார் நல்தியாக ராஜருக்குச்
சூட்டிடலாம் விருதென்று சொன்னதன்பின் போப்பவர்கள்
தருகின்ற பட்டம் இது! தருமம் தழைத்துயரப்
புரிகின்ற பணிகருதிப் போற்றுகிற பட்டமிது!

கத்தோலிக் மாளிகையின் கலைஒளிரும் தூணாக
இத்தரையோர் கருதுகிற எழில்மிக்க பட்டமிது!
சாதி சமயச் சழக்குகளை விட்டொழித்த
பேதமற்ற மனமுடைய பெரியவர்க்கே தரும்பட்டம்!
எந்நாட்டா ரானாலும் எம்மொழியோ ரானாலும்
தன்னலமே இல்லாமல் தாழ்ந்தவரை உயர்த்திவிடப்
பாடுபடும் நல்லவர்க்கே பரிந்தளிக்கும் பட்டமிது!
கருணை உளத்தினொடும் காரியத்தில் உறுதியொடும்
திரு.தியாக ராஜரவர் திகழ்வதனால் பெறும்பட்டம்!
'என்ன செய்தார் தியாகராஜர்?' எனக்கேட்கும் அன்பரிடம்
'என்ன செய்ய வில்லை அவர்?' எனக்கேட்டால் மிகப்பொருத்தம்
தென்பாண்டித் தமிழ்நாட்டின் திருப்புதல்வர் தியாகராஜ
பிஞ்ஞேயிர என்பதிலே பெருமை மிக அதிகம்!
அன்னைத் தமிழ்முதலில் அச்சேறி வலம்வந்த
புன்னைக் காயல்என்ற சின்னக் கிராமத்தில்
பணமில்லா ஓர்ஏழைப் பாட்டாளிக் குடும்பத்தில்
குணமுயர்ந்த தியாகராஜர் குழந்தைஎனப் பிறந்தார்!
ஊக்கமுடன் எப்போதும் உழைத்திருந்த காரணத்தால்
தேக்கமிலா முன்னேற்றம் தெண்டனிட்டு வந்தடையப்
பீடுயர வாழ்கின்ற பெரியவராய், எந்நாளும்
நாடு புகழ்கின்ற நல்லவராய் அவரிருந்தார்!
தொழில்துறைமுன் னோடியெனச் சொல்லும் படிக்கிங்கே
செழிக்கத் தொழில்வளர்த்துச் சிறப்பை அவரடைந்தார்!
நெல்லரைக்கும் யந்திரத்தால் நிறையப் பணம்கொழித்த
வல்லவராய் இங்கிலங்கி வாரிப் புகழ்கொணர்ந்தார்!
ஆலயங்கள் கட்டுவதும் அறநிலையம் அமைப்பதுவும்
சீலமிகு கல்வியினைத் தினம்வழங்கச் செய்வதுவும்
தலையாய தம்முடைய பணிகள்என நிதம்கருதி

உலைவின்றி உழைத்திட்ட உயர்மனிதர் தியாகராஜர்!
ஆற்றல்உள மாணவரை அன்புடனே ஆதரித்த
மேற்படிப்புக் கென்றுபணம் மெத்த வழங்குபவர்!
எச்சாதி ஆனாலும் ஏழையெனில் தட்டாமல்
நிச்சயமாய் உதவுகிற நெஞ்சத்தைத் தாங்குபவர்!
பொற்புடைய நற்செயல்கள் புவியதனில் எத்தினமும்
அற்புதமாய் ஆற்றுகிற அருங்கருணை மறவரிவர்!
தான்பிறந்த மண்ணதனில் தண்ணீர் வழங்குதற்கு
வான்மழைபோல் செல்வத்தை வழங்கிநின்ற கொடையரசர்!
ஏழ்மையினால் திருமணங்கள் இல்லா எளியவர்க்கு
வாழ்வளிக்கத் தம்செலவில் மணவிழாக்கள் நிகழ்த்துபவர்!
பண்புயர எப்பொழுதும் பாடுபட்டுக் கொண்டிருக்கும்
எண்பதே வயதான இளைஞர் இவராவார்!
சென்னைதனை முன்னாளில் ஷெரீபாய்க் காத்திருந்த
அன்பர் திரு. ரெக்சின் அருமையுள தந்தையிவர்!
தன்மகனைச் சான்றோனாய் தாரணிக்குத் தந்துவிட்ட
அன்புடைய தந்தை திரு. தியாகராஜர்! ஐயமில்லை!
செவாலியர் தியாகராஜ பிஞ்ஞேயிர சிறப்போடு
புவனமிதில் நெடுங்காலம் பூரித்து வாழ்வதற்கும்
செல்வமகன் திரு.ரெக்சும் சேர்ந்திருக்கும் குடும்பமதும்
பல்வளங்கள் எய்திப் பாரிதனில் வாழ்வதற்கும்
இறைவன் திருவருளும் ஏசு பிரானருளும்
நிறையும் எனச்சொல்லி நெஞ்சார வாழ்த்துவனே!



# டாக்டர். பாலகோபால ராஜு நாமம் நிலைத்து வாழியவே!

மலரும் சிறுவர் சிறுமியர்கள்
மண்மீ தென்றும் மகிழ்ச்சியொடு
நலவாழ் வெய்தி நன்றாக
நாளும் திகழும் படியாக
உலைவில் லாமல் எப்பொழுதும்
உழைத்துச் சிறந்த பேராளர்
உலகில் பால கோபால
ராஜு வென்னும் உயர்மனிதர்!

எழும்பூ ரதனில் இயங்கிநிதம்
எவர்க்கும் உதவி புரிகின்ற
குழந்தை மருத்துவ மனைஓங்கிக்
குவலயம் தன்னில் விளங்கிடவே
விழைவோ டிவரை அரசாங்கம்
மேலாம் இயக்குநர் பதவியிலே
அழகுற முதன்முதல் அமர்த்தியது!
அகிலம் பயன்பெற உதவியது!

வற்றா அன்புச் சுனையாக
வாய்த்த நெஞ்சம் உடையவராம்;
உற்றா ரைப்போல் யாவரையும்
உளத்தில் கருதும் பண்பினராம்;
அற்றார் உள்ளார் யாரெனினும்
அணைத்துச் செல்லும் குணத்தினராம்;
நற்றாய் அவரின் புகழார்ந்த
நாமம் நிலைத்து வாழியவே!



# தாயுமானவர்

ஊதிவரும் காற்றும் உரசும் கடலலையும்
வேதவொலி எங்கும் விரிக்கும் மறைக்காட்டில்
ஈடின்றி வாழ்ந்துநிதம் ஈசன் பணிசெய்த
கேடிலி யப்பரெனும் கீர்த்திப் பெயராரின்
பண்பினையும் அன்பினையும் பார்த்து மிக மகிழ்ந்து
வெண்கொற்றக் குடைதாங்கி வீரக் கழல்தாங்கி,
நாடாண்ட நன்முத்துக் கிருஷ்ணநா யக்கரென்பார்
ஏடா யிரங்களிலே எழுதிக் கணக்குவைக்க,
பொன்னிமகள் எப்புறத்தும் பொன்னார் கதிர்பரப்பும்
நன்னகரம், பேரிறைவன் நற்றாயாய் வந்துதவி
செய்த திருநகரம் திரிசிர புரம்தன்னை
எய்தி இருக்கவென இயம்பி வருகவென,
மன்னன் விருப்பத்தை மறுக்க மனமின்றி
அண்ணல் சிராப்பள்ளி அடைந்து பணி புரிந்தார்.
மூத்த மகனவனை மூத்தவர்க்குத் தெத்தாக்கிச்
சேர்த்துவிட்ட காரணத்தால் தெய்வத் திருவடியைப்
பூசித்துத் தனக்குமொரு பூப்போல் மதலையினை
யாசித்து நின்றிருந்த நல்லார் அவர்க்கிறைவன்
கருணை விழிநோக்க, கவின்முழுதும் ஒன்றாகத்
திரண்டுவந்த தெனுமாறு செல்வ மகவொன்று
பிறந்து மகிழ்ச்சியினைப் பெரிதாய் வழங்கியது!
நிறைந்தவொரு நிம்மதியை நெஞ்சினுள்ளே சேர்த்ததது!
தாயுமான நல்லிறைவன் தண்ணருளால் பிறந்தமையால்
தாயுமா னவர்என்ற தங்கப் பெயரிட்டார்.
பொய்யாத செல்வமெனப் போற்றுமுயர் கல்வியினைத்
தெய்வத் திருமகனும் திகழ்வுடனே கற்றறியப்

பள்ளியிலே பெற்றதந்தை பரிவோடு சேர்த்துவிடத்
தெள்ளத் தெளிந்த கல்வி தேடிப் படித்தறிந்தான்.
வண்ணத் தமிழும், வடமொழியும், இறைநெறியை
எண்ணத்தில் தேக்கி இனிமைதரும் நூல்பலவும்,
பாவுக் கிலக்கணமாய்ப் பாரில் விளங்குகிற
மூவர் தமிழும், முற்றும் துறந்திருந்த
பட்டினத்தார் பாட்டும், பக்தர் அருணகிரி
கொட்டிவைத்த தீந்தமிழும், கோலத் தமிழ்த்தாய்க்கு
அணியாய் இலங்கிநம தகத்தை உருக்குகிற
மணிவா சகர்மொழியும் மாசறவே கற்றறிந்து
சிறுபிள்ளை என்றாலும் தெய்வத் திருவடியை
மறவாமல் எக்கணமும் மனத்தில் நிறைத்திருந்தான்.
"சந்ததமும் நின்கருணை சாற்றுவதல் லால்வேறு
சிந்தை அறியேனுன் சித்தம் பராபரமே!
தாகமறிந் தின்பநி ட்டை தாராயேல் ஆகெடுவேன்
தேகம் விழுந்திடினென் செய்வேன் பராபரமே!
பாராயோ என்னைமுகம் பார்த்தொருகால் என்கவலை
தீராயோ வாய்திறந்து, செப்பாய் பராபரமே!
என்போல் எளியவரும் எங்கெங்கும் பார்த்தாலும்
உன்போல் வலியவரும் உண்டோ பராபரமே!"
நேயமுடன் இறைபுகழை நெஞ்சுருகி நிதமிசைத்துத்
தாயுமா னாரிருக்க, தந்தைவீ டெய்திடவே
அவர்வகித்த பதவியினை அரசர்முத்து வீரப்பர்
இவர்க்கே வழங்கி இனியதுணை யாய்க்கொண்டார்.
தந்த பதவியினைத் தான்பெற்றுக் கொண்டாலும்
சிந்தை அதில்பற்றுச் சிறிதேனும் கொள்ளவில்லை
இவ்வுலக வாழ்க்கை என்றும்நிலை யாமையினால்
அவ்வுலக வாழ்க்கையினை அடைய முயன்றிருந்த
வள்ளல் அவருக்கு வாய்த்த பதவியினால்

எள்முனையும் இலாபமில்லை! இதயத்தில் சஞ்சலம் தான்!
"ஒடுங்காத உள்ளத்துள் உலகியலின் பால்ஆசை
அடங்காமல் எழுகிறதே! அகந்தை வளர்கிறதே!
பார்த்தபொருள் அத்தனையும் பற்றத் துடிதுடித்து,
சீர்த்தி தரும்தவத்தைச் செய்ய மிகமறுத்து
பொய்யன்றி வேறேதும் புகலக் கருதாமல்
வையத்தில் மற்றோர்க்கு வழிகாட்ட முயல்கிறதே!
குணங்கெட்டுப் போனேனே! குவலயத்தில் என்னைப்போல்
இனங்கெட்ட வேறெவரும் இருப்பாரோ? பேரிறைவா"
என்று மிகவருந்தி இறைவன் திருவடிக்கீழ்ச்
சென்று புகலடையச் சிந்தை விழைந்திருந்தார்.
அரசாங்க வேலையினை அழகொளிரச் செய்தாலும்
ஒருகுருவின் நல்வரவை உள்நாடி நின்றிருந்தார்.
எல்லையிலா ஞானத்தின் இருப்பிடமே இடம்பெயர்ந்து
தில்லைப் பதியினின்றும் சிராப்பள்ளி வந்ததுபோல்
மௌனகுரு தேசிகராய் மண்ணில் விளங்கிநின்ற
சிவயோகி தனைக்கண்டு திருப்பாதம் தனில் வீழ்ந்து
வணங்கிநின்ற தாயு மானவரை அப்பெரியார்
சுணங்காது நன்குணர்ந்து தூய "சிவ ஞானசித்தி
யார்" என்னும் உயர்நூலுள் அடங்கியுள உட்பொருளைக்
கூறி அறிவுறுத்திக் குறையா அருள்பொழிந்தார்.
இந்நிலையில் மன்னனவன் இவ்வுலகை நீத்தேகப்
பொன்னிவள நாடரசி பொறுப்பினிலே வந்தது காண்.
அரசி தாயுமானவரை அன்போ டருகழைத்துப்
பெருங்கணக்குப் பார்க்கவென விரும்பி மிகக்கேட்டாள்.
அரைமனத் தோடதனை அவர்ஏற்றுக் கொண்டு பணி
புரிந்திருந்த போதினிலே பொல்லாத அவ்வரசி
இவரழ கில்மயங்கி இச்சைக் கிணங்கென்ன,

தவறுசெய்ய எண்ணாத தாயுமானார் அன்றிரவே
திரிசிர புரம்நீங்கித் தென்திசைக்குச் சென்று விட்டார்.
அரசி மிகவுற்ற ஆத்திரத்தின் காரணமாய்
"நிசியெனினும் பகலெனினும் நீதேடிச் சென்றவரை
உன்திறனால் இங்கே உடனழைத்து வா" என்ன
அன்னோன் அவரிருந்த நல்லூர்ப் பதிக்குவந்து
மந்திரத்தை ஓதி மயக்க முயலுகையில்
அந்தக் கயவனைநம் அடிகள் விழியிரண்டால்
பார்த்தஒரு பார்வையிலே பாவி அவன்கலங்கி
வேர்த்து விறுவிறுத்து வீழ்ந்தான் பதமலரில்!
வண்ண மயிலாட, வானில் முகில்தவழ,
பண்ணைப் பயிர்வகைகள் பல்லா யிரம்தழைய
விளங்கும் திருப்பதியாம் விராலி மலைதன்னில்
களங்கமிலாச் சித்தர்கணம் கண்டு கலந்திருந்தார்.
பின்னர் கயிலையிலே பெரியநா யகிஅன்னை
பொன்னனைய கழல்களினைப் போற்றிப் புகழ்ந்திருந்தார்.
நீலக் கடல்நடுவே நிற்கும்ரா மேஸ்வரத்தில்
ஞாலம் புரந்திருக்கும் நல்ராம நாதரினைக்
கோலக் கரமெடுத்துக் கும்பிட்டு நின்றபடி
சாலச் சிறந்ததமிழ் சாற்றித் தனைமறந்தார்.
காணற் கரிய கடவுளினைக் கண்டுணர்ந்த
மாண்புடைய தாயு மானார்போல் யாருள்ளார்?

"குலமிலான் குணங் குறியிலான் குறைவிலான் கொடிதாம்
புலமிலான்றனக் கென்னவோர் பற்றிலான் பொருந்து
மலமிலான் மைந்தர் மனைவியிலா னெவனவன்சஞ்
சலமிலான் முத்திதரும் பரசிவனெனத் தகுமே"

இவ்வாறு கடவுளுக்கு எளிதான விளக்கத்தைச்
செவ்வையுறச் செப்பியவர் தாயுமானார் தானன்றோ!

"பார்க்கு மிடமெங்குமொரு நீக்கமற நிறைகின்ற பரிபூர ணாநந்தமே!
அண்ட பகிரண்டமு மடங்கவொரு நிறைவாகி ஆனந்த மானபர மே!
சர்வபரி பூரண அகண்ட தத்துவ மான சச்சிதா னந்த சிவமே!"

"ஆண்டவனா; யாரவன்? என் றார்ப்பரிக்கும் தன்மையர்க்கு
ஈண்டுள்ளங் கைநடுவில் இலங்குநெல்லிக் கனிபோல
விளக்கம் அளித்திட்ட வித்தகர் நம்சுவாமி!
துளக்கமுறு பாதையினைச் சொல்லியவர் நம்சுவாமி!
வான்மறையை உலகுக்கு வழங்கிநின்ற வள்ளுவர் போல்,
தேன்சிந்தும் வாசகத்தைத் தெளித்தமணி வாசகர்போல்,
சைவநெறி தழைப்பித்த சம்பந்தப் பிள்ளையார் போல்,
உய்வகையைக் காட்டிநின்ற ஒப்பறியா அப்பரைப்போல்,
இறைவனுக்கே தோழனென இலங்கிநின்ற சுந்தரர்போல்,
குறைவின்றி யோகநெறி கூறியநல் மூலரைப் போல்,
நேசத்தின் அடித்தளத்தில் நீளுலக மாந்தருய்யக்
காசி மடம்கண்ட குமரகுரு பரபரைப்போல்,
எல்லோரும் இன்புற் றிருக்க நினைத்த மகான்
சொல்லரிய தாயுமான சுவாமிகளே! ஐயமில்லை!
அண்ணலவர் சொன்னவழி அதைப்பற்றி நாம் நடந்தால்
வண்ணப் பொழிலாக வையம் மலராதோ?"



# கவியரசி செளந்தரா கைலாசம் அவர்களின் பிற நூல்கள்

1. செளந்தரா கைலாசம் கவிதைகள் (தொகுப்பு)
2. பாரதி (ஆய்வுச் சொற்பொழிவு)
3. மகாத்மா காந்தி (காந்தியைப் பற்றிய பேருரை)
4. எழுத்துக்கு வந்த ஏற்றம்
5. நியாயம் – சிறுகதைகளின் தொகுப்பு
6. அருள்மணம் (ஆன்மிகக் கட்டுரைகள்)
7. வள்ளுவர் வாக்கு
8. இறைவன் சோலை (கவிதைத் தொகுப்பு)
9. உள்ளத்தில் நிறைந்த உத்தமர்கள் (கவிதைத் தொகுப்பு)
10. உலகு உய்ய வந்த உத்தமர் (யோகி ராம்சுரத்குமார்)

## கவியரசி செளந்தரா கைலாசம்



செந்தமிழ் அறிந்தவர்க்கு
நன்கு தெரிந்த பெயர்!
சுந்தரக் கவுண்டர் காளியம்மாள்
பெற்றெடுத்த சுடர்க்கொடி!
உச்சநீதிமன்ற நீதிபதி
(அமரர்) உயர்திரு பா. ச. கைலாசத்தின்
ஒளிக்கரம் பற்றிய குலக்கொடி!
மனவயலில் விளைகின்ற
எண்ணப்பயிர்களை
இனிய கவிதைகளாக்கி
எழிலுறப் படைப்பவர்!
தெய்விகமும் தேசியமும்
இவருடைய இருகண்கள்!
குரல்வளைக்குள்
குயிலைக் கொண்டவர்!
தெளிக்கும் சொற்களில்
தேனைக் கலப்பவர்!
தமிழ் இவருக்கு உயிர்!
தமிழ்ப்பணி
இவர் செயல்!





